بسم الله الرحمن الرحيم

# صِيَامُ رَمَضَان

## فَضَائِلُهُ وَآدَابُهُ وَأَحْكَامُهُ

# ரஹ்மத்தான ரமழான்

## சிறப்புகள் | ஒழுக்கங்கள் | சட்டங்கள்


ஆசிரியர்:

**அஷ்ஷைகு, முனைவர் சயீது இப்னு அலி இப்னு வஹ்ஃப் அல்கஹ்தானி**

தமிழாக்கம்:

குர்ஆன், சுன்னாவின் பணியாளர்

**உமர் ஷரீஃப் இப்னு அப்துஸ் ஸலாம்**




## ABOUT THIS BOOK


| | |
|---|---|
| Name of the Book | : **RAHMATHANA RAMALAN** |
| Name in Arabic | : AS-SIYAM FIL ISLAM |
| Language | : Tamil |
| Author | : Saeed ibnu Ali ibnu wahab al kahthani |
| Translator | : Mufti A. Omar Sheriff Qasimi |
| Proof Readers | : O.M. Kaja Mohaideen Rabbani, A. Abdul Kader Rabbani, Mansur Ahmed Umari, Imamuddin Hasani, Saifuddin. |
| Layout | : Z. Abdul Bari Sadaqi |
| Date of Publication | : April 2018 |
| Edition | : 2nd April 2019 |
| Total Pages | : 140 |
| Copies | : 3000 |
| Printed by | : Patel Graphics, Chennai - 6 |

**Price : Rs. 80/-**

Published by:




DARUL HUDA

QUALITY ISLAMIC BOOK PUBLISHERS

# 211 (102), 1st Floor, Linghi Street, Mannady, Chennai-600001.

Phone : +91-44-25247866, | darulhuda.chennai@gmail.com

Mobile : +91-98401 74121 | www.darulhuda.net

DH-TML 2049

# பதிப்புரை

நிகரற்ற கருணையாளனும் எல்லையின்றி கருணைபுரிபவனுமாகிய
அல்லாஹ்வின் பெயரால்...

படைத்து பரிபாலித்து சர்வ வல்லமையுடன் ஆட்சி புரிகின்ற அல்லாஹ்விற்கே எல்லாப் புகழும்! ஸலவாத்தும் சலாமும் அல்லாஹ்வின் தூதர் மீதும் அவர்களுடைய குடும்பத்தார் மற்றும் தோழர்கள் மீதும் நிலவட்டும்.

இஸ்லாமிய மார்க்கத்தின் ஐந்து கடமைகள் பற்றி தெளிவான ஒரு நூலை வெளியிட வேண்டும் என்று நீண்ட காலமாக ஆசைப்பட்டு வந்தோம். அல்லாஹ் அந்த ஆசையில் சிலவற்றை இப்போது எளிதாக்கி தந்துள்ளான்.

கலிமா, தொழுகை, ஸகாத்து, நோன்பு, ஹஜ் ஆகிவற்றைப் பற்றி சில சுருக்கமான நூல்களை முன்னர் நாம் வெளியிட்டுள்ளோம்.

ஆனால், விரிவான ஒரு நூலின் அவசியம் இருப்பதை மறுக்க முடியாது.

அல்லாஹ்வின் அருளால் அந்த பணியின் தொடக்கமாக நோன்பு பற்றி ஒரு நூலை இப்போது வெளியிடுகின்றோம்.

கல்வியில் நன்கு தேர்ச்சிபெற்ற, பயனுள்ள பல நூல்களை எழுதி அனுபவமுள்ள அறிஞர் ஸயீது இப்னு வஹ்ஃப் அல்கஹ்த்தானி அவர்கள் நோன்பு பற்றி விரிவான ஒரு நூலை எழுதியுள்ளார்கள்.

அந்நூலின் பெயர்:

الصيام في الإسلام في ضوء الكتاب والسنة

அஸ்ஸியாமு ஃபில் இஸ்லாம் ஃபீ ழவ் இல் கிதாபி, வஸ்ஸுன்னா

பொருள்: இஸ்லாமிய மார்க்கத்தில் குர்ஆன், சுன்னா வெளிச்சத்தில் நோன்பு





அந்த நூலில் இருந்து மிக முக்கியமான தலைப்புகளை தேர்வு செய்து, அவற்றை தமிழில் மொழிபெயர்த்தோம். அதற்கு **“ரஹ்மத்தான ரமழான்”** என்று பெயரிட்டு ஒரு நூலாக வெளியிடுகிறோம்.

தர்பியா வகுப்புகளுக்கும் கல்வி கற்பவர்களுக்கும் உதவியாக இருக்க வேண்டும் என்பதற்காக குர்ஆன் வசனங்கள், மற்றும் நபிமொழிகள் அரபி மூலத்தில் கொடுக்கப்பட்டுள்ளன.

அல்லாஹ், இந்த நூலை அங்கீகரிக்க வேண்டும்; இந்நூல் மூலமாக அதிகமான மக்களுக்கு பலன்கிடைக்க வேண்டும் என்று வேண்டியவர்களாகவும், அவனுடைய மார்க்கப் பணி செய்வதற்கு அவனுடைய அருளை பிராத்தித்தவர்களாகவும் இந்நூலை உங்கள் முன் சமர்ப்பிக்கின்றோம்.

இந்நூலை வாசிப்பவர்கள் இந்நூல் பற்றி கருத்து ஏதும் தெரிவிக்க விரும்பினால் அல்லது இந்நூலில் பிழைகள் ஏதும் இருந்து அவற்றை சுட்டிக்காட்ட நாடினால் எவ்வித தயக்கமும் இன்றி எங்களை தொடர்பு கொள்ளவும். நாங்கள் அதற்கு உங்களுக்கு நன்றி உள்ளவர்களாக இருப்போம்.

அல்லாஹ்வே! தாருல் ஹுதாவில் பணிபுரிகின்ற எங்களுக்கும் உனது மார்க்கப் பணி செய்கின்ற எல்லோருக்கும் உனது மார்க்கப் பணிகளுக்கு உதவுகின்ற அனைவருக்கும் உனது ரஹ்மத்துகளையும் பரக்கத்துகளையும் என்றும் அருள்வாயாக! ஆமீன்!

அல்லாஹ்வே! எங்களை மன்னிப்பாயாக! எங்களிடமிருந்து ஏற்றுக் கொள்வாயாக! நிச்சயமாக நீதான் மகா மன்னிப்பாளன், எல்லையின்றி கருணைபுரிபவன்!

*உமர் ஷரீஃப் இப்னு அப்துஸ் ஸலாம்*

*18.07.1439 - 4.4.2018*





# “தாருல் ஹுதா”
## ஓர் அறிமுகம்

எல்லாப் புகழும் அகிலங்களின் இறைவன் அல்லாஹ் ஒருவனுக்கே! இறையருளும் ஈடேற்றமும் நபி முஹம்மது (ஸல்) அவர்களுக்கும், அவர்களது குடும்பத்தார், தோழர்கள், அவர்களைப் பின்பற்றும் அனைவருக்கும் உண்டாகட்டும்!

இஸ்லாமியச் சகோதர சகோதரிகளே!

அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மதுல்லாஹி வபரகாத்துஹு

தாருல் ஹுதாவை அறிமுகம் செய்வதன் வாயிலாக உங்களைச் சந்திப்பதில் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறோம். இதில் தாருல் ஹுதாவின் நோக்கத்தையும் அதன் பணிகளையும் விவரிப்பதுடன் அதன் இன்றைய தேவையையும் தங்கள் முன் வைக்கிறோம்.

அல்லாஹு தஆலா கூறுகிறான்:

*“நம்பிக்கை கொண்ட ஆண்களும், நம்பிக்கை கொண்ட பெண்களும் (தங்களுக்குள்) ஒருவருக்கொருவர் உற்ற துணைவர்களாவர். அவர்கள், (ஒருவர் மற்றவரை) நன்மை செய்யும்படித் தூண்டியும், பாவம் செய்யாது தடுத்தும், தொழுகையைக் கடைப்பிடித்து, ஸகாத்து கொடுத்தும் வருவார்கள். அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் கட்டுப்பட்டு நடப்பார்கள். இத்தகையவர்களுக்கு அதிசீக்கிரத்தில் அல்லாஹ் அருள்புரிவான். நிச்சயமாக, அல்லாஹ் மிகைத்தவனாகவும், ஞானமுடையவனாகவும் இருக்கின்றான்.” (அத்தவ்பா 9 : 71)*

*(நம்பிக்கையாளர்களே!) உங்களில் ஒரு கூட்டத்தார் (மனிதர்களை) சிறந்ததின் பக்கம் அழைத்து நன்மையைச் செய்யும்படி ஏவி, பாவமான காரியங்களிலிருந்து அவர்களை விலக்கிக் கொண்டும் இருக்கட்டும். இத்தகையவர்கள்தாம் வெற்றி பெற்றவர்கள். (ஆலுஇம்ரான் 3 : 104)*

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: உங்களில் யாராவது ஒரு தவறைக் கண்டால் அதைத் தமது கரத்தால் மாற்றட்டும். அது இயலாவிட்டால் தமது நாவால் மாற்றட்டும். அதுவும் இயலாவிட்டால் உள்ளத்தால் (வெறுத்து விலகி விடட்டும்). இது ஈமானின் (நம்பிக்கையின்) குறைந்தபட்ச அளவாகும். (ஸஹீஹ் முஸ்லிம்)



மேலும் கூறினார்கள்: நம்பிக்கையாளர்கள் தங்களிடையே நேசம் கொள்வதற்கும், கருணை காட்டுவதற்கும், அன்பு செலுத்துவதற்கும் உதாரணம் ஓர் உடலைப் போல. உடலில் ஏதேனும் ஓர் உறுப்பு பாதிக்கப்பட்டால் அனைத்து உறுப்புகளும் காய்ச்சல் மற்றும் தூக்கமின்மையால் முறையிடுகின்றன. (ஸஹீஹுல் புகாரி)

இன்று நமது சமுதாயத்தில் சிறியோர் முதல் பெரியோர் வரை பெரும் பாலோர் சரியான மார்க்க ஞானத்திற்கும் முறையான வழிகாட்டலுக்கும் அதிகம் தேவையுள்ளவர்களாக இருப்பதைப் பார்க்கிறோம். ஆகவே, மேற்கூறப்பட்ட இறை வசனங்கள் மற்றும் நபிமொழிகளுக்கிணங்க சமுதாயச் சீர்திருத்தப் பணியில் ஈடுபடுவது மார்க்கக் கடமை என்பதை உணர்ந்து, அல்குர்ஆன் மற்றும் நபிவழியின் அடிப்படையில் அந்த உயர்ந்த பணியை நிறைவேற்றி இறை திருப்தியை அடைய வேண்டும் என்ற தூய எண்ணத்தில் தொடங்கப்பட்டதுதான் **தாருல் ஹுதா**

## தாருல் ஹுதாவின் பணிகளும் தொண்டுகளும்

### அழைத்தல்:

இதுவே இஸ்லாமின் அடிப்படையாகும். உலகில் இப்பணி இறைத்தூதர்கள் வாயிலாக நிலைநிறுத்தப்பட்டது. இறுதி இறைத்தூதர் முஹம்மது (ஸல்) அவர்களுக்குப் பின் அவர்களுடைய சமுதாயத்தினர் அனைவரின் மீதும் இப்பணி கடமையாக்கப்பட்டது. மேன்மைமிகு குர்ஆனும், சிறப்புமிகு நபிமொழியும் இதன் அவசியத்தை வலியுறுத்துகின்றன. எனவே, இயன்ற அளவு அனைத்து வழிகளிலும் மனித சமுதாயத்திற்கு இஸ்லாமை அறிமுகப்படுத்துவதும் அதன் உயர்வுகளை விளக்கிச் சொல்லி அதன் பக்கம் அழைப்பதும் **தாருல் ஹுதா**வின் முதல் பணியாகும்.

### கற்பித்தல்:

இஸ்லாமை அறிய விரும்பும் சிறுவர்கள், வாலிபர்கள், முதியவர்கள், ஆண்கள், பெண்கள் என அனைவருக்கும் மேன்மைமிகு குர்ஆன், சிறப்புமிகு நபிமொழிகளை அவரவர் தகுதிக்கேற்ப கற்றுத் தருவது **தாருல் ஹுதா**வின் இரண்டாவது பணியாகும்.





**நூல் வெளியிடுதல்:**

மேன்மைமிகு குர்ஆன், சிறப்புமிகு நபிமொழி இரண்டையும் அடிப்படையாகக் கொண்டு சமுதாயப் பேரறிஞர்களால் அரபி மொழியில் எழுதப்பட்ட நூல்களைத் தமிழிலும் ஏனைய உலக மொழிகளிலும் மொழியாக்கம் செய்து, அந்நூல்களைச் சலுகை விலையில் மக்களுக்கு வழங்குவது **தாருல் ஹுதா**வின் மூன்றாவது பணியாகும்.

**உதவுதல்:**

அல்லாஹுதஆலாவே அனைவரின் தேவைகள், துன்பங்கள் அனைத்தையும் நிவர்த்தி செய்பவன். மிகப் பெரிய வள்ளலாகிய அல்லாஹ் தன் சார்பாக உலகில் ஏழை, எளியோர், நலிந்தோர் ஆகியோரின் துயர் துடைக்கும் வள்ளல் பெருமக்களுக்கு பெரும் வெகுமதிகளை ஈருலகிலும் வழங்குவதாக வாக்களித்துள்ளான். பிறர் துன்பங்களில் பங்கெடுப்பது, பிறர் தேவைகளை நிறைவேற்ற இயன்ற வரை உதவுவது முஸ்லிம்களுடைய அடிப்படைப் பண்புகளாகும்.

இந்த உன்னத பணிக்காக பைத்துல்மால் (பொது நிதி) ஏற்பாடு செய்து இரக்கச் சிந்தனையும், மார்க்கப்பற்றும் கொண்ட வள்ளல் பெருமக்களிடமிருந்து கடமையான, உபரியான தர்மங்களைப் பெற்று அவற்றை தேவையுடையவர்களுக்கு வழங்குதல் **தாருல் ஹுதா**வின் நான்காவது பணியாகும்.

இந்தப் பணிகள் மட்டுமின்றி, இஸ்லாம் முழுமையாக ஒவ்வொருவரின் வாழ்விலும் வரவேண்டும் என்பதற்காகவும், மனித சமுதாயங்களுக்குள் நல்லுறவும், அன்பும், கருணையும், சமூகப் புரிந்துணர்வும் ஏற்பட வேண்டும் என்பதற்காகவும் இயன்றவரை அல்லாஹ்வுக்காகத் தொண்டாற்ற வேண்டும் என்பது **தாருல் ஹுதா**வின் குறிக்கோளாகும்.

இப்பணிகள் அனைத்தும் தொய்வின்றி தொடர்ந்து சிறப்பாக, திறம்பட நடைபெறவும், அவற்றை அல்லாஹ் அங்கீகரிக்கவும், தாங்கள் துஆ செய்யும்படி அன்புடன் கேட்டுக் கொள்வதுடன், தங்களால் இயன்றவரை இப்பணிகளில் பங்குபெறுமாறும் அழைக்கிறோம்.





உங்களால் முடிந்த அளவு பங்குகொண்டு ஈருலக நற்பேறுகளை அடைந்து கொள்ளுங்கள்! மார்க்கத்திற்காகக் கொடுக்கப்படும் தர்மங்களுக்குச் சிறப்புகளும் நன்மைகளும் ஏராளம் உள்ளன என்பது உங்களுக்குத் தெரிந்ததே!

முடிந்த உதவிகளை மறுமையின் வீட்டை நாடி, அல்லாஹ்வின் பொருத்தத்திற்காக தந்துதவுங்கள்.

"நீங்கள் உங்கள் ஆன்மாக்களுக்காக நன்மையில் எதை முற்படுத்திக் கொள்கிறீர்களோ, அதைத்தான் அல்லாஹ்விடத்தில் மிகச் சிறந்ததாகவும், மகத்தான கூலியாகவும் பெற்றுக் கொள்வீர்கள்." (அல்முஸ்ஸம்மில் 73 : 20)

பேராற்றலுடைய அல்லாஹ் இந்த நல்ல திட்டங்களை நிறைவேற்றித்தர போதுமானவன்! அவனிடமே உதவி தேடுகிறோம்! அவனையே முன்னோக்கி நிற்கிறோம்!

---------





# பொருளடக்கம்


ரமழான் மாதத்தின் சிறப்புகள் .......... 10

ரமழான் நோன்பின் சட்டம் .......... 17

நோன்பு எப்போது கடமையாக்கப்பட்டது? .......... 21

நோன்பு கடமையாக்கப்பட்ட விதங்கள் .......... 21

ரமழான் மாதம் ஆரம்பிப்பதையும் முடிவதையும் உறுதி செய்வது .......... 26

சாட்சியின் அடிப்படையில் நோன்பைமுடிவு செய்வது .......... 29

முதல் பிறையைப் பார்த்தவர் என்ன செய்ய வேண்டும்? .......... 33

நோன்பின் வகைகள் .......... 35

நோன்பின் நிபந்தனைகள் .......... 40

நோன்பின் ருக்னுகள் .......... 48

நோன்பை விடுவதற்குரிய காரணங்கள் .......... 52

பயணத்தில் நோன்பு வைப்பது .......... 71

பயணி நோன்பு வைப்பதின் சட்டம் .......... 76

நோன்பை முறிக்கக்கூடிய செயல்கள் .......... 81

நோன்பை முறிக்கின்ற செயல்களின் நிபந்தனைகள் .......... 101

நோன்பில் தடுக்கப்பட்ட செயல்கள் .......... 107

நோன்பில் விரும்பத்தகுந்த ஒழுக்கங்கள் .......... 111

நோன்பில் வெறுக்கப்பட்ட காரியங்கள் .......... 123

நோன்பில் ஆகுமாக்கப்பட்டவை .......... 126

ஸகாத்துல் ஃபித்ர் .......... 131

மூலநூலாசிரியர் குறிப்பு .......... 134




பேரருளாளன் பேரன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்..

அல்லாஹ்விற்கே எல்லாப் புகழும்! அல்லாஹ்வின் தூதர்மீதும் அவர்களுடைய குடும்பத்தார், மற்றும் தோழர்கள் அனைவர்மீதும் இறையருளும் ஈடேற்றமும் நிலவட்டும்!

## ரமழான் மாதத்தின் சிறப்புகள்

1) அல்லாஹு தஆலா இந்த மாதத்தில்தான் அல்குர்ஆனை இறக்கினான்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

شَهْرُ رَمَضَانَ الَّذِيَ أُنزِلَ فِيهِ الْقُرْآنُ هُدًى لِّلنَّاسِ وَبَيِّنَاتٍ مِّنَ الْهُدَى وَالْفُرْقَانِ

பொருள்: ரமழான் மாதம் எத்தகைய (மகத்துவமுடைய)தென்றால் அதில்தான் மனிதர்களுக்கு நேர்வழி காட்டும் திருக்குர்ஆன் (என்னும் வேதம்) இறக்கப்பட்டது. அது (நன்மை, தீமையைப்) பிரித்தறிவித்து நேரான வழியைத் தெளிவாக்கக்கூடிய வசனங்களை உடையதாகவும் இருக்கிறது. (அல்குர்ஆன் 2:185)

ரமழான் மாதத்தில் இறுதி பத்து நாட்களில் லைலத்துல் கத்ர் என்ற இரவில் அல்குர்ஆன் இறங்கியது.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

إِنَّا أَنزَلْنَاهُ فِي لَيْلَةِ الْقَدْرِ





பொருள்: நிச்சயமாக நாம் இந்தக் குர்ஆனை (மிக்க கண்ணியமுள்ள) லைலத்துல் கத்ர் என்னும் ஓர் இரவில் (முதலாவதாக) இறக்கி வைத்தோம். (அல்குர்ஆன் 97:1)

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

إِنَّا أَنزَلْنَاهُ فِي لَيْلَةٍ مُّبَارَكَةٍ إِنَّا كُنَّا مُنذِرِينَ

பொருள்: நிச்சயமாக இதனை மிக்க பாக்கியமுள்ள ('லைலத்துல் கத்ரு' என்ற) ஓர் இரவில் (முதல் முறையாக) இறக்கி வைத்து, நிச்சயமாக நாம் (இதன் மூலம்) அச்சமூட்டி எச்சரிக்கை செய்கின்றோம். (அல்குர்ஆன் 44:3)

2) இந்த மாதத்தில்தான் முந்திய வேதங்களும் இறக்கப்பட்டன.

ஆதாரம்:

**عَنْ وَاثِلَةَ بْنِ الْأَسْقَعِ ﷺ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ أُنْزِلَتْ صُحُفُ إِبْرَاهِيمَ عَلَيْهِ السَّلَام فِي أَوَّلِ لَيْلَةٍ مِنْ رَمَضَانَ وَأُنْزِلَتْ التَّوْرَاةُ لِسِتٍّ مَضَيْنَ مِنْ رَمَضَانَ وَالْإِنْجِيلُ لِثَلَاثَ عَشْرَةَ خَلَتْ مِنْ رَمَضَانَ وَأُنْزِلَ الْفُرْقَانُ لِأَرْبَعٍ وَعِشْرِينَ خَلَتْ مِنْ رَمَضَانَ رَوَاهُ أَحْمَدُ بِرَقْمِ ١٦٣٧٠**

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: இப்ராஹீம் அலைஹிஸ் ஸலாம் அவர்களின் ஏடுகள் ரமழானுடைய முதல் இரவில் இறக்கப்பட்டன. ரமழானுடைய ஆறாவது இரவு முடிந்த பின்னர் தவ்றாத் இறக்கப்பட்டது. ரமழானுடைய பதிமூன்றாவது இரவு முடிந்த பின்னர் இன்ஜீல் இறக்கப்பட்டது. ரமழானுடைய இருபத்தி நான்காவது இரவு முடிந்த பின்னர் அல்ஃபுர்கான் (-அல்குர்ஆன்) இறக்கப்பட்டது.[1]

3) இந்த மாதத்தில் சொர்க்கத்தின் வாசல்கள் திறக்கப்படுகின்றன.

4) இந்த மாதத்தில் நரகத்தின் வாசல்கள் மூடப்படுகின்றன.

1, அறிவிப்பாளர்: வாசிலா இப்னு அஸ்கஃ ؓ, நூல்: முஸ்னது அஹ்மது 16370.





5) ஷைத்தான்களும் ஜின்களில் உள்ள வரம்பு மீறிகளும் இந்த மாதத்தில் விலங்கிடப்படுகின்றன.

6) (அல்லாஹ்வின்) கருணையின் வாசல்கள் இந்த மாதத்தில் திறக்கப்படுகின்றன.

7) வானத்தின் கதவுகள் இந்த மாதத்தில் திறக்கப்படுகின்றன.

8) நன்மையை நாடுபவனே, முன்னேறு! தீமையை நாடுபவனே! நிறுத்திக்கொள்! என்று ஓர் அழைப்பாளர் இந்த மாதத்தில் அழைக்கின்றார்.

9) இந்த மாதத்தில் ஒவ்வோர் இரவிலும் நரகத்திலிருந்து விடுதலை செய்யப்படுபவர்கள் இருக்கின்றார்கள்.

மூன்றிலிருந்து ஒன்பது வரை கூறப்பட்ட ஏழு சிறப்புகள் பின்வரும் நபி மொழிகளில் இருந்து அறியப்படுகின்றன.

عَنْ أَبِي هُرَيْرَة ﷺ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ إِذَا كَانَ أَوَّلُ لَيْلَةٍ مِنْ شَهْرِ رَمَضَانَ صُفِّدَتْ الشَّيَاطِينُ وَمَرَدَةُ الْجِنِّ وَغُلِّقَتْ أَبْوَابُ النَّارِ فَلَمْ يُفْتَحْ مِنْهَا بَابٌ وَفُتِّحَتْ أَبْوَابُ الْجَنَّةِ فَلَمْ يُغْلَقْ مِنْهَا بَابٌ وَيُنَادِي مُنَادٍ يَا بَاغِيَ الْخَيْرِ أَقْبِلْ وَيَا بَاغِيَ الشَّرِّ أَقْصِرْ وَلِلَّهِ عُتَقَاءُ مِنْ النَّارِ وَذٰلِكَ كُلَّ لَيْلَةٍ رَوَاهُ التِّرْمِذِيُّ بِرَقْمِ ٦١٨

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: ரமழான் மாதத்தின் முதல் இரவாகி விட்டால் ஷைத்தான்களும் ஜின்களில் உள்ள வரம்பு மீறிகளும் விலங்கிடப்படுகின்றார்கள். நரகத்தின் வாசல்கள் அடைக்கப்படுகின்றன. அதில் எந்த ஒரு வாசலும் திறக்கப்படுவது இல்லை. சொர்க்கத்தின் வாசல்கள் திறக்கப்படுகின்றன. அவற்றில் எந்த ஒரு வாசலும் அடைக்கப்படுவதில்லை. நன்மையை நாடுபவனே! முன்னேறு! தீமையை நாடுபவனே! நிறுத்திக்கொள்! என்று ஓர் அழைப்பாளர் இந்த மாதத்தில் அழைக்கின்றார். இந்த மாதத்தில் ஒவ்வோர் இரவிலும் அல்லாஹ்வின் அருளினால் நரகத்திலிருந்து விடுதலை பெறுபவர்கள் இருக்கின்றார்கள்.[1]

1. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﷺ, நூல்: ஜாமிவுத் திர்மிதி 618.





10) இந்த ரமழான் மாதத்தில் ஓர் இரவு இருக்கின்றது. அது ஆயிரம் மாதங்களை விட மிகச் சிறந்தது.

ஆதாரம்:

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ أَتَاكُمْ رَمَضَانُ شَهْرٌ مُبَارَكٌ فَرَضَ اللهُ عَزَّ وَجَلَّ عَلَيْكُمْ صِيَامَهُ تُفْتَحُ فِيهِ أَبْوَابُ السَّمَاءِ وَتُغْلَقُ فِيهِ أَبْوَابُ الْجَحِيمِ وَتُغَلُّ فِيهِ مَرَدَةُ الشَّيَاطِينِ لِلّٰهِ فِيهِ لَيْلَةٌ خَيْرٌ مِنْ أَلْفِ شَهْرٍ مَنْ حُرِمَ خَيْرَهَا فَقَدْ حُرِمَ رَوَاهُ النَّسَائِيُّ بِرَقْمِ ٢٠٧٩**

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: உங்களிடம் ரமழான் மாதம் வந்துள்ளது. அது (அல்லாஹ்வின் புறத்திலிருந்து) பரகத் (-அபிவிருத்தி) செய்யப்பட்டதாகும். அதில் நோன்பிருப்பதை உங்கள் மீது அல்லாஹ் கடமையாக்கி இருக்கின்றான். அதில் வானத்தின் வாசல்கள் திறக்கப்படுகின்றன. அதில் நரகத்தின் வாசல்கள் அடைக்கப்படுகின்றன. அதில் ஷைத்தான்களில் உள்ள வரம்பு மீறிகள் விலங்கிடப்படுகின்றன. ஆயிரம் மாதங்களை விட சிறந்த ஓர் இரவு அதில் இருக்கின்றது. யார் அதன் நன்மையை இழப்பாரோ அவர் (எல்லா நன்மைகளையும்) இழந்து விடுவார்.[1]

**وَعَنْ أَنَسِ بْنِ مَالِكٍ ﵁ قَالَ دَخَلَ رَمَضَانُ فَقَالَ رَسُولُ اللهِ ﷺ إِنَّ هٰذَا الشَّهْرَ قَدْ حَضَرَكُمْ وَفِيهِ لَيْلَةٌ خَيْرٌ مِنْ أَلْفِ شَهْرٍ مَنْ حُرِمَهَا فَقَدْ حُرِمَ الْخَيْرَ كُلَّهُ وَلَا يُحْرَمُ خَيْرَهَا إِلَّا مَحْرُومٌ رَوَاهُ ابْنُ مَاجَةَ بِرَقْمِ ١٦٣٤**

ரமழான் வந்தது. அப்போது ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: நிச்சயமாக இந்த மாதம் உங்களிடம் வந்துவிட்டது. அதில் ஆயிரம் மாதங்களை விட மிகச் சிறந்த ஓர் இரவு இருக்கின்றது. யார் அதை இழந்து விடுவாரோ அவர் நன்மைகள் எல்லாவற்றையும் இழந்து

1. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: சுனன் நசாயி 2079.





விடுவார். சிறிதும் நன்மையற்றவரைத் தவிர வேறு யாரும் அதன் நன்மையை இழக்க மாட்டார்கள்.[1]

### 11) ரமழான் மாதம் பொறுமையின் மாதமாகும்.

ஆதாரம்:

رُوِيَ عَنْ رَجُلٍ مِنْ بَنِي تَمِيمٍ قَالَ كُنَّا عِنْدَ بَابِ مُعَاوِيَةَ بْنِ أَبِي سُفْيَانَ ﵁ وَفِينَا أَبُو ذَرٍّ ﵁ قَالَ سَمِعْتُ رَسُولَ اللهِ ﷺ يَقُولُ صَوْمُ شَهْرِ الصَّبْرِ وَثَلَاثَةِ أَيَّامٍ مِنْ كُلِّ شَهْرٍ صَوْمُ الدَّهْرِ وَيُذْهِبُ مَغَلَةَ الصَّدْرِ قَالَ قُلْتُ وَمَا مَغَلَةُ الصَّدْرِ قَالَ رِجْسُ الشَّيْطَانِ رَوَاهُ أَحْمَدُ بِرَقْمِ ٢٠٤٠٢

பனூ தமீம் குடும்பத்தைச் சேர்ந்த ஒருவர் அறிவிக்கின்றார்: நாங்கள் முஆவியா இப்னு அபூ ஸுஃப்யான் ﵁ உடைய வாசலுக்கு அருகில் இருந்தோம். எங்களில் அபூ தர் ﵁ அவர்களும் இருந்தார்கள். அவர்கள் கூறினார்கள்: பொறுமையின் மாதத்தில் நோன்பிருப்பது, ஒவ்வொரு மாதத்திலும் மூன்று நாட்கள் நோன்பிருப்பது, காலமெல்லாம் நோன்பிருப்பதாகும். இவை நெஞ்சத்தின் **مَغَلَةُ** வை போக்கி விடுகின்றன என்று ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறியதை நான் செவியுற்றேன். நான் கேட்டேன், நெஞ்சத்தின் **مَغَلَةُ** என்றால் என்ன? என்று. அவர்கள் கூறினார்கள்: ஷைத்தானின் அசுத்தம் என்று.[2]

### 12) ரமழான் மாதத்தில் நோன்பிருப்பது பாவங்களை போக்கி விடுகின்றது.

ஆதாரம்:

عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ أَنَّ رَسُولَ اللهِ ﷺ كَانَ يَقُولُ الصَّلَوَاتُ الْخَمْسُ وَالْجُمْعَةُ إِلَى الْجُمْعَةِ وَرَمَضَانُ إِلَى رَمَضَانَ مُكَفِّرَاتٌ مَا بَيْنَهُنَّ إِذَا اجْتَنَبَ الْكَبَائِرَ رَوَاهُ مُسْلِمٌ بِرَقْمِ ٣٤٤

1. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ﵁, நூல்: சுனன் இப்னு மாஜா 1634.
2. அறிவிப்பாளர்: அபூ தர் ﵁, நூல்: முஸ்னது அஹ்மது, 20402.





ஐந்து நேரத் தொழுகைகள், ஜுமுஆ தொழுகை (அடுத்த) ஜுமுஆ தொழுகை வரை, ரமழான் (அடுத்த) ரமழான் வரை, இவை இவற்றுக்கு மத்தியில் உள்ளவற்றை (-பாவங்களை) போக்கி விடுகின்றன, பெரும் பாவங்களைவிட்டு அவர் விலகிக்கொண்டால், என்று ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்.[1]

## 13) ரமழான் மாதத்தில் நோன்பிருப்பது பாவங்கள் மன்னிக்கப்படுவதற்குரிய காரணமாகும்.

ஆதாரம்:

**عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللهُ عَنْهُ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ مَنْ صَامَ رَمَضَانَ إِيمَانًا وَاحْتِسَابًا غُفِرَ لَهُ مَا تَقَدَّمَ مِنْ ذَنْبِهِ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ٣٧**

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: யார் ரமழானில் இறைநம்பிக்கையுடனும் நன்மையின் ஆதரவுடனும் நோன்பிருப்பாரோ அவரின் முந்திய பாவங்கள் அவருக்கு மன்னிக்கப்பட்டு விடும்.[2]

**وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللهِ ﷺ رَقِيَ الْمِنْبَرَ، فَقَالَ آمِينَ، آمِينَ، آمِينَ. فَقِيلَ لَهُ يَا رَسُولَ اللهِ! مَا كُنْتَ تَصْنَعُ هٰذَا؟! فَقَالَ قَالَ لِي جِبْرِيلُ أَرْغَمَ اللهُ أَنْفَ عَبْدٍ أَوْ بَعُدَ دَخَلَ رَمَضَانَ فَلَمْ يُغْفَرْ لَهُ، فَقُلْتُ آمِينَ. ثُمَّ قَالَ رَغِمَ أَنْفُ عَبْدٍ أَوْ بَعُدَ أَدْرَكَ وَالِدَيْهِ أَوْ أَحَدَهُمَا لَمْ يُدْخِلْهُ الْجَنَّةَ فَقُلْتُ آمِينَ. ثُمَّ قَالَ رَغِمَ أَنْفُ عَبْدٍ أَوْ بَعُدَ ذُكِرْتَ عِنْدَهُ فَلَمْ يُصَلِّ عَلَيْكَ. فَقُلْتُ آمِينَ. رَوَاهُ ابْنُ خُزَيْمَةَ بِرَقْمِ ١٨٨٨**

ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் மின்பரில் ஏறினார்கள். அப்போது ஆமீன், ஆமீன், ஆமீன், என்று கூறினார்கள். அவர்களிடம் கேட்கப்பட்டது, "அல்லாஹ்வின் தூதரே! இதை செய்பவராக (இதற்கு முன்னர்)

1. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா رضي الله عنه, நூல்: ஸஹீஹ் முஸ்லிம் 344.
2. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா رضي الله عنه, நூல்: ஸஹீஹுல் புகாரி 37.





நீங்கள் இருக்கவில்லையே!" நபி ﷺ கூறினார்கள்: "ரமழான் வந்தும் பாவமன்னிப்பு பெறாதவர் நாசமாகட்டும் என்று ஜிப்ரீல் கூறினார். நான் ஆமீன் என்றேன். பிறகு, "தனது தாய் தந்தை இருவரையோ அல்லது அவர்களில் ஒருவரையோ அடையப் பெற்ற பின்னரும் அந்த வாய்ப்பு அவரை சொர்க்கத்தில் நுழைக்கவில்லையோ அவர் நாசமாகட்டும்" என்று அவர் கூறினார். நான் ஆமீன் என்றேன். பிறகு, "நீங்கள் அவரிடம் நினைவு கூறப்பட்டும் உங்கள் மீது சலவாத்து சொல்லாதவர் நாசமாகட்டும்" என்று அவர் கூறினார். நான் ஆமீன் என்றேன்.[1]

---------

1. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﷺ, நூல்: ஸஹீஹ் இப்னு குஸைமா 1888.





# ரமழான்
# நோன்பின் சட்டம்

குர்ஆன், நபிமொழி, மற்றும் ஏகோபித்த முடிவின்படி ரமழான் மாதத்தில் நோன்பிருப்பது 'ஃபர்ழ்' கட்டாய கடமையாகும். வயதுவந்த, புத்தியுடைய, உடல் வலிமையுள்ள, உள்ளூரில் இருக்கின்ற, தடைகள் நீங்கியவராக இருக்கின்ற எல்லா முஸ்லிம்கள் மீதும் ரமழான் மாத நோன்பு கட்டாயமாகும்.

குர்ஆனிலிருந்து ஆதாரம்:

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُواْ كُتِبَ عَلَيْكُمُ الصِّيَامُ كَمَا كُتِبَ عَلَى الَّذِينَ
مِن قَبْلِكُمْ لَعَلَّكُمْ تَتَّقُونَ

நம்பிக்கையாளர்களே! உங்களுக்கு முன்னுள்ளவர்கள் மீது நோன்பு கடமையாக்கப்பட்டிருந்தது போல் உங்கள் மீதும் நோன்பு கடமையாக்கப்பட்டுள்ளது. (அதனால்) நீங்கள் இறையச்சமுடையவர்களாக ஆகுவீர்கள். (அல்குர்ஆன் 2:183)

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

شَهْرُ رَمَضَانَ الَّذِيَ أُنزِلَ فِيهِ الْقُرْآنُ هُدًى لِّلنَّاسِ وَبَيِّنَاتٍ مِّنَ الْهُدَى
وَالْفُرْقَانِ فَمَن شَهِدَ مِنكُمُ الشَّهْرَ فَلْيَصُمْهُ

ரமழான் மாதம் எத்தகைய (மகத்துவமுடைய)தென்றால் அதில்தான் மனிதர்களுக்கு நேர்வழி காட்டும் திரு குர்ஆன் (என்னும் வேதம்) இறக்கப்பட்டது. அது (நன்மை, தீமையைப்) பிரித்தறிவித்து, நேரான





வழியைத் தெளிவாக்கக்கூடிய வசனங்களை உடையதாகவும் இருக்கிறது. ஆகவே, உங்களில் எவர் அம்மாதத்தை அடைகிறாரோ அவர் அதில் நோன்பு நோற்கவும். (அல்குர்ஆன் 2:185)

நபிமொழியிலிருந்து ஆதாரம்:

**عَنِ ابْنِ عُمَرَ ﵄ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ بُنِيَ الْإِسْلَامُ عَلَى خَمْسٍ شَهَادَةِ أَنْ لَا إِلٰهَ إِلَّا اللّٰهُ وَأَنَّ مُحَمَّدًا رَسُولُ اللهِ وَإِقَامِ الصَّلَاةِ وَإِيتَاءِ الزَّكَاةِ وَالْحَجِّ وَصَوْمِ رَمَضَانَ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ٧**

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: இஸ்லாம் ஐந்தின் மீது அமைக்கப் பட்டுள்ளது. 1) நிச்சயமாக வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை, நிச்சயமாக முஹம்மது அல்லாஹ்வுடைய தூதர் ஆவார்கள் என்று சாட்சி கூறுவது, 2) தொழுகையை நிலை நிறுத்துவது, 3) ஜகாத்தை கொடுப்பது, 4) ஹஜ் செய்வது, 5) ரமழானில் நோன்பிருப்பது.[1]

**وعَنْ طَلْحَةَ بْنَ عُبَيْدِ اللهِ ﵁ قَالَ جَاءَ رَجُلٌ إِلَى رَسُولِ اللهِ ﷺ مِنْ أَهْلِ نَجْدٍ ثَائِرَ الرَّأْسِ يُسْمَعُ دَوِيُّ صَوْتِهِ وَلَا يُفْقَهُ مَا يَقُولُ حَتّٰى دَنَا فَإِذَا هُوَ يَسْأَلُ عَنِ الْإِسْلَامِ فَقَالَ رَسُولُ اللهِ ﷺ خَمْسُ صَلَوَاتٍ فِي الْيَوْمِ وَاللَّيْلَةِ فَقَالَ هَلْ عَلَيَّ غَيْرُهَا قَالَ لَا إِلَّا أَنْ تَطَوَّعَ قَالَ رَسُولُ اللهِ ﷺ وَصِيَامُ رَمَضَانَ قَالَ هَلْ عَلَيَّ غَيْرُهُ قَالَ لَا إِلَّا أَنْ تَطَوَّعَ قَالَ وَذَكَرَ لَهُ رَسُولُ اللهِ ﷺ الزَّكَاةَ قَالَ هَلْ عَلَيَّ غَيْرُهَا قَالَ لَا إِلَّا أَنْ تَطَوَّعَ قَالَ فَأَدْبَرَ الرَّجُلُ وَهُوَ يَقُولُ وَاللهِ لَا أَزِيدُ عَلَى هٰذَا وَلَا أَنْقُصُ قَالَ رَسُولُ اللهِ ﷺ أَفْلَحَ إِنْ صَدَقَ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ٤٤**

'நஜ்து' வாசிகளைச் சேர்ந்த ஒருவர் தலைமுடி கலைந்தவராக ரசூலுல்லாஹ் ﷺ அவர்களிடம் வந்தார். அவரின் முணு முணுப்புகள் (எங்களுக்கு) கேட்டன. ஆனால், அவர் என்ன கூறுகிறார் என்பதை

1. அறிவிப்பாளர்: இப்னு உமர் ﵄, நூல்: ஸஹீஹுல் புகாரி 7





புரியமுடியவில்லை. இறுதியாக, அவர் நெருங்கி வந்தார். அப்போது அவர் இஸ்லாமைப் பற்றி கேள்வி கேட்கிறார் (என்று நாங்கள் அறிந்தோம்).

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: "பகலிலும் இரவிலும் ஐந்து நேரத் தொழுகைகள் (கட்டாயக் கடமையாகும்)." இவற்றைத் தவிர வேறு ஏதும் என் மீது இருக்கின்றனவா? என்று அவர் கேட்க, "இல்லை, நீர் உபரியாக செய்தாலே தவிர" என்று கூறி, இன்னும் ரமழானில் நோன்பிருக்க வேண்டும் என்றும் நபி ﷺ கூறினார்கள். இதைத் தவிர வேறு ஏதும் என் மீது இருக்கின்றதா என்று அவர் கேட்க, "இல்லை, நீர் உபரியாக செய்தாலே தவிர" என்று நபி ﷺ கூறினார்கள்.

மேலும் அவருக்கு ஸகாத்தைப் பற்றி ரசூலுல்லாஹ் ﷺ விவரித்தார்கள். இதைத் தவிர வேறு ஏதும் என் மீது இருக்கின்றதா என்று அவர் கூறினார். இல்லை, நீர் உபரியாக செய்தாலே தவிர என்று நபி ﷺ கூறினார்கள்.

பிறகு, வந்த மனிதர், அல்லாஹ்வின் மீது சத்தியமாக இதற்கு மேல் நான் அதிகப்படுத்தவும் மாட்டேன், குறைக்கவும் மாட்டேன் என்று கூறியவராக திரும்பிச் சென்றார். இவர் (கூறியவாறே) உண்மையாக நடந்து கொண்டால் இவர் வெற்றி பெறுவார் என்று ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்.[1]

ரமழானின் நோன்பு கட்டாயம் என்பது முஸ்லிம்களின் ஏகோபித்த முடிவாகும்.

இப்னு ஹஸ்ம் ﵀, இப்னு குதாமா ﵀ என்ற இரு அறிஞர்களும் கூறுகிறார்கள்: ரமழான் மாதத்தில் நோன்பிருப்பது கட்டாயம் என்பது முஸ்லிம்கள் எல்லோரின் ஏகோபித்த முடிவாகும். நோன்பிருப்பது கட்டாயம் என்பதை மறுப்பவர் "குஃப்ர்" இறை நிராகரிப்பில் சென்று விடுவார் என்பதும் அவர்களின் ஏகோபித்த முடிவாகும்.

ஆனால், அவர் புதிதாக இஸ்லாமை ஏற்றவராக, மார்க்கத்தை அறியாதவராக இருந்தால் அந்நேரம் அவருக்கு மார்க்கத்தைக்

1. அறிவிப்பாளர்: தல்ஹா இப்னு உபைதில்லாஹ் ﵁, நூல்: ஸஹீஹுல் புகாரி 44.





கற்றுக் கொடுக்கப்படும். அவர் ஏற்க மறுத்தால் அவர் காஃபிர் நிராகரிப்பாளராக ஆகிவிடுவார். பிறகு, அவர் மதம் மாறியவர் என்ற சட்டத்தின்படி கொலை தண்டனைக்கு உரியவராவார்.

ஏனெனில், இந்த மார்க்கத்தில் மிகத் தெளிவாக அறியப்பட்ட விஷயத்தை அவர் நிராகரித்து விட்டார். குர்ஆன், சுன்னாவின் வெளிப்படையான ஆதாரங்களின் மூலம் உறுதியான ஒரு விஷயத்தை அவர் மறுத்துவிட்டார்.[1]

---------

1. நூல்: அல்முக்னி, மராதிபுல் இஜ்மாஃ.



# நோன்பு எப்போது கடமையாக்கப்பட்டது?

ரமழான் மாத நோன்பு இஸ்லாமிய அழைப்புப் பணியின் மத்திய காலத்தில், ஹிஜ்ரி இரண்டாவது ஆண்டில் கடமையாக்கப்பட்டது. அதன் பின்னர் ஒன்பது ஆண்டுகள் ரமழான் மாதத்தில் ரசூலுல்லாஹ் ﷺ நோன்பிருந்து இறப்பெய்தினார்கள்.[1]

## நோன்பு கடமையாக்கப்பட்ட விதங்கள்

**முதலாவதாக:** நோன்பு கட்டாயமாக்கப்பட்டது. ஆனால், நோன்பு வைக்கலாம், அல்லது ஒவ்வொரு நாள் நோன்புக்கு பதிலாக ஓர் ஏழைக்கு உணவளிக்கலாம் என்று சலுகை வழங்கப்பட்டது. ஆனால் நோன்பு வைப்பதற்கு ஆர்வமூட்டப்பட்டது.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

**يَا أَيُّهَا الَّذِينَ آمَنُواْ كُتِبَ عَلَيْكُمُ الصِّيَامُ كَمَا كُتِبَ عَلَى الَّذِينَ مِن قَبْلِكُمْ لَعَلَّكُمْ تَتَّقُونَ أَيَّامًا مَّعْدُودَاتٍ فَمَن كَانَ مِنكُم مَّرِيضًا أَوْ عَلَى سَفَرٍ فَعِدَّةٌ مِّنْ أَيَّامٍ أُخَرَ وَعَلَى الَّذِينَ يُطِيقُونَهُ فِدْيَةٌ طَعَامُ مِسْكِينٍ فَمَن تَطَوَّعَ خَيْرًا فَهُوَ خَيْرٌ لَّهُ وَأَن تَصُومُواْ خَيْرٌ لَّكُمْ إِن كُنتُمْ تَعْلَمُونَ.**

நம்பிக்கையாளர்களே! உங்களுக்கு முன்னுள்ளவர்கள் மீது கடமையாக்கப்பட்டிருந்தது போல் உங்கள் மீதும் நோன்பு நோற்பது கடமையாக்கப்பட்டுள்ளது. (அதனால்) நீங்கள் இறையச்சமுடையவர்களாக ஆகலாம். குறிப்பிட்ட நாட்களில்தான்

1. நூல்: ஸாதுல் மஆத், ஆசிரியர்: இப்னுல் கய்யிம் ؒ.



(நோன்பு நோற்பது கடமையாகும்.) ஆயினும் (அந்நாள்களில்) உங்களில் யாராகிலும் நோயாளியாகவோ அல்லது பிரயாணத்திலோ இருந்தால் (அவர் நோன்பு நோற்க வேண்டியதில்லை. அதை ரமழான் அல்லாத) மற்ற நாள்களில் கணக்கி(ட்டு நோற்று வி)டவும். தவிர, (எக்காரணத்தினாலாவது) நோன்பு நோற்கக் கஷ்டப்படுபவர்கள் அதற்குப்) பரிகாரமாக ஏழை ஒருவருக்கு உணவளிப்பது கடமையாகும். எவரேனும் நன்மையை நாடி (பரிகாரத்திற்குரிய அளவைவிட அதிகமாகத்) தானம் செய்தால் அது அவருக்கே நன்மை. ஆயினும், (பரிகாரமாகத் தானம் கொடுப்பதைவிட நோன்பின் நன்மையை) நீங்கள் அறிந்தவர்களாக இருந்தால் நோன்பு நோற்பதே உங்களுக்கு சிறந்தது (என்பதை தெரிந்து கொள்வீர்கள்) (அல்குர்ஆன் 2:183, 184)

**وَعَنْ سَلَمَةَ بْنِ الْأَكْوَعِ ﷺ قَالَ لَمَّا نَزَلَتْ {وَعَلَى الَّذِينَ يُطِيقُونَهُ فِدْيَةٌ طَعَامُ مِسْكِينٍ} كَانَ مَنْ أَرَادَ أَنْ يُفْطِرَ وَيَفْتَدِيَ حَتَّى نَزَلَتِ الْآيَةُ الَّتِي بَعْدَهَا فَنَسَخَتْهَا رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ٤١٤٧**

நோன்பு நோற்கக் கஷ்டப்படுபவர்கள் அதற்குப் பரிகாரமாக ஏழை ஒருவருக்கு உணவளிப்பது கடமையாகும். (அல்குர்ஆன் 2:184) என்ற வசனம் இறங்கியவுடன் நோன்பை விடுவதற்கு விரும்புகின்றவர் நோன்பை விட்டுவிட்டு 'ஃபித்யா' -பரிகாரம் கொடுத்து விடுவார். இறுதியாக இதை அடுத்துள்ள (2:185வது) வசனம் இறங்கி இந்த வசனத்தின் சட்டத்தை மாற்றியது.[1]

**وعَنْ سَلَمَةَ بْنِ الْأَكْوَعِ ﷺ أَنَّهُ قَالَ كُنَّا فِي رَمَضَانَ عَلَى عَهْدِ رَسُولِ اللهِ ﷺ مَنْ شَاءَ صَامَ وَمَنْ شَاءَ أَفْطَرَ فَافْتَدَى بِطَعَامِ مِسْكِينٍ حَتَّى أُنْزِلَتْ هَذِهِ الْآيَةُ { فَمَنْ شَهِدَ مِنْكُمْ الشَّهْرَ فَلْيَصُمْهُ } رَوَاهُ مُسْلِمٌ بِرَقْمِ ١٩٣٢**

ரசூலுல்லாஹ் ﷺ உடைய காலத்தில் ரமழான் மாதத்தில் எங்களில்

1. அறிவிப்பாளர்: சலமா இப்னு அல்அக்வஃ ﷺ, நூல்: ஸஹீஹுல் புகாரி 4147.





விரும்பியவர் நோன்பிருப்பார். விரும்பியவர் நோன்பை விட்டுவிட்டு ஓர் ஏழைக்கு உணவளித்து பரிகாரம் செய்வார். இப்படித்தான் நாங்கள் இருந்தோம். இறுதியாக,

فَمَنْ شَهِدَ مِنْكُمْ الشَّهْرَ فَلْيَصُمْهُ

(2:185) என்ற வசனம் இறங்கியது.

ஆகவே, உங்களில் எவர் அம்மாதத்தை அடைகிறாரோ அவர் அதில் நோன்பு நோற்கவும்.[1]

**இரண்டாவதாக:** நோன்பிருப்பது கட்டாயமாகி விடுவது.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

شَهْرُ رَمَضَانَ الَّذِي أُنْزِلَ فِيهِ الْقُرْآنُ هُدًى لِلنَّاسِ وَبَيِّنَاتٍ مِنَ الْهُدَى وَالْفُرْقَانِ فَمَنْ شَهِدَ مِنْكُمُ الشَّهْرَ فَلْيَصُمْهُ.

ரமழான் மாதம் எத்தகைய (மகத்துவமுடைய)தென்றால் அதில்தான் மனிதர்களுக்கு நேர்வழி காட்டும் திருக்குர்ஆன் (என்னும் வேதம்) இறக்கப்பட்டது. அது (நன்மை, தீமையைப்) பிரித்தறிவித்து நேரான வழியைத் தெளிவாக்கக்கூடிய வசனங்களை உடையதாகவும் இருக்கிறது. ஆகவே, உங்களில் எவர் அம்மாதத்தை அடைகிறாரோ அவர் அதில் நோன்பு நோற்கவும். (அல்குர்ஆன் 2:185)

எனினும் நோன்பிருப்பவர் இரவில் ஏதும் உணவு உண்பதற்கு முன்னர் உறங்கிவிட்டால், அடுத்த நாள் சூரியன் மறைகின்ற வரை அவர் மீது உண்பதும் குடிப்பதும் ஹராமாக ஆகிவிடும்.

**மூன்றாவதாக:** நோன்பு கட்டாயமாகுவதும், அதிகாலை சூரியன் உதித்ததிலிருந்து சூரியன் மறைகின்ற வரை நோன்பிருப்பது அவசியமாகி விடுவதும். இந்த படித்தரம் இரண்டாவது படித்தரத்தில் இருந்த சட்டத்தை மாற்றிவிட்டது. இறுதிநாள் வரை இதுதான் மார்க்கத்தின் சட்டமாக ஆகிவிட்டது.

---

1. அறிவிப்பாளர்: சலமா இப்னு அல்அக்வஃ ﷺ, நூல்: ஸஹீஹ் முஸ்லிம் 1932.





ஆதாரம்:

**عَنِ الْبَرَاءِ ﵁ قَالَ كَانَ أَصْحَابُ مُحَمَّدٍ ﷺ إِذَا كَانَ الرَّجُلُ صَائِمًا فَحَضَرَ الْإِفْطَارُ فَنَامَ قَبْلَ أَنْ يُفْطِرَ لَمْ يَأْكُلْ لَيْلَتَهُ وَلَا يَوْمَهُ حَتَّى يُمْسِيَ وَإِنَّ قَيْسَ بْنَ صِرْمَةَ الْأَنْصَارِيَّ ﵁ كَانَ صَائِمًا فَلَمَّا حَضَرَ الْإِفْطَارُ أَتَى امْرَأَتَهُ فَقَالَ لَهَا أَعِنْدَكِ طَعَامٌ قَالَتْ لَا وَلَكِنْ أَنْطَلِقُ فَأَطْلُبُ لَكَ وَكَانَ يَوْمَهُ يَعْمَلُ فَغَلَبَتْهُ عَيْنَاهُ فَجَاءَتْهُ امْرَأَتُهُ فَلَمَّا رَأَتْهُ قَالَتْ خَيْبَةً لَكَ فَلَمَّا انْتَصَفَ النَّهَارُ غُشِيَ عَلَيْهِ فَذُكِرَ ذَلِكَ لِلنَّبِيِّ ﷺ فَنَزَلَتْ هَذِهِ الْآيَةُ أُحِلَّ لَكُمْ لَيْلَةَ الصِّيَامِ الرَّفَثُ إِلَى نِسَائِكُمْ فَفَرِحُوا بِهَا فَرَحًا شَدِيدًا وَنَزَلَتْ وَكُلُوا وَاشْرَبُوا حَتَّى يَتَبَيَّنَ لَكُمُ الْخَيْطُ الْأَبْيَضُ مِنَ الْخَيْطِ الْأَسْوَدِ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٧٨٢**

முஹம்மது ﷺ அவர்களின் தோழர்களில் ஒருவர் நோன்பிருந்தால் நோன்பு திறப்பதற்கு உணவு வந்து, அவர் உண்ணாமல் உறங்கிவிட்டால் அன்றைய இரவெல்லாம் பகலெல்லாம் அவர் உண்ணாமலே மாலை வரை இருப்பார். கைஸ் இப்னு ஸிர்மா அன்சாரி ﵁ என்ற தோழர் நோன்பாளியாக இருந்தார். நோன்பு திறக்கும் நேரம் வந்தவுடன் அவர் தனது மனைவியிடம் வந்தார். உணவு ஏதும் இருக்கின்றதா? என்று கேட்டார். அவர் இல்லை என்றார். எனினும் நான் சென்று உங்களுக்காக உணவு தேடி வருகிறேன் என்று கூறிச் சென்றார். அந்த தோழர் பகலெல்லாம் வேலை செய்திருந்ததால் அவரின் கண்கள் அவரை மிகைத்து விட்டன. (-அசதியினால் அயர்ந்து தூங்கிவிட்டார்.) அவரின் மனைவி அவரிடம் வந்து அவரை பார்த்தபோது உமக்கு நஷ்டம்தான் (இப்படி நடந்து விட்டதே!) என்று கூறினார். மதிய வேலை ஆனவுடன் அவர் மயக்கமுற்றார். இந்த செய்தி நபி ﷺ அவர்களிடம் கூறப்பட்டது. அப்போது இந்த வசனம் இறங்கியது.

**أُحِلَّ لَكُمْ لَيْلَةَ الصِّيَامِ الرَّفَثُ إِلَى نِسَائِكُمْ**





(நம்பிக்கையாளர்களே!) நோன்பு (நாட்களின்) இரவுகளில் நீங்கள் உங்கள் மனைவிகளுடன் வீடு கூடுவது உங்களுக்கு அனுமதிக்கப்பட்டிருக்கிறது. (அல்குர்ஆன் 2:187)

இந்த வசனத்தின் மூலம் நபித்தோழர்கள் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தார்கள். இன்னும் (அடுத்து) பின்வரும் இந்த வசனமும் இறங்கியது.

وَكُلُوا وَاشْرَبُوا حَتَّىٰ يَتَبَيَّنَ لَكُمُ الْخَيْطُ الْأَبْيَضُ مِنَ الْخَيْطِ الْأَسْوَدِ

ஆகவே, இருள் நீங்கி விடியற்காலை (ஃபஜ்ர்) ஆகிவிட்டது என்று உங்களுக்குத் தெளிவாகும் வரையில் (நோன்பின் இரவு காலங்களில் எப்போது வேண்டுமானாலும் தூங்கி எழுந்தும்) நீங்கள் புசியுங்கள்! பருகுங்கள்! (அல்குர்ஆன் 2:187)[1]

இவ்வாறுதான் நோன்பு படிப்படியாக கடமையாக்கப்பட்டது. முதலில், நோன்பு கடமையாக்கப்பட்டாலும் சிரமத்தை உணருபவர்கள் நோன்பை விட்டுவிட்டு பரிகாரம் கொடுக்கலாம் என்ற சலுகையும் வழங்கப்பட்டது.

இரண்டாவதாக, அந்த சலுகை நீக்கப்பட்டு, எல்லோரும் கட்டாயம் நோன்பு வைக்க வேண்டும் என்ற கட்டளை வந்தது. ஆனால் இரவில் தூங்கிவிட்டால் அதன் பின்னர் ஏதும் உண்ணக்கூடாது என்ற சட்டம் இருந்தது.

மூன்றாவதாக, இந்த சிரமமும் நீக்கப்பட்டு நோன்பு வைப்பது இலேசாக்கப்பட்டது. இரவில் எப்போது வேண்டுமானாலும் சாப்பிடலாம். அதிகாலையிலிருந்து சூரியன் மறைகின்ற வரை மட்டும் நோன்பு வைத்தல் போதுமானது என்ற சலுகை கொடுக்கப்பட்டது. இந்த சட்டம்தான் மார்க்கத்தின் இறுதியான சட்டமாக இருக்கிறது.

---------

1. அறிவிப்பாளர்: அல்பரா ﵁, நூல்: ஸஹீஹுல் புகாரி 1782.





# ரமழான் மாதம் ஆரம்பிப்பதையும் முடிவதையும் உறுதி செய்வது

ரமழானின் தலைப் பிறையை புறக்கண்ணால் தெளிவாக பார்ப்பதின் மூலமாகவோ, நம்பிக்கைக்குரிய ஒருவரோ அல்லது பலரோ தாங்கள் அதைப் பார்த்ததாக சாட்சி கூறினாலோ ரமழான் மாதத்தை ஆரம்பிக்க வேண்டும். பார்க்கவும் இல்லை, பார்த்ததாக சாட்சியும் வரவில்லை என்றால் மக்கள் ஷஃபான் மாதத்தை முப்பது நாட்களாக பூர்த்தி செய்யவேண்டும்.

ஆகவே, ரமழான் மாதம் வந்துவிட்டது என்பதை உறுதி செய்வதற்கு இரண்டில் ஒரு விஷயம் அவசியமாகும்.

**ஒன்று:** நம்பிக்கைக்குரிய ஒருவராவது ரமழானின் பிறையை பார்க்க வேண்டும்.

**அல்லது:** ஷஃபான் மாதத்தை முப்பதாக பூர்த்தி செய்ய வேண்டும்.

இவ்வாறே, ரமழான் மாதத்தை முடிப்பதற்கும் ஒன்று, ஷவ்வால் மாதத்தின் தலைப் பிறை பார்க்கப்பட வேண்டும். அல்லது நம்பிக்கைக்குரிய இருவர் பிறையை தாங்கள் பார்த்ததாக சாட்சி சொல்ல வேண்டும். அல்லது ரமழான் மாதத்தை முப்பது நாட்களாக பூர்த்தி செய்ய வேண்டும்.

ரமழானை ஆரம்பிப்பதற்கும் முடிப்பதற்கும் இடையில் உள்ள வித்தியாசம் என்னவென்றால், ரமழானை ஆரம்பிப்பதற்கு பிறையை பார்த்த ஒருவரின் சாட்சி ஏற்கப்படும். ஒருவர் பார்த்துவிட்டு சாட்சி சொல்வதே ரமழானை ஆரம்பிப்பதற்கு போதுமானதாகும். ஆனால், ரமழானை முடிப்பதற்கு பிறையை பார்த்த இருவரின் சாட்சி கட்டாயம் வேண்டும்.





ரமழான் மாதத்தின் நோன்பை ஆரம்பிப்பதற்கு ஒன்று அதன் பிறையை பார்ப்பது உறுதி செய்யப்பட வேண்டும். அல்லது ஷஃபான் மாதத்தை முப்பது நாட்களாக பூர்த்தி செய்ய வேண்டும். இதற்குரிய ஆதாரங்கள் பின்வருமாறு:

**عَنْ عَبْدِ اللهِ بْنِ عُمَرَ ﷠ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ الشَّهْرُ تِسْعٌ وَعِشْرُونَ لَيْلَةً فَلَا تَصُومُوا حَتَّى تَرَوْهُ فَإِنْ غُمَّ عَلَيْكُمْ فَأَكْمِلُوا الْعِدَّةَ ثَلَاثِينَ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٧٧٤**

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: மாதம் இருபத்தி ஒன்பது நாட்களாகும். ஆகவே, அதை (-பிறையை) பார்க்கின்ற வரை நோன்பு வைக்காதீர்கள். உங்கள் மீது (பிறை) மறைக்கப்பட்டு விட்டால் (மாதத்தின்) எண்ணிக்கையை முப்பதாக நிறைவு செய்யுங்கள்![1]

**وَعَنْ أَبِي هُرَيْرَةَ ﷛ قال قَالَ النَّبِيُّ ﷺ صُومُوا لِرُؤْيَتِهِ وَأَفْطِرُوا لِرُؤْيَتِهِ فَإِنْ غُبِّيَ عَلَيْكُمْ فَأَكْمِلُوا عِدَّةَ شَعْبَانَ ثَلَاثِينَ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٧٧٦**

நபி ﷺ கூறினார்கள்: அதை (-பிறையை)ப் பார்த்து நோன்பு வையுங்கள். அதைப் பார்த்து நோன்பை விடுங்கள். உங்கள் மீது (பிறை) மறைக்கப்பட்டால் ஷஃபானின் எண்ணிக்கையை முப்பதாக நிறைவு செய்யுங்கள்![2]

**وَعَنْ أَبِي هُرَيْرَةَ ﷛ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ إِذَا رَأَيْتُمْ الْهِلَالَ فَصُومُوا وَإِذَا رَأَيْتُمُوهُ فَأَفْطِرُوا فَإِنْ غُمَّ عَلَيْكُمْ فَصُومُوا ثَلَاثِينَ يَوْمًا رَوَاهُ مُسْلِمٌ بِرَقْمِ ١٨٠٨**

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: நீங்கள் பிறையைப் பார்த்தால் நோன்பு வையுங்கள்! அதை நீங்கள் பார்த்தால் நோன்பை விடுங்கள்!

1. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு உமர் ﵄, நூல்: ஸஹீஹுல் புகாரி 1774.
2. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: ஸஹீஹுல் புகாரி 1776.





உங்கள் மீது (பிறை) மறைக்கப்பட்டால் முப்பது நாட்கள் நோன்பு வையுங்கள்![1]

**وَعَنْ عَائِشَةَ ﵂ تَقُولُ كَانَ رَسُولُ اللهِ ﷺ يَتَحَفَّظُ مِنْ شَعْبَانَ مَا لَا يَتَحَفَّظُ مِنْ غَيْرِهِ ثُمَّ يَصُومُ لِرُؤْيَةِ رَمَضَانَ فَإِنْ غُمَّ عَلَيْهِ عَدَّ ثَلَاثِينَ يَوْمًا ثُمَّ صَامَ رَوَاهُ أَبُو دَاوُدَ بِرَقْمِ ١٩٨٠**

ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் ஷஃபான் மாதத்தில் அது அல்லாத மற்ற மாதங்களில் இல்லாத அளவிற்கு (பிறையை கவனிக்கின்ற விஷயத்தில்) மிக கவனமாக இருப்பார்கள். பிறகு, ரமழானை (-அதன் பிறையை)ப் பார்த்து நோன்பு வைப்பார்கள். (பிறை) அவர்களுக்கு மறைக்கப்பட்டு விட்டால் (ஷஃபானை) முப்பது நாட்களாக எண்ணி விடுவார்கள். பிறகு நோன்பு வைப்பார்கள்.[2]

---------

1. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: ஸஹீஹ் முஸ்லிம் 1808.
2. அறிவிப்பாளர்: ஆயிஷா ﵂, நூல்: சுனன் அபூ தாவூத் 1980.





# சாட்சியின் அடிப்படையில் நோன்பை முடிவு செய்வது

சாட்சி இரண்டு வகைப்படும்.

**முதல் வகை:** ஒருவர் சாட்சி கூறுவது.

عَنِ ابْنِ عَبَّاسٍ ﵄ قَالَ جَاءَ أَعْرَابِيٌّ إِلَى النَّبِيِّ ﷺ فَقَالَ إِنِّي رَأَيْتُ الْهِلَالَ قَالَ الْحَسَنُ فِي حَدِيثِهِ يَعْنِي رَمَضَانَ فَقَالَ أَتَشْهَدُ أَنْ لَا إِلَهَ إِلَّا اللَّهُ قَالَ نَعَمْ قَالَ أَتَشْهَدُ أَنَّ مُحَمَّدًا رَسُولُ اللَّهِ قَالَ نَعَمْ قَالَ يَا بِلَالُ أَذِّنْ فِي النَّاسِ فَلْيَصُومُوا غَدًا رَوَاهُ أَبُو دَاوُدَ بِرَقْمِ ١٩٩٣

ஒரு கிராமவாசி நபி ﷺ அவர்களிடம் வந்தார். நிச்சயமாக நான் பிறையைப் பார்த்தேன் என்று கூறினார். அறிவிப்பாளர் ஹசன் கூறுகிறார்: அதாவது ரமழான் பிறையை பார்த்ததாக அவர் கூறினார். லா இலாஹ இல்லல்லாஹ் என்று நீர் சாட்சி கூறுகிறாயா என நபி ﷺ கூறினார்கள். அவர் ஆம் என்றார். முஹம்மது ரசூலுல்லாஹ் என்று சாட்சி கூறுகிறாயா என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள். அவர் ஆம் என்றார். பிலாலே! மக்களுக்கு அறிவிப்பு செய்யுங்கள்! அவர்கள் நாளை நோன்பு வைக்கட்டும் என்று நபி ﷺ கூறினார்கள்.[1]

وَعَنِ ابْنِ عُمَرَ ﵄ قَالَ تَرَاءَى النَّاسُ الْهِلَالَ فَأَخْبَرْتُ رَسُولَ اللَّهِ ﷺ أَنِّي رَأَيْتُهُ فَصَامَهُ وَأَمَرَ النَّاسَ بِصِيَامِهِ رَوَاهُ أَبُو دَاوُدَ بِرَقْمِ ١٩٩٥

1. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﵄, நூல்: சுனன் அபூ தாவூத் 1993.





மக்கள் பிறையைப் பார்க்க முயற்சித்தார்கள். நிச்சயமாக நான் அதைப் பார்த்தேன் என்று ரசூலுல்லாஹ் ﷺ அவர்களிடம் அறிவித்தேன். ஆகவே, அவர்களும் அன்று நோன்பு நோற்றார்கள். அன்று நோன்பு வைக்கும்படி மக்களுக்கும் அவர்கள் கட்டளையிட்டார்கள்.[1]

قال الإمام الترمذي رحمه الله في الحديث المرقوم ٦٢٧ وَالْعَمَلُ عَلَى هٰذَا الْحَدِيثِ عِنْدَ أَكْثَرِ أَهْلِ الْعِلْمِ قَالُوا تُقْبَلُ شَهَادَةُ رَجُلٍ وَاحِدٍ فِي الصِّيَامِ وَبِهِ يَقُولُ ابْنُ الْمُبَارَكِ وَالشَّافِعِيُّ وَأَحْمَدُ وَأَهْلُ الْكُوفَةِ قَالَ إِسْحَقُ لَا يُصَامُ إِلَّا بِشَهَادَةِ رَجُلَيْنِ وَلَمْ يَخْتَلِفْ أَهْلُ الْعِلْمِ فِي الْإِفْطَارِ أَنَّهُ لَا يُقْبَلُ فِيهِ إِلَّا شَهَادَةُ رَجُلَيْنِ

627 என்று இலக்கமிடப்பட்ட ஹதீஸை தொடர்ந்து இமாம் திர்மிதி رحمه الله கூறுகிறார்கள்: “கல்வியாளர்களில் அதிகமானவர்கள் இந்த ஹதீஸின்படி அமல் செய்வதை ஏற்கிறார்கள். நோன்பை ஆரம்பிப்பதில் ஒரே ஓர் ஆடவரின் சாட்சி ஏற்கப்படும் என்று அவர்கள் கூறுகிறார்கள். இப்னுல் முபாரக் رحمه الله, ஷாஃபியி رحمه الله, அஹமது رحمه الله, இன்னும் கூஃபா வாசிகள் இந்த கருத்தைத்தான் கூறுகிறார்கள். இரு ஆடவரின் சாட்சியத்தைக் கொண்டுதான் நோன்பு வைக்கப்படும் என்று இமாம் இஸ்ஹாக் رحمه الله கூறுகிறார். நோன்பை முடிப்பதில் இருவரின் சாட்சியம்தான் ஏற்கப்படும் என்பதில் கல்வியாளர்களுக்கு மத்தியில் மாறுபட்ட கருத்தில்லை.”

**இரண்டாவது வகை:** இருவர் சாட்சி கூறுவது. அதற்குரிய ஆதாரமாவது:

عن حُسَيْن بْن الْحَارِثِ الْجَدَلِيِّ أَنَّ أَمِيرَ مَكَّةَ رضي الله عنه خَطَبَ ثُمَّ قَالَ عَهِدَ إِلَيْنَا رَسُولُ اللهِ ﷺ أَنْ نَنْسُكَ لِلرُّؤْيَةِ فَإِنْ لَمْ نَرَهُ وَشَهِدَ شَاهِدَا عَدْلٍ نَسَكْنَا بِشَهَادَتِهِمَا فَقَالَ بِذٰلِكَ أَمَرَنَا رَسُولُ اللهِ ﷺ رَوَاهُ أَبُو دَاوُدَ بِرَقْمِ ١٩٩١

1. அறிவிப்பாளர்: இப்னு உமர் رضي الله عنهما, நூல்: சுனன் அபூ தாவூத், ஹதீஸ் எண்: 1995.





மக்காவின் கவர்னர் ﵁ பிரசங்கம் நிகழ்த்தினார். அதில் அவர் கூறினார்: "நாங்கள் பிறையை பார்க்கும் போதுதான் (நோன்பு, ஹஜ்) இபாதத்துகளை செய்ய வேண்டும் என்று ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் எங்களிடம் ஒப்பந்தம் வாங்கினார்கள். நாங்கள் அதைப் பார்க்கவில்லை என்றால் நம்பிக்கைக்குரிய இரு சாட்சிகள் சாட்சி கூறினால், அவர்கள் சாட்சி கூறியதைக் கொண்டு நாங்கள் இபாதத்துகளை செய்வோம். இப்படித்தான் ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் எங்களுக்கு கட்டளையிட்டார்கள் என்று அவர் கூறினார்.[1]

**وَعَنْ حُسَيْنِ بْنِ الْحَارِثِ الْجَدَلِيِّ عَنْ عَبْدِ الرَّحْمَنِ بْنِ زَيْدِ بْنِ الْخَطَّابِ أَنَّهُ خَطَبَ النَّاسَ فِي الْيَوْمِ الَّذِي يُشَكُّ فِيهِ فَقَالَ أَلَا إِنِّي جَالَسْتُ أَصْحَابَ رَسُولِ اللهِ ﷺ وَسَاءَلْتُهُمْ وَإِنَّهُمْ حَدَّثُونِي أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ صُومُوا لِرُؤْيَتِهِ وَأَفْطِرُوا لِرُؤْيَتِهِ وَانْسُكُوا لَهَا فَإِنْ غُمَّ عَلَيْكُمْ فَأَكْمِلُوا ثَلَاثِينَ فَإِنْ شَهِدَ شَاهِدَانِ فَصُومُوا وَأَفْطِرُوا رَوَاهُ النَّسَائِيُّ بِرَقْمِ ٢٠٨٧**

அப்துர்ரஹ்மான் இப்னு சைது இப்னுல் கத்தாப் ﵀ ஒரு நாள் மக்களிடம் பிரசங்கம் நிகழ்த்தினார். அது (சென்றுபோன மாதத்தின் இறுதி நாளா? அல்லது வருகின்ற மாதத்தின் முதல் நாளா?) என்ற சந்தேகமான நாளாக இருந்தது. அவர் கூறினார்: அறிந்து கொள்ளுங்கள்! நிச்சயமாக நான் ரசூலுல்லாஹ் ﷺ அவர்களுடைய தோழர்களிடம் பழகி இருக்கின்றேன். அவர்களிடம் விசாரித்து இருக்கின்றேன். நிச்சயமாக அவர்கள் எனக்கு அறிவித்தார்கள்: "நிச்சயமாக ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: நீங்கள் அதை (-பிறையை)ப் பார்த்து நோன்பு வையுங்கள்! அதை (-பிறையை)ப் பார்த்து நோன்பை விடுங்கள்! இன்னும் அப்போது நீங்கள் இபாதத்துகளை (ஹஜ் கிரியைகளை) செய்யுங்கள். உங்கள் மீது (பிறை) மறைக்கப் பட்டுவிட்டால் (மாதத்தை) முப்பதாக நிறைவு செய்யுங்கள். இரு

1. அறிவிப்பாளர்: ஹுசைன் இப்னு ஹாரிஸ் அல்ஜதலி ﵁, நூல்: சுனன் அபூ தாவூத், ஹதீஸ் எண்: 1991.





சாட்சிகள் சாட்சி கூறினால், நோன்பு வையுங்கள். நோன்பை விடுங்கள்.[1]

இந்த இரண்டு ஹதீஸ்களின் அடிப்படையில் ரமழானை முடிப்பதற்கு இரு சாட்சிகள் அவசியம் என்பதில் அறிஞர்கள் ஒரே கருத்தில் இருக்கின்றார்கள். ஆனால் ரமழானை ஆரம்பிப்பதற்கு ஒருவரின் சாட்சியத்தை நபி ﷺ அவர்கள் ஏற்றுக் கொண்டதால் அந்த ஹதீஸின் அடிப்படையில் அறிஞர்களும் அவ்வாறே கூறுகிறார்கள்.

---------

1. அறிவிப்பாளர்: ஹுசைன் இப்னு ஹாரிஸ் அல்ஜதலி ﷺ, நூல்: சுனன் அபூ தாவூத், ஹதீஸ் எண்: 2087.



# முதல் பிறையைப் பார்த்தவர் என்ன செய்யவேண்டும்?

தலைப் பிறையை பார்ப்பவர் ஹதீஸில் வந்துள்ள நபிமொழி துஆவை ஓத வேண்டும்.

அந்த துஆக்கள் பின்வருமாறு:

عن طَلْحَةَ بْنِ عُبَيْدِ اللهِ ﷺ أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ إِذَا رَأَى الْهِلَالَ قَالَ «اَللّٰهُمَّ أَهْلِلْهُ عَلَيْنَا بِالْيُمْنِ وَالْإِيمَانِ وَالسَّلَامَةِ وَالْإِسْلَامِ رَبِّي وَرَبُّكَ اللّٰهُ» رَوَاهُ التِّرْمِذِيُّ بِرَقْمِ ٣٣٧٣

நபி ﷺ அவர்கள் முதல் பிறையைப் பார்த்தால் கூறுவார்கள்: “அல்லாஹ்வே! அருளுக்கும், ஈமானுக்கும், பாதுகாப்பிற்கும், இஸ்லாமிற்கும் காரணமாக இந்த பிறையை ஆக்கிவை! எனது ரப்பும் உனது ரப்பும் அல்லாஹ்தான்.[1]

وَعَنِ ابْنِ عُمَرَ ﷺ قَالَ كَانَ رَسُولُ اللهِ ﷺ إِذَا رَأَى الْهِلَالَ قَالَ اَللهُ أَكْبَرُ اَللّٰهُمَّ أَهِلَّهُ عَلَيْنَا بِالأَمْنِ وَالإِيمَانِ وَالسَّلاَمَةِ وَالإِسْلاَمِ وَالتَّوْفِيقِ لِمَا يُحِبُّ رَبُّنَا وَيَرْضَى رَبُّنَا وَرَبُّكَ اللهُ رَوَاهُ الدَّارِمِيُّ بِرَقْمِ ١٧٤٠

ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் பிறையைப் பார்த்தால் கூறுவார்கள்: “அல்லாஹு அக்பர் (அல்லாஹ் மிகப் பெரியவன்) அல்லாஹ்வே! அருளுக்கும், ஈமானுக்கும், பாதுகாப்பிற்கும், இஸ்லாமிற்கும்

1. அறிவிப்பாளர்: தல்ஹா இப்னு உபைதில்லாஹ் ﷺ, நூல்: ஜாமிவுத் திர்மிதி, ஹதீஸ் எண்: 3373.





எங்கள் ரப்பு விரும்புவதையும் எங்கள் ரப்பு திருப்திப்படுவதையும் செய்வதற்கு வாய்ப்பாகவும் இந்த பிறையை ஆக்கிவை! எங்களது ரப்பும் உனது ரப்பும் அல்லாஹ்தான்.[1]

---------

1. அறிவிப்பாளர்: இப்னு உமர் ﷺ, நூல்: சுனன் அத்தாரமி 1740

# நோன்பின் வகைகள்

நோன்பு நான்கு வகைப்படும்.

**முதல் வகை:** ‘ஃபர்ழ்’. அதாவது, மார்க்கத்தில் கட்டாயக் கடமையாக ஆக்கப்பட்ட நோன்பு. அது ரமழானுடைய நோன்பாகும். அதை அந்த மாதத்தில் வைத்தாலும் சரி, அல்லது அது தவறிவிட்டால் பிற மாதத்தில் அதை நிறைவேற்றினாலும் சரி.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

**يَا أَيُّهَا الَّذِينَ آمَنُواْ كُتِبَ عَلَيْكُمُ الصِّيَامُ كَمَا كُتِبَ عَلَى الَّذِينَ مِن قَبْلِكُمْ لَعَلَّكُمْ تَتَّقُونَ * أَيَّامًا مَّعْدُودَاتٍ فَمَن كَانَ مِنكُم مَّرِيضًا أَوْ عَلَى سَفَرٍ فَعِدَّةٌ مِّنْ أَيَّامٍ أُخَرَ .**

நம்பிக்கையாளர்களே! உங்களுக்கு முன்னுள்ளவர்கள் மீது கடமையாக்கப்பட்டிருந்தது போல் உங்கள் மீதும் நோன்பு நோற்பது கடமையாக்கப்பட்டுள்ளது. (அதனால்) நீங்கள் இயைச்சமுடையவர்களாக ஆகலாம். குறிப்பிட்ட நாள்களில்தான் (நோன்பு நோற்பது கடமையாகும்.) ஆயினும் (அந்நாள்களில்) உங்களில் யாராகிலும் நோயாளியாகவோ அல்லது பிரயாணத்திலோ இருந்தால் (அவர் நோன்பு நோற்க வேண்டியதில்லை. அதை ரமழான் அல்லாத) மற்ற நாள்களில் கணக்கி(ட்டு நோற்று வி)டவும்.
(அல்குர்ஆன் 2:183, 184)

இன்னும் இதற்கு பல ஹதீஸ்களும் முஸ்லிம் சமுதாயத்தின் ஏகோபித்த முடிவும் ஆதாரங்களாக இருக்கின்றன.



**இரண்டாவது வகை:** குற்றப் பரிகாரத்திற்காக வைக்கப்படுகின்ற வாஜிப் -கடமையான நோன்பு.

இந்த வகை நோன்பு பல இருக்கின்றன.

1) இஹ்ராமில் இருப்பவர் தனது தலையில் உள்ள பேன் தொல்லையைப் போக்குவதற்காக தனது தலையை சிரைத்து விட்டால், அவர் அந்த குற்றத்திற்காக குர்பானி கொடுக்க வேண்டும். அல்லது உணவளிக்க வேண்டும். அல்லது மூன்று நோன்பு வைக்க வேண்டும்.[1]

2) ஹஜ் தமத்துஃ செய்பவர் குர்பானி கொடுக்க வசதி பெறவில்லை என்றால் அவர் ஹஜ் உடைய காலத்தில் மூன்று நோன்புகளும் ஹஜ் முடிந்து இல்லம் திரும்பியதும் ஏழு நோன்புகளும் வைக்க வேண்டும்.[2]

3) தவறுதலாக ஒருவரை கொன்றுவிட்டால் முஃமினான அடிமை ஒருவரை விடுதலை செய்ய வேண்டும். அது முடியவில்லை என்றால் இரண்டு மாதங்கள் தொடர்ந்து நோன்பு வைக்க வேண்டும்.[3]

4) சத்தியம் செய்து அதை நிறைவேற்ற முடியாமல் போனால் அவர் அதற்கு பரிகாரம் செய்யவேண்டும். அந்த பரிகாரம் ஒன்று பத்து ஏழைகளுக்கு உணவளிக்க வேண்டும். அல்லது பத்து ஏழைகளுக்கு ஆடை வழங்க வேண்டும். அல்லது ஓர் அடிமையை விடுதலை செய்ய வேண்டும். இந்த மூன்றில் ஒன்றை செய்ய இயலாதவர் மூன்று நோன்புகள் வைக்க வேண்டும்.[4]

5) இஹ்ராமுடைய நிலையில் இருக்கும் போது வேட்டைப் பிராணியை ஒருவர் வேட்டையாடிவிட்டால் அவர் அதுபோன்ற ஒரு கால்நடையை வாங்கி குர்பானி கொடுக்க வேண்டும். அல்லது ஏழைகளுக்கு உணவளிக்க வேண்டும். அல்லது அதற்கு சமமான அளவிற்கு அவர் நோன்பு வைக்க வேண்டும்.[5]

---

1. ஆதாரம்: அல்குர்ஆன் 2 : 196
2. ஆதாரம்: அல்குர்ஆன் 2 : 196
3. ஆதாரம்: அல்குர்ஆன் 4 : 92
4. ஆதாரம்: அல்குர்ஆன் 5 : 89
5. ஆதாரம்: அல்குர்ஆன் 5 : 95





6) தனது மனைவியை தனது தாய்க்கு ஒப்பிட்டு பேசிய குற்றத்திற்காக பரிகாரம் செய்வதற்கு முஃமினான அடிமையை உரிமையிட முடியாதவர் தொடர்ந்து இரண்டு மாதங்கள் நோன்பு வைக்க வேண்டும்.[1]

7) ரமழான் மாதத்தில் நோன்பு வைத்திருந்த நிலையில் தனது மனைவியிடம் வேண்டுமென்றே, அறிந்த நிலையில், ஒருவர் மனைவியுடன் சேர்ந்து விட்டால் அவர் அதற்கு பரிகாரமாக முஃமினான ஓர் அடிமையை விடுதலை செய்ய வேண்டும். இல்லையென்றால் அறுபது நோன்புகள் தொடர்ந்து வைக்க வேண்டும்.[2]

**மூன்றாவது வகை:** நேர்ச்சையினால் கடமையான நோன்பு

ஒருவர் அல்லாஹ்விற்காக நான் நோன்பு வைப்பேன் என்று நேர்ச்சை செய்து கொண்டால், அவர் அந்த நோன்பை கட்டாயம் நிறைவேற்ற வேண்டும். அவர் எத்தனை நோன்புகளை தன்மீது நேர்ச்சை செய்துகொண்டாரோ அத்தனை நோன்புகளையும் அவர் வைக்க வேண்டும்.

ஆதாரம்:

**عَنْ عَائِشَةَ ﵂ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ مَنْ نَذَرَ أَنْ يُطِيعَ اللهَ فَلْيُطِعْهُ وَمَنْ نَذَرَ أَنْ يَعْصِيَهُ فَلَا يَعْصِهِ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ٦٢٠٢**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்விற்கு கீழ்ப்படிவதாக யார் நேர்ச்சை செய்வாரோ அவர் அவனுக்கு கீழ்ப்படியட்டும். அவனுக்கு மாறுசெய்வதற்கு யார் நேர்ச்சை செய்வாரோ அவர் அவனுக்கு மாறுசெய்து விட வேண்டாம்.[3]

---

1. ஆதாரம்: அல்குர்ஆன் 58 : 4.
2. ஆதாரம்: ஹதீஸ் எண்: 1800, ஸஹீஹுல் புகாரி.
3. அறிவிப்பாளர்: ஆயிஷா ﵂, நூல்: ஸஹீஹுல் புகாரி 6202.



وَعَنِ ابْنِ عَبَّاسٍ رضي الله عنهما قَالَ جَاءَ رَجُلٌ إِلَى النَّبِيِّ ﷺ فَقَالَ يَا رَسُولَ اللهِ إِنَّ أُمِّي مَاتَتْ وَعَلَيْهَا صَوْمُ شَهْرٍ أَفَأَقْضِيهِ عَنْهَا قَالَ نَعَمْ قَالَ فَدَيْنُ اللهِ أَحَقُّ أَنْ يُقْضَى رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٨١٧

நபி ﷺ அவர்களிடம் ஒருவர் வந்தார். அவர், அல்லாஹ்வின் தூதரே! நிச்சயமாக எனது தாய் இறந்துவிட்டார். அவர் மீது ஒரு மாதம் நோன்பு வைக்க வேண்டிய கடமை இருந்தது. அவர் சார்பாக நான் அதை நிறைவேற்றலாமா? என்று கேட்டார். ஆம், என்று கூறி, நிறைவேற்றப்படுவதற்கு அல்லாஹ்வின் கடன் மிகத் தகுதியானது என்று கூறினார்கள்.[1]

وَعَنِ ابْنِ عَبَّاسٍ رضي الله عنهما قَالَ جَاءَتْ امْرَأَةٌ إِلَى رَسُولِ اللهِ ﷺ فَقَالَتْ يَا رَسُولَ اللهِ إِنَّ أُمِّي مَاتَتْ وَعَلَيْهَا صَوْمُ نَذْرٍ أَفَأَصُومُ عَنْهَا قَالَ أَرَأَيْتِ لَوْ كَانَ عَلَى أُمِّكِ دَيْنٌ فَقَضَيْتِيهِ أَكَانَ يُؤَدِّي ذَلِكِ عَنْهَا قَالَتْ نَعَمْ قَالَ فَصُومِي عَنْ أُمِّكِ رَوَاهُ مُسْلِمٌ بِرَقْمِ ١٩٣٨

ஒரு பெண் ரசூலுல்லாஹ் ﷺ அவர்களிடம் வந்தார். அல்லாஹ்வின் தூதரே! நிச்சயமாக எனது தாய் இறந்துவிட்டார். அவர் மீது நேர்ச்சை செய்துகொண்ட நோன்பு இருக்கிறது. அவர் சார்பாக நான் நோன்பு வைக்கட்டுமா? என்று கேட்டார். அதற்கு நபி ﷺ கூறினார்கள்: "நீ சொல்! உனது தாயின் மீது கடன் இருந்து, அதை நீ நிறைவேற்றினால் அது அவள் சார்பாக அந்த கடனை நிறைவேற்றியதாக ஆகிவிடுமல்லவா?" அவர் ஆம் என்றார். நபி ﷺ கூறினார்கள்: "உனது தாயின் சார்பாக நீ நோன்பு வை!"[2]

**நான்காவது வகை:** உபரியான நோன்பு.

உபரியான நோன்பு இருவகைப்படும். ஒன்று பொதுவானது.

1. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் رضي الله عنهما, நூல்: ஸஹீஹுல் புகாரி 1817.
2. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் رضي الله عنهما, நூல்: ஸஹீஹ் முஸ்லிம் 1938.





மற்றொன்று குறிப்பிடப்பட்டது. பொதுவானது என்றால், நோன்பு வைப்பது தடுக்கப்படாத ஒரு நாளில் நோன்பு வைப்பதாகும். அதாவது ஒரு குறிப்பிட்ட நாள் இன்றி பொதுவாக வைக்கப்படுகின்ற நோன்பாகும். குறிப்பிடப்பட்ட உபரியான நோன்பு என்பது அதிகம் இருக்கின்றது.

உதாரணமாக, அரஃபா நாள் நோன்பு, ஆஷூரா நோன்பு, திங்கள், வியாழன் நோன்பு வைப்பது, ஒவ்வொரு மாதத்திலும் 13, 14, 15 ஆகிய பிறைகளில் நோன்பு வைப்பது.

---------

# நோன்பின் நிபந்தனைகள்

ரமழான் மாதத்தின் நோன்பை அதாவாக (-உடனடியாக) நிறைவேற்றுவதற்கு சில நிபந்தனைகள் உள்ளன. அந்த நிபந்தனைகள் யாரிடம் பூர்த்தி அடைந்தனவோ அவர் மீது மட்டும்தான் நோன்பு வைப்பது உடனடியாக கடமையாகும். இந்த நிபந்தனைகளில் ஒன்று தவறினாலும் அவர் மீது நோன்பு உடனடியாக கடமையாகாது.

அந்த நிபந்தனைகள் ஆறாகும். அவை:

1) முஸ்லிமாக இருப்பது.

2) பருவ வயதை அடைந்திருப்பது.

3) புத்தியுள்ளவராக இருப்பது.

4) உடல் வலிமை உள்ளவராக இருப்பது.

5) உள்ளூரில் தங்கி இருப்பது.

6) தடைகளை விட்டும் நீங்கியவராக இருப்பது.

**முதல் நிபந்தனை:** முஸ்லிமாக இருப்பது. ஆகவே, காஃபிர் -(இறை நிராகரிப்பாளர்) மீது நோன்பு கடமையாகாது. நோன்பு வைக்கும்படி அவரை கட்டாயப்படுத்தக்கூடாது. அவர் நோன்பு வைத்தாலும் அது ஏற்கப்படாது.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَمَا مَنَعَهُمْ أَن تُقْبَلَ مِنْهُمْ نَفَقَاتُهُمْ إِلاَّ أَنَّهُمْ كَفَرُواْ بِاللّه وَبِرَسُولِهِ

அவர்களுடைய தர்மங்கள் அவர்களிடமிருந்து அங்கீகரிக்கப்பட மாட்டாது என்று (இறைவன்) அவர்களை தடுத்திருப்பதற்குக் காரணம், நிச்சயமாக அவர்கள் அல்லாஹ்வையும், அவனுடைய தூதரையும் நிராகரித்தார்கள் என்பதுதான். (அல்குர்ஆன் 9:54)





وَقَدِمْنَا إِلَى مَا عَمِلُوا مِنْ عَمَلٍ فَجَعَلْنَاهُ هَبَاءً مَّنثُورًا

(இம்மையில்) அவர்கள் செய்து கொண்டிருந்த காரியங்களை நாம் நோக்கினோம். பறக்கும் தூசிகளைப் போல் அவற்றை நாம் ஆக்கிவிட்டோம். (அல்குர்ஆன் 25:23)

ஆகவே, ஒருவர் புதிதாக இஸ்லாமை ஏற்று முஸ்லிமாகி விட்டால் அவர் காஃபிராக இருந்தபோது அவருக்கு விடுபட்ட பழைய நோன்புகளை அவர் நிறைவேற்ற வேண்டும் என்று அவரை கட்டாயப்படுத்தக் கூடாது.

قُل لِّلَّذِينَ كَفَرُواْ إِن يَنتَهُواْ يُغْفَرْ لَهُم مَّا قَدْ سَلَفَ

(நபியே!) நிராகரிப்பவர்களுக்கு நீர் கூறுவீராக: அவர்கள் (விஷமம் செய்யாது, நிராகரிப்பைவிட்டு) விலகி (இஸ்லாமை ஏற்று)க் கொண்டால் (அவர்களுடைய) முந்திய குற்றங்கள் அவர்களுக்கு மன்னிக்கப்படும். (அல்குர்ஆன் 8:38)

என்றாலும், ஒரு காஃபிர் -இஸ்லாமை ஏற்காதவர் இறந்து விட்டால் அவருக்கு அவர் நிராகரிப்பில் இருந்ததற்கான தண்டனை கொடுக்கப்படுவதுடன் இஸ்லாமிய மார்க்கத்தில் உள்ள அல்லாஹ்வின் சட்டங்களை அவர் ஏற்காமல் இருந்ததற்காகவும் அவருக்கு தண்டனை கொடுக்கப்படும். அதாவது ஒருவர் இஸ்லாமை ஏற்க மறுப்பது அதன் சட்டங்களையும் ஏற்க மறுப்பது போன்றுதான். ஒவ்வொருவரும் இஸ்லாமையும் அதன் சட்டங்களையும் ஏற்க வேண்டும் என்பதுதான் அல்லாஹ்வின் கட்டளையாகும்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

كُلُّ نَفْسٍ بِمَا كَسَبَتْ رَهِينَةٌ (٣٨) إِلَّا أَصْحَابَ الْيَمِينِ (٣٩) فِي جَنَّاتٍ يَتَسَاءَلُونَ (٤٠) عَنِ الْمُجْرِمِينَ (٤١) مَا سَلَكَكُمْ فِي سَقَرَ (٤٢) قَالُوا لَمْ نَكُ مِنَ الْمُصَلِّينَ (٤٣) وَلَمْ نَكُ نُطْعِمُ الْمِسْكِينَ (٤٤) وَكُنَّا نَخُوضُ مَعَ الْخَائِضِينَ (٤٥) وَكُنَّا نُكَذِّبُ بِيَوْمِ الدِّينِ (٤٦) حَتَّىٰ أَتَانَا الْيَقِينُ (٤٧)





ஒவ்வொரு மனிதனும், தான் செய்யும் செயலுக்கே பிணையாளியாக இருக்கின்றான். ஆயினும், (எவர்களுடைய செயலேடு வலது கையில் கொடுக்கப்பட்டதோ அவர்கள்) வலது பக்கத்தில் இருப்பார்கள். அவர்கள் சொர்க்கத்தில் இருந்துகொண்டு, குற்றவாளிகளை நோக்கி, உங்களை நரகத்தில் புகுத்தியது எது? என்று கேட்பார்கள். அதற்கவர்கள் நாங்கள் தொழுகையாளிகளாக இருக்கவில்லை. நாங்கள் ஏழைகளுக்கு உணவளிக்கவில்லை. வீணான காரியங்களில் மூழ்கிக்கிடந்தவர்களுடன் நாங்களும் மூழ்கிக் கிடந்தோம். கூலி கொடுக்கும் (இந்)நாளையும் நாங்கள் பொய்யாக்கினோம். (நாங்கள் மரணித்து) இதனை உறுதியாகக் காணும் வரையில் (இவ்வாறே இருந்தோம்) என்றும் கூறுவார்கள். (அல்குர்ஆன் 74: 38-47)

ஒருவர் ரமழான் மாதத்தில் பகல் நேரத்தில் இஸ்லாமை ஏற்றுக் கொண்டால் பகலின் மீதமுள்ள பகுதியில் அவர் ஏதும் உண்ணாமலும் பருகாமலும் இருக்க வேண்டும். ஏனெனில், இப்போது அவர் நோன்பு கடமையாவதற்குரிய தகுதி உள்ளவராக ஆகிவிட்டார். ரமழான் முடிந்தவுடன் அந்த நாளின் நோன்பை மட்டும் அவர் வைக்க வேண்டும்.

**இரண்டாவது நிபந்தனை:** பருவ வயதை அடைந்திருப்பது

ஆகவே, பருவ வயதை அடைகின்ற வரை சிறுவர்கள் மீது நோன்பு கடமை இல்லை.

**عَنْ عَلِيٍّ رضي الله عنه عَنِ النَّبِيِّ ﷺ قَالَ رُفِعَ الْقَلَمُ عَنْ ثَلَاثَةٍ عَنِ الْمَجْنُونِ الْمَغْلُوبِ عَلَى عَقْلِهِ حَتَّى يُفِيقَ وَعَنِ النَّائِمِ حَتَّى يَسْتَيْقِظَ وَعَنِ الصَّبِيِّ حَتَّى يَحْتَلِمَ رَوَاهُ أَبُو دَاوُدَ بِرَقْمِ ٣٨٢٣**

நபி ﷺ கூறினார்கள்: மூன்று நபர்களை விட்டும் சட்டம் உயர்த்தப்பட்டு விட்டது. தனது அறிவை இழந்த பைத்தியக்காரர் அவர் தெளிவடைகின்றவரை, தூங்குபவர் விழிக்கின்றவரை,





குழந்தை பருவ வயதை அடைகின்றவரை அவர்களை விட்டும் சட்டம் உயர்த்தப்பட்டுவிட்டது (அகற்றப்பட்டு விட்டது).[1]

சிறுவர் ஒருவருக்கு நோன்பு வைக்கின்ற அளவு உடல் வலிமை இருந்தால் அந்த சிறுவரின் பொறுப்பாளர் அந்த சிறுவரை நோன்பு வைப்பதற்கு தூண்ட வேண்டும்.

ஆதாரம்:

**عَنِ الرُّبَيِّعِ بِنْتِ مُعَوِّذٍ ﵄ قَالَتْ أَرْسَلَ النَّبِيُّ ﷺ غَدَاةَ عَاشُورَاءَ إِلَى قُرَى الْأَنْصَارِ مَنْ أَصْبَحَ مُفْطِرًا فَلْيُتِمَّ بَقِيَّةَ يَوْمِهِ وَمَنْ أَصْبَحَ صَائِمًا فَلْيَصُمْ قَالَتْ فَكُنَّا نَصُومُهُ بَعْدُ وَنُصَوِّمُ صِبْيَانَنَا وَنَجْعَلُ لَهُمْ اللُّعْبَةَ مِنْ الْعِهْنِ فَإِذَا بَكَى أَحَدُهُمْ عَلَى الطَّعَامِ أَعْطَيْنَاهُ ذَاكَ حَتَّى يَكُونَ عِنْدَ الْإِفْطَارِ**

**رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٨٢٤**

நபி ﷺ அவர்கள் ஆஷூராவின் விடியற்காலையில் அன்சாரிகளின் கிராமங்களுக்கு செய்தி அனுப்பினார்கள். அதாவது யார் இன்று காலை நோன்பு வைக்காமல் இருந்தாரோ அவர் அன்றைய தினத்தின் மீதமுள்ளதை (நோன்பால்) நிறைவு செய்யட்டும். யார் இன்று காலை நோன்பு வைத்தாரோ அவர் நோன்பை தொடரட்டும். இந்த ஹதீஸின் அறிவிப்பாளர் கூறுகிறார்: இந்த அறிவிப்பிற்கு பின்னர் நாங்கள் நோன்பு வைக்க ஆரம்பித்தோம். எங்கள் சிறுவர்களையும் நோன்பு பிடிக்க வைப்போம். பஞ்சினால் செய்த விளையாட்டு சாமான்களை அவர்களுக்கு செய்து கொடுப்போம். அவர்களில் ஒருவர் உணவிற்காக அழுதால் அதை (விளையாட்டு பொருளை) அவருக்கு கொடுப்போம். அது அவரிடம் நோன்பு திறக்கின்றவரை இருக்கும்.[2]

---

1. அறிவிப்பாளர்: அலீ ﵁, நூல்: சுனன் அபூ தாவூத், ஹதீஸ் எண்: 3823.
2. அறிவிப்பாளர்: ருபய்யிஃ பின்த் முஅவ்வித் ﵂, நூல்: ஸஹீஹுல் புகாரி 1824.





وَقَالَ عُمَرُ ﵁ لِنَشْوَانٍ فِي رَمَضَانَ وَيْلَكَ وَصِبْيَانُنَا صِيَامٌ فَضَرَبَهُ رَوَاهُ البخاري في كتاب الصوم

ரமழான் மாதத்தில் நோன்பில்லாமல் இருந்த நஷ்வான் என்ற நபரை உமர் ﵁ அவர்களிடம் அழைத்து வரப்பட்டபோது அவர்கள் கூறினார்கள்: உனக்கு கேடு உண்டாகட்டும்! எங்கள் சிறுவர்களும் நோன்பாளிகளாக இருக்கின்றார்கள். (இவ்வாறு கூறி) பிறகு, அவரை அடித்தார்கள்.[1]

**மூன்றாவது நிபந்தனை:** புத்தி சரியாக இருப்பது.

ஒருவருக்கு புத்தி சரியில்லாமல் ஆகி, பைத்தியம் பிடித்து விட்டால் அவர் மீது நோன்பு கடமையல்ல. அவர் மன்னிக்கப்பட்டவர் ஆவார். அவருக்கு எப்போது அறிவு தெளிவு ஏற்படுகின்றதோ அப்போதுதான் அவர் மீது நோன்பு கடமையாகும்.

ஆதாரம்:

عَنْ عَلِيٍّ ﵁ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ رُفِعَ الْقَلَمُ عَنْ ثَلَاثَةٍ عَنِ الْمَجْنُونِ الْمَغْلُوبِ عَلَى عَقْلِهِ حَتَّى يَفِيقَ وَعَنِ النَّائِمِ حَتَّى يَسْتَيْقِظَ وَعَنِ الصَّبِيِّ حَتَّى يَحْتَلِمَ رَوَاهُ أَبُو دَاوُدَ بِرَقْمِ ٣٨٢٣

நபி ﷺ கூறினார்கள்: மூன்று நபர்களை விட்டும் சட்டம் உயர்த்தப்பட்டு விட்டது. தனது அறிவை இழந்த பைத்தியக்காரர் அவர் தெளிவடைகின்ற வரை, தூங்குபவர் அவர் விழிக்கின்ற வரை, குழந்தை அது பருவ வயதை அடைகின்ற வரை.[2]

ஆகவே, ஒருவர் பைத்தியக்காரராக இருந்தால், அவர் மீது நோன்பு கடமையாகாது. அவர் நோன்பு நோற்றால் அந்த நோன்பு சரியான நோன்பாக அமையாது. ஏனெனில், வணக்க வழிபாட்டை புரிகின்ற

1. நூல்: ஸஹீஹுல் புகாரி, பாடம்: நோன்பு.
2. அறிவிப்பாளர்: அலீ ﵁, நூல்: சுனன் அபூ தாவூத் 3823.





அளவிற்கும் அதை நிய்யத் செய்கின்ற அளவிற்கும் அவரிடம் அறிவு இல்லை. இபாதத்துகள் சரியாக ஆவதற்கு நிய்யத் அவசியம். பைத்தியக்காரருக்கு அவர் எதை செய்கிறார் என்று அவருக்குத் தெரியாது.

அமல்களுக்கு நிய்யத் அவசியம் என்பதற்கு ஆதாரம்:

**عَن عُمَرَ بْن الْخَطَّابِ ﷺ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ إِنَّمَا الْأَعْمَالُ بِالنِّيَّاتِ وَإِنَّمَا لِكُلِّ امْرِئٍ مَا نَوَى فَمَنْ كَانَتْ هِجْرَتُهُ إِلَى اللهِ وَرَسُولِهِ فَهِجْرَتُهُ إِلَى اللهِ وَرَسُولِهِ وَمَنْ كَانَتْ هِجْرَتُهُ لِدُنْيَا يُصِيبُهَا أَوْ امْرَأَةٍ يَتَزَوَّجُهَا فَهِجْرَتُهُ إِلَى مَا هَاجَرَ إِلَيْهِ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١**

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: அமல்கள் எல்லாம் எண்ணங்களைக் கொண்டுதான் (நிறைவேறும்). ஒவ்வொரு மனிதனுக்கும் அவர் எண்ணியதுதான் கிடைக்கும். யாருடைய ஹிஜ்ரத் அல்லாஹ்வின் பக்கமும் அவனுடைய ரசூலின் பக்கமும் இருக்குமோ அவருடைய ஹிஜ்ரத்[1] அல்லாஹ்வின் பக்கமும் அவனுடைய தூதரின் பக்கமும் இருக்கும். யாருடைய ஹிஜ்ரத் அவர் அடையவிரும்புகின்ற உலகத்திற்காக இருக்குமோ, அல்லது, தான் மணக்க விரும்புகின்ற பெண்ணுக்காக இருக்குமோ அவருடைய ஹிஜ்ரத் அவர் எதன் பக்கம் ஹிஜ்ரத் செய்தாரோ அதன் பக்கம்தான் இருக்கும்.[2]

**நான்காவது நிபந்தனை:** நோன்பு வைப்பதற்கு ஆற்றல் இருக்க வேண்டும். ஒருவரால் நோன்பு வைக்க முடியாத அளவு பலவீனம் அல்லது நோய் இருந்தால் அவர் மீது 'அதா'வாக -உடனடியாக நோன்பு கடமையாகாது. அவரின் பலவீனம் எப்போது நீங்குமோ அப்போது அவர் அந்த நோன்பை 'கழா'வாக -தாமதமாக நிறைவேற்ற வேண்டும்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

---

1. ஹிஜ்ரத் என்றால் ஒன்றை விட்டுவிட்டு மற்றொன்றின் பக்கம் செல்வது.
2. அறிவிப்பாளர்: உமர் இப்னுல் கத்தாப் ﵁, நூல்: ஸஹீஹுல் புகாரி 1.





فَمَن كَانَ مِنكُم مَّرِيضًا أَوْ عَلَى سَفَرٍ فَعِدَّةٌ مِّنْ أَيَّامٍ أُخَرَ

ஆனால் (ரமழான் மாதத்தில் உங்களில்) யாராவது நோயாளி யாகவோ அல்லது பிரயாணத்திலோ இருந்தால் (ரமழான் அல்லாத) மற்ற நாட்களில் (விட்டுப்போன நோன்பைக்) கணக்கிட்டு (நோற்று) விடவும். (அல்குர்ஆன் 2:184)

பலவீனம் இரண்டு வகைப்படும். ஒன்று தற்காலிகமான, நீங்கிவிடக்கூடிய பலவீனம். இதைப் பற்றித்தான் மேலுள்ள வசனத்தில் கூறப்பட்டுள்ளது. ஆகவே, ஒருவர் ரமழான் மாதத்தில் நோயுற்று இருந்தால் அவர் மீது அப்போது நோன்பு வைப்பது கடமை இல்லை. அவர் உடல் நலம்பெற்று சுகமடைந்து விட்டால் விடுபட்ட நோன்புகளை அவர் நோற்க வேண்டும்.

இரண்டாவது வகை நிரந்தரமான, நீங்காத பலவீனமாகும். ஆகவே, யார் தீராத நோயினால் சோதிக்கப்பட்டு விடுவாரோ, அல்லது வயது முதிர்ந்து, நோன்பு வைக்க முடியாத அளவிற்கு பலவீனமடைந்து விடுவாரோ அவர் நோன்பு வைக்க மாட்டார். ஒவ்வொரு நோன்புக்கு பகரமாக ஓர் ஏழைக்கு அவர் உணவளிக்க வேண்டும்.

**ஐந்தாவது நிபந்தனை:** உள்ளூரில் இருக்க வேண்டும். ஆகவே, ஒருவர் பயணத்தில் இருந்தால் அவர் 'அதா'வாக -உடனடியாக நோன்பு வைக்க அவசியமில்லை. மாறாக அவர் பயணத்தில் இருந்து திரும்பியவுடன் நோன்பை 'கழா'வாக நிறைவேற்ற வேண்டும்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

فَمَن كَانَ مِنكُم مَّرِيضًا أَوْ عَلَى سَفَرٍ فَعِدَّةٌ مِّنْ أَيَّامٍ أُخَرَ

ஆனால் (ரமழான் மாதத்தில் உங்களில்) யாராவது நோயாளியாகவோ அல்லது பிரயாணத்திலோ இருந்தால் (ரமழான் அல்லாத) மற்ற நாட்களில் (விட்டுப்போன நோன்பைக்) கணக்கிட்டு (நோற்று) விடவும். (அல்குர்ஆன் 2:184)

**ஆறாவது நிபந்தனை:** தடைகளை விட்டு நீங்கி இருக்க வேண்டும்.





இந்த தடைகள் என்பது, குறிப்பாக பெண்களுக்குள்ள மாதவிடாய், பிரசவ உதிரப்போக்கு ஆகியவையாகும். ஆகவே, மாதவிடாயுள்ள பெண்ணும் பிரசவ உதிரப்போக்குள்ள பெண்ணும் நோன்பு வைக்கக் கூடாது. மாறாக, விடுபட்ட நோன்புகளை சுத்தமடைந்தவுடன் அவர்கள் நோற்க வேண்டும்.

ஆதாரம்:

**عَنْ أَبِي سَعِيدٍ ﵁ قَالَ قَالَ النَّبِيُّ ﷺ أَلَيْس إِذَا حَاضَتْ لَمْ تُصَلِّ وَلَمْ تَصُمْ فَذٰلِكَ نُقْصَانُ دِينِهَا رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٨١٥**

நபி ﷺ கூறினார்கள்: பெண்ணுக்கு மாதவிடாய் வந்துவிட்டால் அவள் தொழாமல், நோன்பு வைக்காமல் இருப்பதில்லையா? அதுதான் அவளுடைய மார்க்கம் குறைவாக இருப்பதாகும்.[1]

**عَنْ عَائِشَةَ ﵂ قَالَتْ كَانَ يُصِيبُنَا ذٰلِكَ فَنُؤْمَرُ بِقَضَاءِ الصَّوْمِ وَلَا نُؤْمَرُ بِقَضَاءِ الصَّلَاةِ رَوَاهُ مُسْلِمٌ بِرَقْمِ ٥٠٨**

எங்களுக்கு அது (-மாதவிடாய் அல்லது பிரசவ உதிரப் போக்கு) ஏற்படும். நாங்கள் நோன்பை கழா செய்வதற்கு பணிக்கப்படுவோம். தொழுகையை கழா செய்வதற்கு பணிக்கப்பட மாட்டோம்.[2]

---------

1. அறிவிப்பாளர்: அபூ சயீது ﵁, நூல்: ஸஹீஹுல் புகாரி 1815.
2. அறிவிப்பாளர்: ஆயிஷா ﵂, நூல்: ஸஹீஹுல் புகாரி 508.



# நோன்பின் ருக்னுகள்

ஒரு வணக்கத்தின் உள்ளே இருக்கின்ற கட்டாயமான அம்சங்களுக்கு ‘ருக்ன்’ என்றும் ஒரு வணக்கத்தை ஆரம்பிப்பதற்கு கட்டாயம் தேவையான அம்சங்களுக்கு ‘ஷர்த்’ என்றும் கூறப்படும்.

நோன்பிற்கு இரண்டு ருக்னுகள் உள்ளன.

**முதல் ருக்ன்:** நிய்யத். அதாவது உள்ளத்தில் ஒன்றை நினைப்பது. நோன்பு வைப்பவர் தனது மனதில் தான் செய்கின்ற இபாதத்தை நினைக்க வேண்டும். இங்கு இரண்டு விஷயங்களை கவனிக்க வேண்டும்.

**முதல் விஷயம்**: தான் அந்த இபாதத்தை (-வணக்க வழிபாட்டை) யாருக்காக செய்கின்றோம் என்று மனதில் எண்ண வேண்டும். அதாவது, அல்லாஹ்விற்காக மட்டும், அவனது திருப்பொருத்தத்தை தேடி, அவனுடைய நன்மையை ஆதரவு வைத்து இந்த வணக்கத்தை செய்கிறேன் என்று எண்ணம் இருக்க வேண்டும்.

ஆதாரம்: அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

**وَمَا أُمِرُوا إِلاَّ لِيَعْبُدُوا اللهَ مُخْلِصِينَ لَهُ الدِّينَ حُنَفَاء**

அவர்கள் அல்லாஹ்வை வணங்க வேண்டும், வழிபாட்டை அவனுக்கு மட்டும் தூய்மையாக்கியவர்களாக, இணை வைப்பதை விட்டு முற்றிலும் விலகியவர்களாக என்பதைத் தவிர வேறு கட்டளை அவர்களுக்கு கொடுக்கப்படவில்லை. (அல்குர்ஆன் 98:5)

**عَنْ عُمَرَ بْنِ الْخَطَّابِ ﵁ يَقُولُ قَالَ رَسُولُ اللهِ ﷺ إِنَّمَا الْأَعْمَالُ بِالنِّيَّاتِ**





وَإِنَّمَا لِكُلِّ امْرِئٍ مَا نَوَى فَمَنْ كَانَتْ هِجْرَتُهُ إِلَى اللهِ وَرَسُولِهِ فَهِجْرَتُهُ إِلَى اللهِ وَرَسُولِهِ وَمَنْ كَانَتْ هِجْرَتُهُ لِدُنْيَا يُصِيبُهَا أَوْ امْرَأَةٍ يَتَزَوَّجُهَا فَهِجْرَتُهُ إِلَى مَا هَاجَرَ إِلَيْهِ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: அமல்கள் எல்லாம் எண்ணங்களைக் கொண்டுதான் (நிறைவேறும்). ஒவ்வொரு மனிதனுக்கும் அவர் எண்ணியதுதான் கிடைக்கும். யாருடைய ஹிஜ்ரத் அல்லாஹ்வின் பக்கமும் அவனுடைய ரசூலின் பக்கமும் இருக்குமோ அவருடைய ஹிஜ்ரத் அல்லாஹ்வின் பக்கமும் அவனுடைய தூதரின் பக்கமும் இருக்கும். யாருடைய ஹிஜ்ரத், தான் அடைய விரும்புகின்ற உலகத்திற்காக இருக்குமோ, அல்லது தான் மணக்க விரும்புகின்ற பெண்ணுக்காக இருக்குமோ அவருடைய ஹிஜ்ரத் அவர் எதன் பக்கம் ஹிஜ்ரத் செய்தாரோ அதன் பக்கம்தான் இருக்கும்.[1]

**இரண்டாவது விஷயம்:** எந்த இபாதத்தை -வணக்கத்தை செய்யப் போகிறோமோ அதை மனதில் நினைப்பது. உதாரணமாக ளுஹ்ர் தொழுகையை, அல்லது அஸ்ர் தொழுகையை தொழப் போகிறேன், ரமழானின் ஃபர்ழான நோன்பை நோற்கிறேன், இன்ன நேர்ச்சையின் நோன்பை நோற்கிறேன், ரமழானில் இன்ன நாளில் விடுபட்ட நோன்பை நோற்கிறேன், இன்ன குற்றத்திற்கான பரிகார நோன்பை நோற்கிறேன், திங்கள் கிழமையின் நஃபிலான -உபரியான நோன்பை நோற்கிறேன்... இவ்வாறு, தாம் எந்த இபாதத்தை செய்யப்போகிறோம் என்று குறிப்பிட்டு அந்த இபாதத்தை மனதில் எண்ண வேண்டும். பொதுவாக அறிஞர்கள் இந்த நிய்யத்தைத்தான் தங்களது நூல்களில் கூறுவது வழக்கம்.

நோன்பின் முதல் ருக்னாகிய நிய்யத்தில் இந்த இரண்டு அம்சங்களும் இருக்க வேண்டும். அதாவது, அல்லாஹ்விற்காக மனத்தூய்மையுடன் செய்கிறேன் என்ற எண்ணம் இருப்பதுடன், எந்த நோன்பை நோற்கப் போகிறோம் என்ற எண்ணமும் இருக்க வேண்டும்.

---

1. அறிவிப்பாளர்: உமர் இப்னுல் கத்தாப் ؓ, நூல்: ஸஹீஹுல் புகாரி 1.





இந்த நிய்யத்தை ரமழான் நோன்பிலும் மற்ற கடமையான நோன்புகளிலும் கண்டிப்பாக இரவிலேயே வைக்க வேண்டும்.

ஆதாரம்:

عَنْ حَفْصَةَ ﵂ زَوْجِ النَّبِيِّ ﷺ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ مَنْ لَمْ يُجْمِعْ الصِّيَامَ قَبْلَ الْفَجْرِ فَلَا صِيَامَ لَهُ رَوَاهُ أَبُو دَاوُدَ بِرَقْمِ ٢٠٩٨

ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: யார் ஒருவர் ஃபஜ்ர் அதிகாலைக்கு முன்பே நோன்பை முடிவு செய்யவில்லையோ அவருக்கு நோன்பே இல்லை.[1]

وَعَنْ حَفْصَةَ ﵂ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ مَنْ لَمْ يُبَيِّتِ الصِّيَامَ قَبْلَ الْفَجْرِ فَلَا صِيَامَ لَهُ رَوَاهُ النَّسَائِيُّ بِرَقْمِ ٢٢٩١

நபி ﷺ கூறினார்கள்: யார் நோன்பு நோற்பதை இரவிலேயே முடிவு செய்யவில்லையோ அவருக்கு நோன்பே இல்லை.[2]

وَعَنْ حَفْصَةَ ﵂ قَالَتْ قَالَ رَسُولُ اللهِ ﷺ لَا صِيَامَ لِمَنْ لَمْ يَفْرِضْهُ مِنَ اللَّيْلِ رَوَاهُ ابْنُ مَاجَةَ بِرَقْمِ ١٦٩٠

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: யார் ஒருவர் இரவிலேயே நோன்பை கடமையாக்கிக் கொள்ளவில்லையோ அவருக்கு நோன்பே இல்லை.[3]

மேற்கூறப்பட்ட ஹதீஸ்களைப் பார்க்கும்போது ரமழானுடைய நோன்பை நோற்பதற்கு இரவிலேயே நிய்யத் செய்துவிட வேண்டும் என்பது உறுதியாகிறது.

ஆகவே, ரமழானின் முதல் இரவில் நான் இந்த ரமழான் மாதம் முழுவதும் நோன்பு வைப்பேன் என்று நிய்யத் செய்துவிட வேண்டும்.

---

1. அறிவிப்பாளர்: ஹஃப்ஸா ﵂, நூல்: சுனன் அபூ தாவூத் 2098.
2. அறிவிப்பாளர்: ஹஃப்ஸா ﵂, நூல்: சுனன் நசாயி 2291.
3. அறிவிப்பாளர்: ஹஃப்ஸா ﵂, நூல்: சுனன் இப்னு மாஜா 1690.





பிறகு, ஒவ்வொரு இரவிலும் நாளை நான் நோன்பு இருக்கிறேன் என்று நிய்யத் செய்ய வேண்டும்.

இவ்வாறே, ரமழான் மாதத்தில் ஒருவருக்கு நோன்பு தவறி விட்டால் அவர் விடுபட்ட இன்ன நோன்பை வைக்கிறேன் என்று இரவிலேயே நிய்யத் செய்ய வேண்டும். மேலும் நேர்ச்சை, குற்றப்பரிகார நோன்புகள் அனைத்திலும் ஒவ்வொருநாள் இரவிலும் தான் நாளை வைக்கப்போகின்ற நோன்பை மனதில் நிய்யத் செய்ய வேண்டும்.

**இரண்டாவது ருக்ன்:** ஃபஜ்ர், அதாவது ஸுப்ஹ் தொழுகைக்கான நேரம் வந்ததிலிருந்து சூரியன் மறைகின்ற வரை நோன்பை முறிக்கின்ற எல்லா செயல்களை விட்டும் தன்னை தடுத்துக் கொள்ள வேண்டும்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

**فَالْآنَ بَاشِرُوهُنَّ وَابْتَغُواْ مَا كَتَبَ اللّهُ لَكُمْ وَكُلُواْ وَاشْرَبُواْ حَتَّى يَتَبَيَّنَ لَكُمُ الْخَيْطُ الأَبْيَضُ مِنَ الْخَيْطِ الأَسْوَدِ مِنَ الْفَجْرِ ثُمَّ أَتِمُّواْ الصِّيَامَ إِلَى الَّليْلِ.**

ஆகவே, இனி இருள் நீங்கி விடியற்காலை (ஃபஜ்ர்) ஆகிவிட்டது என்று உங்களுக்குத் தெளிவாகும் வரையில் (நோன்பின் இரவு காலங்களில் உங்கள்) மனைவிகளுடன் சேர்ந்து அல்லாஹ் உங்களுக்கு(ச் சந்ததியாக) விதித்திருப்பதைத் தேடிக் கொள்ளுங்கள். இன்னும் (அந்நேரங்களில்) புசியுங்கள், பருகுங்கள். (கிழக்கு வெளுத்த) பின்பு இரவு (ஆரம்பமாகும்) வரை (மேலே கூறியவற்றைத் தவிர்த்து) நோன்புகளை (நோற்று) முழுமையாக்குங்கள். (அல்குர்ஆன் 2:187)

---------



# நோன்பை
# விடுவதற்குரிய காரணங்கள்

ரமழானுடைய பகல் காலத்தில் நோன்பை விடுவதற்கு அறிஞர்கள் ஒன்பது காரணங்களை கூறியிருக்கின்றார்கள்.

**முதல் காரணம்:** தற்காலிக நோயாளியாக இருப்பது.

நீங்கிவிடக்கூடிய, விரைவில் சுகம்பெறக்கூடிய நோய்களில் உள்ளவர்கள் நோன்பு நோற்காமல், தான் சுகமடைந்தவுடன் நோன்பு வைக்காமல் இருந்த நாட்களைக் கணக்கிட்டு ரமழான் முடிந்தவுடன் அந்த நாட்களின் நோன்பை நோற்க வேண்டும்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

أَيَّامًا مَّعْدُودَاتٍ فَمَن كَانَ مِنكُم مَّرِيضًا أَوْ عَلَىٰ سَفَرٍ فَعِدَّةٌ مِّنْ أَيَّامٍ أُخَرَ.

குறிப்பிட்ட நாட்களில்தான் (நோன்பு நோற்பது கடமையாகும்). ஆயினும் (அந்நாள்களில்) உங்களில் யாராகிலும் நோயாளியாகவோ அல்லது பிரயாணத்திலோ இருந்தால் (அவர் நோன்பு நோற்க வேண்டியதில்லை. அதை ரமழான் அல்லாத) மற்ற நாள்களில் கணக்கி(ட்டு நோற்று வி)டவும். (அல்குர்ஆன் 2:184)

فَمَن شَهِدَ مِنكُمُ الشَّهْرَ فَلْيَصُمْهُ وَمَن كَانَ مَرِيضًا
أَوْ عَلَىٰ سَفَرٍ فَعِدَّةٌ مِّنْ أَيَّامٍ أُخَرَ.

ஆகவே, உங்களில் எவர் அம்மாதத்தை அடைகிறாரோ அவர் அதில் நோன்பு நோற்கவும். ஆனால் (அக்காலத்தில் உங்களில்) யாராகிலும் நோயாளியாகவோ அல்லது பிரயாணத்திலோ இருந்தால் (ரமழான் அல்லாத) மற்ற நாள்களில் (விட்டுப்போன நாள்களின்





நோன்பைக்) கணக்கிட்டு (நோற்று) விடவும். (அல்குர்ஆன் 2: 185)

ரமழான் மாதத்தில் நோயாளியாக இருப்பவர் மூன்று வகைப்படுவார்கள்.

1) நோன்பு வைப்பது அவருக்கு சிரமமாக இருக்காது. நோன்பு வைப்பதால் அவருக்கு எந்த தீங்கும், ஆபத்தும் ஏற்படாது. (உதாரணமாக நோய் அதிகரிப்பதைப் போன்று, மயக்கம் ஏற்படுவதைப் போன்று.)

இப்படிப்பட்ட நோயாளி கண்டிப்பாக நோன்பு வைக்க வேண்டும். ஏனெனில், நோன்பை விடுகின்ற அளவிற்கு காரணம் இவருக்கு இல்லை.

2) நோன்பு வைப்பது சிரமமாக இருக்கும். ஆனால், அது அவருக்கு தீங்கை ஏற்படுத்தாது.

இந்த நிலையில் இருப்பவர் சலுகையைப் பயன்படுத்தி நோன்பைவிட வேண்டும். இவர் நோன்பு வைப்பது வெறுக்கப்பட்டதாகும். ஏனெனில், இது அல்லாஹ் கொடுத்த சலுகையை பயன்படுத்தாமல் தன்னை வருத்திக் கொள்வதாகும்.

**عَنِ ابْنِ عُمَرَ ﵄ قَالَ قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ إِنَّ اللّٰهَ يُحِبُّ أَنْ تُؤْتَى رُخَصُهُ كَمَا يَكْرَهُ أَنْ تُؤْتَى مَعْصِيَتُهُ رَوَاهُ أَحْمَدُ بِرَقْمِ ٥٦٠٠**

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: நிச்சயமாக அல்லாஹ் தனது சலுகைகளை (அடியார்கள்) செய்ய வேண்டும் என்று விரும்புகின்றான், அவனுக்கு (அடியார்கள்) மாறுசெய்வதை அவன் வெறுப்பது போன்று.[1]

அறிஞர் இப்னு ஹஸ்ம் ؒ கூறுகிறார்: நோயாளி தனக்குத் தானே ஆர்வப்பட்டு, சிரமம் எடுத்து அவர் நோன்பு வைத்தால் அவருக்கு அந்த நோன்பு கூடிவிடும். மேலும், ஒருவருக்கு நோன்பு வைப்பது சிரமமாக இருந்து, அவரால் நோன்பு வைக்க இயலவில்லை

1. அறிவிப்பாளர்: இப்னு உமர் ﵄, நூல்: முஸ்னது அஹ்மது, ஹதீஸ் எண்: 5600.





என்றால், அவர் நோன்பை விட்டுவிடலாம். இதுதான் அறிஞர்களின் முடிவான கருத்தாகும்.

3) நோன்பு வைப்பதால் அவருக்கு தீங்கு ஏற்படுவது. இப்படிப்பட்டவர் கண்டிப்பாக நோன்பை விட்டுவிட வேண்டும். அவர் நோன்பு வைப்பது ஆகுமானதல்ல.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَلاَ تَقْتُلُواْ أَنفُسَكُمْ إِنَّ اللهَ كَانَ بِكُمْ رَحِيمًا

உங்களை நீங்கள் அழித்துக்கொள்ளாதீர்கள்! நிச்சயமாக அல்லாஹ் உங்கள் மீது மிகக் கருணையுள்ளவனாக இருக்கின்றான்.

(அல்குர்ஆன் 4:29)

وَلاَ تُلْقُواْ بِأَيْدِيكُمْ إِلَى التَّهْلُكَةِ

உங்களை நீங்களே ஆபத்திற்குள்ளாக்கிக் கொள்ளாதீர்கள்.

(அல்குர்ஆன் 2:195)

**وَعَنْ عَوْنِ بْنِ أَبِي جُحَيْفَةَ عَنْ أَبِيهِ ﵁ قَالَ آخَى النَّبِيُّ ﷺ بَيْنَ سَلْمَانَ وَأَبِي الدَّرْدَاءِ ﵁ فَزَارَ سَلْمَانُ ﵁ أَبَا الدَّرْدَاءِ ﵁ فَرَأَى أُمَّ الدَّرْدَاءِ ﵂ مُتَبَذِّلَةً فَقَالَ لَهَا مَا شَأْنُكِ قَالَتْ أَخُوكَ أَبُو الدَّرْدَاءِ ﵁ لَيْسَ لَهُ حَاجَةٌ فِي الدُّنْيَا فَجَاءَ أَبُو الدَّرْدَاءِ ﵁ فَصَنَعَ لَهُ طَعَامًا فَقَالَ كُلْ فَإِنِّي صَائِمٌ قَالَ مَا أَنَا بِآكِلٍ حَتَّى تَأْكُلَ فَأَكَلَ فَلَمَّا كَانَ اللَّيْلُ ذَهَبَ أَبُو الدَّرْدَاءِ ﵁ يَقُومُ فَقَالَ نَمْ فَنَامَ ثُمَّ ذَهَبَ يَقُومُ فَقَالَ نَمْ فَلَمَّا كَانَ آخِرُ اللَّيْلِ قَالَ سَلْمَانُ ﵁ قُمْ الْآنَ قَالَ فَصَلَّيَا فَقَالَ لَهُ سَلْمَانُ ﵁ إِنَّ لِرَبِّكَ عَلَيْكَ حَقًّا وَلِنَفْسِكَ عَلَيْكَ حَقًّا وَلِأَهْلِكَ عَلَيْكَ حَقًّا فَأَعْطِ كُلَّ ذِي حَقٍّ حَقَّهُ فَأَتَى النَّبِيَّ ﷺ فَذَكَرَ ذَلِكَ لَهُ فَقَالَ النَّبِيُّ ﷺ صَدَقَ سَلْمَانُ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ٥٦٧٤**





சல்மான் இன்னும் அபுத் தர்தா ﵄ ஆகிய இருவருக்கும் இடையில் நபி ﷺ அவர்கள் சகோதரத்துவத்தை ஏற்படுத்தினார்கள். ஒருநாள் அபுத் தர்தா ﵁ அவர்களை சல்மான் ﵁ சந்திக்க வந்தபோது உம்மு தர்தா ﵂ மிகவும் பழமையான ஆடையில் இருப்பதைப் பார்த்தார். உனக்கென்ன நேர்ந்தது? இப்படி இருக்கின்றாயே! என்று அவரிடம் சல்மான் ﵁ கேட்டார். அவர் (-உம்மு தர்தா) கூறினார்: உமது சகோதரர் அபுத் தர்தா ﵁ இருக்கின்றாரே அவருக்கு உலகத்தில் ஏதும் தேவை இல்லை.

சிறிது நேரத்தில் அபுத் தர்தா ﵁ அங்கு வந்தார். அவர் அவருக்கு (-சல்மானுக்கு) உணவு ஏற்பாடு செய்து சாப்பிடுங்கள், நான் நோன்பு வைத்திருக்கின்றேன் என்று கூறினார். சல்மான் ﵁ கூறினார்: நீங்கள் சாப்பிடாதவரை நான் சாப்பிட மாட்டேன். உடனே, அபுத் தர்தாவும் சாப்பிட்டார். இரவானவுடன், அபுத் தர்தா ﵁ தொழுவதற்கு செல்ல ஆயத்தமானார்.

சல்மான் ﵁ கூறினார்: தூங்குங்கள்! அவர் தூங்கினார். பிறகு எழுந்து தொழுவதற்கு அபுத் தர்தா ﵁ ஆயத்தமனார். சல்மான் ﵁ கூறினார்: தூங்குங்கள்! பிறகு, இரவின் இறுதி பகுதியானவுடன் சல்மான் ﵁ கூறினார்: இப்போது எழுங்கள்! பிறகு, இருவரும் எழுந்து தொழுதார்கள்.

அப்போது சல்மான் ﵁ அவருக்கு (-அபுத் தர்தாவிற்கு) கூறினார்: நிச்சயமாக உமது ரப்புக்கு உன் மீது கடமை இருக்கின்றது. உனது ஆன்மாவிற்கு உன் மீது கடமை இருக்கின்றது. உமது குடும்பத்தாருக்கு உன் மீது கடமை இருக்கின்றது. ஆகவே, கடமையுள்ள ஒவ்வொருவருக்கும் அவரவரின் கடமையை செய்யுங்கள். பிறகு, அபுத் தர்தா ﵁ நபி ﷺ அவர்களிடம் வந்து, இந்த விஷயத்தை அவர்களிடம் கூறினார். சல்மான் உண்மையை கூறினார் என்று நபி ﷺ கூறினார்கள்.[1]

ஒருவருக்கு ரமழானுடைய பகல் காலத்தில் நோன்பு வைத்திருக்கும் போது அவருக்கு நோய் ஏற்பட்டு, நோன்பை முழுமைப்படுத்துவது

1. அறிவிப்பாளர்: அபூ ஜுஹைஃபா ﵁, நூல்: ஸஹீஹுல் புகாரி, ஹதீஸ் எண்: 5674.





அவருக்கு சிரமமாக ஆகிவிட்டால், அவர் நோன்பை முறித்து விடலாம். ஏனெனில், நோன்பை விடுவதற்குரிய தகுந்த காரணம் இருக்கின்றது.

ரமழானுடைய பகலில் நோயின் காரணமாக, அல்லது வேறு ஒரு தகுந்த காரணத்தினால் நோன்பு வைக்காமல் இருப்பவர் அந்த நோயிலிருந்து சுகமடைந்துவிட்டால், அல்லது அந்த காரணம் அவருக்கு நீங்கிவிட்டால் மீதமுள்ள பகலில் அவர் நோன்பின் நிய்யத்தை செய்ய முடியாது. ஏனெனில், இரவில் நிய்யத் வைத்து, விடியற்காலையில் இருந்து சூரியன் மறைகின்ற வரை நோன்பை முறிக்கின்ற அனைத்து விதமான செயல்களில் இருந்து விலகி இருப்பது நோன்பு நிறைவேறுவதற்கு அவசியமாகும்.

இப்படிப்பட்டவர் பகலின் மீதமுள்ள நேரத்தில் நோன்பாளியைப் போன்று இருக்க வேண்டும். பிறகு, ரமழான் முடிந்தவுடன் நோன்பு வைக்கமுடியாமல் இருந்த நாட்களை அவர் கழா செய்ய வேண்டும்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

فَعِدَّةٌ مِّنْ أَيَّامٍ أُخَرَ.

மற்ற நாட்களில் (விட்டுப்போன நாட்களின் நோன்பைக்) கணக்கிட்டு (நோற்று)விடவும். (அல்குர்ஆன் 2 : 184)

ஒரு நோயாளிக்கு அவர் நோன்பு வைப்பதால் நோய் அதிகமாகிவிடும், அல்லது சுகம் அடைவது தாமதமாகும், அல்லது, வேறு ஒரு பிரச்சனையை நோன்பு ஏற்படுத்திவிடும் என்று நம்பத்தகுந்த, திறமையான, முஸ்லிம் மருத்துவர் ஒருவர் கூறினால், அந்த நோயாளி தனது உடல் நலத்தை பேணுவதற்காக நோன்பு வைக்காமல் இருப்பது, அல்லது வைத்த நோன்பை முறித்து விடுவது கூடும்.

**இரண்டாவது காரணம்:** முற்றிலும் பலவீனப்பட்டுள்ள நோயாளி அல்லது, தனது நோயிலிருந்து சுகம் அடைவோம் என்று ஆதரவு வைக்க முடியாதவர் அல்லது, வயது அதிகமாகி விட்டதால் நோன்பு வைக்க முடியாத அளவிற்கு பலவீனமடைந்தவர். இப்படிப்பட்டவர்கள்





நோன்பு வைப்பது கடமையல்ல. காரணம், இவர்கள் நோன்பு வைக்க சக்தி பெறமாட்டார்கள்.

ஒரு நோயாளியால் நோன்பு வைக்க முடியாது என்பதை நம்பிக்கைக்குரிய, திறமையுள்ள முஸ்லிம் மருத்துவர் ஒருவர் உறுதி செய்ய வேண்டும்.

அல்லாஹுூ தஆலா கூறுகின்றான்:

فَاتَّقُوا اللّٰه مَا اسْتَطَعْتُمْ

உங்களுக்கு சாத்தியமான வரை அல்லாஹ்வுக்குப் பயந்து கொள்ளுங்கள்! (அல்குர்ஆன் 64:16)

لاَ يُكَلِّفُ اللّٰه نَفْسًا إِلاَّ وُسْعَهَا

அல்லாஹ் யாதொரு ஆத்மாவையும் அதன் சக்திக்கு மேல் நிர்ப்பந்திப்பதில்லை. (அல்குர்ஆன் 2:286)

அறிஞர் இப்னுல் முன்திர் ﵀ கூறுகிறார்: நோன்பு வைக்க முடியாத அளவிற்கு பலவீனமடைந்துள்ள மிகவும் வயதான முதியோர்களுக்கும் நோன்பை விடுவதற்கு அனுமதி உள்ளது. இதுதான் எல்லோரின் ஒருமித்த கருத்தாகும்.

எனினும், ஒவ்வொரு நாளின் நோன்புக்காகவும் அவர் ஏழை ஒருவருக்கு உணவளிக்க வேண்டும். நோன்பு கடமையாக்கப்பட்ட போது ஒன்று நோன்பு வைக்கலாம். அல்லது, நோன்பு வைக்காமல், அதற்கு பதிலாக ஓர் ஏழைக்கு உணவளிக்கலாம் என்று அனுமதி இருந்தது. ஓர் ஏழைக்கு உணவளிப்பது ஒரு நோன்புக்கு சமமாக இருப்பதால் நோன்பு வைக்க முடியாமல் போனவர்கள் ஒரு நோன்புக்குப் பதிலாக ஓர் ஏழைக்கு உணவளிக்க வேண்டும் என்பதை நாம் அறிய முடிகிறது.

قَالَ ابْنُ عَبَّاسٍ ﵄ لَيْسَتْ بِمَنْسُوخَةٍ هُوَ الشَّيْخُ الْكَبِيرُ وَالْمَرْأَةُ الْكَبِيرَةُ





لَا يَسْتَطِيعَانِ أَنْ يَصُومَا فَيُطْعِمَانِ مَكَانَ كُلِّ يَوْمٍ مِسْكِينًا رَوَاهُ الْبُخَارِيُّ فِي الصَّحِيْحِ فِي كِتَابِ التَّفْسِيْرِ

இப்னு அப்பாஸ் ﵄ கூறுகிறார்கள்: இந்த வசனம் மாற்றப்படவில்லை. வயது முதிர்ந்த ஆடவர், வயது முதிர்ந்த மூதாட்டி, இவர்களால் நோன்பு வைக்க முடியவில்லை என்றால் அவர்கள் ஒவ்வொரு நாள் நோன்புக்கு பகரமாக ஓர் ஏழைக்கு உணவளிக்க வேண்டும்.[1]

وَقَالَ الْإِمَامُ الْبُخَارِيُّ ﵀ وَأَمَّا الشَّيْخُ الْكَبِيرُ إِذَا لَمْ يُطِقْ الصِّيَامَ فَقَدْ أَطْعَمَ أَنَسٌ ﵁ بَعْدَ مَا كَبِرَ عَامًا أَوْ عَامَيْنِ كُلَّ يَوْمٍ مِسْكِينًا خُبْزًا وَلَحْمًا وَأَفْطَرَ

இமாம் புகாரி ﵀ கூறுகிறார்கள்: வயது முதிர்ந்த பெரியவர்கள் நோன்பு வைப்பதற்கு ஆற்றல் பெறவில்லை என்றால் அவர்கள் அனஸ் ﵁ அவர்கள் செய்தது போன்று செய்யலாம். அனஸ் ﵁ அவர்கள் வயது முதிர்ந்தபோது ஓர் ஆண்டோ அல்லது இரண்டு ஆண்டுகளோ ஒவ்வொரு நாள் நோன்புக்கு பகரமாக ரொட்டியையும் கறியையும் செய்து ஓர் ஏழைக்கு உணவளித்தார்கள். இன்னும் நோன்பை விட்டுவிட்டார்கள்.

வயது முதிர்ந்துவிட்ட காரணத்தால் அல்லது நோயின் காரணத்தால் நோன்புவைக்க முடியாமல் போனவர்கள் உணவளிக்கின்ற விஷயத்தில் பின்வரும் இரண்டு வழிமுறைகளில் எதை வேண்டுமானாலும் பின்பற்றலாம்.

**வழிமுறை 1:** ஒவ்வொரு நோன்பிற்கு பகரமாக ஓர் ஏழைக்கு பாதி ‘ஸாஃ’ உணவை (கோதுமையை, அல்லது அரிசியை, அல்லது பேரித்தம் பழத்தை) கொடுக்கலாம்.

ஏனெனில், கஃப் இப்னு உஜ்ரா ﵁ என்ற தோழருக்கு இஹ்ராமுடைய நிலையில் பேன் அதிகரித்துவிட்ட காரணத்தால் தலைமுடியை சிரைத்துக்கொண்ட குற்றப் பரிகாரத்திற்காக மூன்று நோன்பு வை!

1. நூல்: ஸஹீஹுல் புகாரி, அத்தியாயம் தஃப்சீர் -அல் குர்ஆன் விரிவுரை.

அல்லது ஆறு ஏழைகளுக்கு உணவளி! ஒவ்வோர் ஏழைக்கும் பாதி 'ஸாஃ'[1] என்று நபி ﷺ கூறினார்கள்.[2]

**வழிமுறை 2:** நல்லமுறையில் உணவு செய்து விடுபட்ட நோன்புகளின் எண்ணிக்கையின் அளவிற்கு ஏழைகளை அழைத்து அவர்களுக்கு உணவளிப்பது. அனஸ் இப்னு மாலிக் ﵁ இவ்வாறு செய்ததாக இமாம் புகாரி ﵀ செய்தி பதிவு செய்துள்ளார்கள்.

அனஸ் ﵁ அவர்கள் வயது முதிர்ந்து விட்டபோது ஓர் ஆண்டோ அல்லது இரண்டு ஆண்டுகளோ ஒவ்வொரு நோன்புக்கு பகரமாக ரொட்டியையும் கறியையும் செய்து ஓர் ஏழைக்கு உணவளித்தார்கள். இன்னும் நோன்பை விட்டுவிட்டார்கள்.[3]

அறிஞர் இப்னு பாஸ் ﵀ கூறுகிறார்: வயது முதிர்ந்தவர்கள் ஆணோ, பெண்ணோ நோன்பு வைப்பது அவர்களுக்கு சிரமத்தை ஏற்படுத்தினால் அவர்கள் நோன்பை விட்டுவிடலாம். ஒரு நாள் நோன்புக்கு பதிலாக ஓர் ஏழைக்கு உணவளிக்க வேண்டும். உணவு தயார் செய்து விடுபட்ட நோன்பின் எண்ணிக்கை அளவு ஏழைகளை அழைத்து உணவளிப்பது. அல்லது ஒரு நோன்புக்கு பதிலாக பாதி 'ஸாஃ' பேரித்தம் பழத்தையோ, அல்லது கோதுமையையோ, அல்லது அரிசியையோ ஓர் ஏழைக்கு வழங்குவது.

**மூன்றாவது காரணம்:** தொழுகையை சுருக்குவதற்கு அனுமதியுள்ள தூர அளவிற்கு பயணம் செய்பவர்.

ஒட்டகத்தின் நடை, அல்லது மனிதன் காலால் நடக்கின்ற நடுத்தரமான நடை, இப்படிப்பட்ட நடையால் மூன்று இரவுகள், மூன்று பகல்கள் அளவிற்கு செல்லக்கூடிய தூரத்தை நாடி ஒருவர் பயணம் செய்வதை இது குறிக்கிறது. இவ்வாறு ஒருவர் பயணம் செல்ல நினைத்து தனது ஊர் எல்லையை விட்டு அவர் வெளியேறி விட்டால் அவர் நோன்பை விட்டுவிடலாம்.

---

1. ஒரு ஸாஃ என்பது மூன்று கிலோவாகும் என்று சவுதியின் மேல்மட்ட ஃபத்வா குழு அறிஞர்கள் கூறுகிறார்கள்.

2. அறிவிப்பாளர்: கஃப் இப்னு உஜ்ரா ﵁, நூல்: ஸஹீஹுல் புகாரி 1686.

3. நூல்: ஸஹீஹுல் புகாரி, அத்தியாயம் தஃப்சீர் -அல்குர்ஆன் விரிவுரை.





இத்தகைய பயணத்தில்தான் ஒருவர் தொழுகையை சுருக்கித் தொழமுடியும். இன்னும் இதுபோன்ற பயணத்தில்தான் நோன்பை விடுவதும் ஆகுமாகும்.

பயணி நோன்பை விடலாம் என்பதற்கு குர்ஆன், சுன்னா மற்றும் ஏகோபித்த முடிவுகளில் ஆதாரங்கள் உள்ளன.

فَمَن كَانَ مِنكُم مَّرِيضًا أَوْ عَلَىٰ سَفَرٍ فَعِدَّةٌ مِّنْ أَيَّامٍ أُخَرَ

ஆனால் (அக்காலத்தில் உங்களில்) யாராகிலும் நோயாளியாகவோ அல்லது பிரயாணத்திலோ இருந்தால் (ரமழான் அல்லாத) மற்ற நாள்களில் (விட்டுப்போன நாள்களின் நோன்பைக்) கணக்கிட்டு (நோற்று) விடவும். (அல்குர்ஆன் 2:184)

عَنْ أَنَسٍ رضي الله عنه عَنِ النَّبِيِّ ﷺ قَالَ إِنَّ اللهَ وَضَعَ عَنِ الْمُسَافِرِ نِصْفَ الصَّلَاةِ وَالصَّوْمَ وَعَنِ الْحُبْلَى وَالْمُرْضِعِ رَوَاهُ النَّسَائِيُّ بِرَقْمِ ٢٢٣٧

நிச்சயமாக அல்லாஹ் பயணிகளுக்கு தொழுகையில் பாதியையும் நோன்பையும் தளர்த்தி விட்டான். இன்னும் கர்ப்பிணி பெண்களுக்கும் பாலூட்டும் பெண்களுக்கும் நோன்பை தளர்த்தி விட்டான்.[1]

அறிஞர் இப்னு குதாமா رحمه الله தனது நூல் முக்னியில் கூறுகிறார்: நோன்பை விடுவது பயணிக்கு ஆகுமானது என்பதிலும், தொழுகையை சுருக்குவதற்கு அனுமதியுள்ள நீண்ட பயணத்தில் மட்டும் நோன்பை விடுவது அனுமதிக்கப்பட்டது என்பதிலும் முஸ்லிம் அறிஞர்கள் ஏகோபித்த கருத்தில் உள்ளனர்.

எத்தனை நாட்களில் அல்லது எவ்வளவு தூரத்தில் தொழுகையை சுருக்குவது என்ற பாடத்தில் இமாம் புகாரி رحمه الله அவர்கள் கூறுகிறார்கள்: ஒரு நாள், ஓர் இரவு தூரத்தை பயணம் என்று நபி ﷺ குறிப்பிட்டார்கள். நான்கு 'பரீது'கள்[2] அளவுள்ள தூரத்தில்

1. அறிவிப்பாளர்: அனஸ் رضي الله عنه, நூல்: சுனன் நசாயி 2237.

2. ஒரு பரீது என்பது நான்கு ஃபர்ஸக் ஆகும். ஒரு ஃபர்ஸக் என்பது மூன்று மைல்கள் ஆகும். ஒரு மைல் என்பது 1.6 கிலோமீட்டர் ஆகும். ஆக, நான்கு பரீதுகள் என்பது 77.25 கிலோ மீட்டர்கள் ஆகும்.





இப்னு உமர் ﷺ அவர்களும் இப்னு அப்பாஸ் ﷺ அவர்களும் தொழுகையை சுருக்கும் வழக்கமுள்ளவர்களாகவும், நோன்பை விடும் வழக்கமுள்ளவர்களாகவும் இருந்தார்கள்.

ஒரு பயணி தொழுகையை சுருக்கி தொழுகின்ற அளவிற்குள்ள தூரம் பயணம் செய்பவராக இருந்தால் அவர் தனது ஊரில் மக்கள் வசிக்கின்ற இடங்களை கடந்து சென்ற பின்னர் நோன்பை விட்டுவிடலாம்.

பயணி நோன்பு வைப்பது அல்லது நோன்பை விடுவது பற்றிய விரிவான சட்ட விளக்கங்களை பக்கம் 71 மற்றும் 76ல் காண்க.

**நான்காவது காரணம்:** மாதவிடாய் அல்லது பிரசவ உதிரம் வருவது.

மாதவிடாய் உள்ள பெண்கள், பிரசவ உதிரப்போக்குள்ள பெண்கள் ஆகியோர் நோன்பு வைப்பது கூடாது, அவர்கள் நோன்பை விடவேண்டும், பிறகு, நோன்பை கழா செய்ய வேண்டும். இதுதான் அறிஞர்களின் ஏகோபித்த முடிவாகும்.

**عن مُعَاذَة رَضِيَ اللهُ عَنْهَا أَنَّ امْرَأَةً قَالَتْ لِعَائِشَةَ رَضِيَ اللهُ عَنْهَا أَتَجْزِي إِحْدَانَا صَلَاتَهَا إِذَا طَهُرَتْ فَقَالَتْ أَحَرُورِيَّةٌ أَنْتِ كُنَّا نَحِيضُ مَعَ النَّبِيِّ ﷺ فَلَا يَأْمُرُنَا بِهِ أَوْ قَالَتْ فَلَا نَفْعَلُهُ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ٣١٠**

ஒரு பெண் ஆயிஷா ﷺ அவர்களிடம் நாங்கள் சுத்தமாகி விட்டால் தொழுதால் போதுமா (அல்லது மாதவிடாய் காலத்திலும் தொழ வேண்டுமா) என்று கேட்டார். ஆயிஷா ﷺ கேட்டார்கள்: நீ என்ன காரிஜிய்யா பெண்ணா? நாங்கள் நபி ﷺ அவர்களுடன் இருந்தோம் எங்களுக்கு மாதவிடாய் வரும். எங்களை அவர்கள் தொழும்படி ஏவ மாட்டார்கள். (அல்லது ஆயிஷா ﷺ இப்படி கூறினார்கள்: நாங்கள் அதை {தொழுகையை} செய்ய மாட்டோம்.)[1]

---

1. அறிவிப்பாளர்: முஆதா ﷺ, நூல்: ஸஹீஹுல் புகாரி 310.





وَعَنْ أَبِي سَعِيدٍ ﷺ قَالَ قَالَ النَّبِيُّ ﷺ أَلَيْسَ إِذَا حَاضَتْ لَمْ تُصَلِّ وَلَمْ تَصُمْ فَذٰلِكَ نُقْصَانُ دِينِهَا رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٨١٥

நபி ﷺ கூறினார்கள்: பெண்ணுக்கு மாதவிடாய் வந்துவிட்டால் அவள் தொழாமல், நோன்பு வைக்காமல் இருப்பதில்லையா? அதுதான் அவளுடைய மார்க்கம் குறைவாக இருப்பதாகும்.[1]

மாதவிடாயின் உதிரமும் பிரசவத்திற்கு பின் வருகின்ற உதிரமும் ஒன்றுதான். ஆகவே, இருவருக்கும் ஒரு சட்டம்தான். பகலில் எந்த நேரத்தில் நிஃபாஸ் அல்லது ஹைழ் வந்துவிடுமோ அன்றைய நாளின் நோன்பு முறிந்து விடும். அது சூரியன் மறைவதற்கு ஒரு சில நிமிடங்களுக்கு முன்னர் வந்தாலும் சரிதான். தனக்கு ஹைழ் அல்லது நிஃபாஸ் இருப்பதை ஒரு பெண் தெரிந்தும் அவள் நோன்பு வைப்பது பெரும் பாவமாகும். அந்த நோன்பு அவளுக்கு கூடாது.

ரமழானுடைய பகலில் எந்த ஒரு நேரத்திலும் ஒரு பெண் சுத்தமாகிவிட்டால் அவள் அந்த நேரத்திலிருந்து நோன்பை தொடரக் கூடாது. மாறாக, மீதமுள்ள நேரம் நோன்பாளியைப் போன்று கட்டுப்பாட்டுடன் இருந்துவிட்டு அந்த நாளின் நோன்பையும் சேர்த்து அவள் ரமழான் முடிந்தவுடன் கழா செய்ய வேண்டும்.

ரமழானுடைய இரவில், அதிகாலை ஃபஜ்ருடைய நேரம் வருவதற்கு ஒரு நிமிடத்திற்கு முன்பு ஹைழ், அல்லது நிஃபாஸ் உள்ள ஒரு பெண் சுத்தமாகிவிட்டால் கண்டிப்பாக அந்த பெண் அந்த நாளில் நோன்பு வைக்க வேண்டும். அவள் பிறகு குளித்துக் கொள்ளலாம். அவள் குளித்திருக்க வேண்டும் என்பது நோன்பு வைப்பதற்கு அவசியமில்லை. அவள் சுத்தமானதுடன் நோன்பு வைப்பதற்கு தகுதி உள்ளவளாக ஆகிவிடுகிறாள். அவள் தொழுகைக்கு முன்பாக குளித்துக்கொண்டால் போதும். பெருந்தொடக்கினால் குளிப்பு கடமையானவர் குளிக்காவிட்டாலும் நோன்பு வைப்பது கட்டாயமாக இருப்பது போன்றுதான் இதுவும். தொழுகைக்காகத்தான் குளிப்பு கடமை, நோன்புக்காக அல்ல.

---

1. அறிவிப்பாளர்: அபூ சயீது ﷺ, நூல்: ஸஹீஹுல் புகாரி 1815.



عَنْ عَائِشَةَ ﵂ قَالَتْ كَانَ النَّبِيُّ ﷺ يُدْرِكُهُ الْفَجْرُ فِي رَمَضَانَ مِنْ غَيْرِ حُلْمٍ (وَهُوَ جُنُبٌ) فَيَغْتَسِلُ وَيَصُومُ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٧٩٥

ஆயிஷா ﵂ கூறுகிறார்கள்: நபி ﷺ அவர்களுக்கு ரமழான் மாதத்தில் கனவில் ஸ்கலிதம் ஆகாமல், உடலுறவு கொண்டதால் அவர்கள் பெருந்தொடக்கு உள்ளவர்களாக இருக்கின்ற நிலையில் 'ஃபஜ்ர்' -அதிகாலை அவர்களை அடையும். பிறகு, அவர்கள் குளிப்பார்கள்; நோன்பை தொடர்வார்கள்.[1]

**ஐந்தாவது காரணம்:** கர்ப்பம் தரித்தல், பிள்ளைக்குப் பாலூட்டுதல்.

يروى ابْنُ مَاجَةَ بِرَقْمِ ١٦٥٧ وفيه وَقَالَ عَلِيُّ بْنُ مُحَمَّدٍ مِنْ بَنِي عَبْدِ اللهِ بْنِ كَعْبٍ قَالَ أَغَارَتْ عَلَيْنَا خَيْلُ رَسُولِ اللهِ ﷺ فَأَتَيْتُ رَسُولَ اللهِ ﷺ وَهُوَ يَتَغَدَّى فَقَالَ ادْنُ فَكُلْ قُلْتُ إِنِّي صَائِمٌ قَالَ اجْلِسْ أُحَدِّثْكَ عَنِ الصَّوْمِ إِنَّ اللهَ عَزَّ وَجَلَّ وَضَعَ عَنِ الْمُسَافِرِ شَطْرَ الصَّلَاةِ وَعَنِ الْمُسَافِرِ وَالْحَامِلِ وَالْمُرْضِعِ الصَّوْمَ.

இமாம் இப்னு மாஜா அறிவிக்கின்ற ஒரு அறிவிப்பில் வருவதாவது: அப்துல்லாஹ் இப்னு கஃஃப் குடும்பத்தைச் சேர்ந்த அலி இப்னு முஹம்மது ﵁ கூறுகிறார்: ரசூலுல்லாஹ் ﷺ அவர்களுடைய வீரர்கள் எங்கள் மீது போர் தொடுத்தார்கள். தொடர்ந்து அவர் கூறினார்: ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் சாப்பிட்டுக் கொண்டிருந்தபோது நான் அவர்களிடம் வந்தேன்.

அவர்கள் அருகில் வா, சாப்பிடு என்று என்னிடம் கூறினார்கள். நான் நோன்பாளி என்று கூறினேன். அவர்கள் கூறினார்கள்: உட்காரு! நோன்பைப் பற்றி நான் உனக்கு கூறுகின்றேன். நிச்சயமாக அல்லாஹ் பயணிக்கு தொழுகையில் பாதியை தளர்த்தி விட்டான். இன்னும் பயணிக்கும், கர்ப்பிணிக்கும், பாலூட்டுகின்ற பெண்ணிற்கும் நோன்பை தளர்த்தி விட்டான்.[2]

---

1. அறிவிப்பாளர்: ஆயிஷா ﵂, நூல்: ஸஹீஹுல் புகாரி 1795.

2. அறிவிப்பாளர்: அலி இப்னு முஹம்மது ﵁, நூல்: இப்னு மாஜா 1657.





وَقَالَ الْحَسَنُ وَإِبْرَاهِيمُ فِي الْمُرْضِعِ أَوْ الْحَامِلِ إِذَا خَافَتَا عَلَى أَنْفُسِهِمَا أَوْ وَلَدِهِمَا تُفْطِرَانِ ثُمَّ تَقْضِيَانِ رَوَاهُ البخاري.

இமாம் ஹசன் ﵀, இமாம் இப்ராஹீம் ﵀ கூறுகின்றார்கள்: பாலூட்டுகின்ற பெண், கர்ப்பிணிப் பெண் தங்கள் உயிர் மீதோ அல்லது தங்கள் குழந்தைகள் மீதோ பயந்தால் அவர்கள் நோன்பை விட்டுவிட வேண்டும். பிறகு (அந்த நோன்புகளை) அவர்கள் கழா செய்ய வேண்டும். இந்த செய்தியை இமாம் புகாரி தனது ஸஹீஹ் நூலில் தஃப்ஸீர் அத்தியாயத்தில் 27வது பாடத்தில் பதிவு செய்துள்ளார்கள்.

**கர்ப்பிணிப் பெண், பாலூட்டுகின்ற பெண் இருவருக்கும் நோன்பு வைப்பதில் மூன்று நிலைகள் இருக்கின்றன.**

1) இந்த இருவருக்கும் தங்களைப் பற்றி மட்டும் பயம் வந்தால், இந்த இருவரின் சட்டமும் ஒரு நோயாளியின் சட்டத்தைப் போன்றுதான். அதாவது நோன்பு வைப்பதில் அறவே சிரமம் இல்லை என்றால் அவர்கள் நோன்பை விடக்கூடாது. கண்டிப்பாக நோன்பு வைக்க வேண்டும். நோன்பு வைப்பதில் தீங்கு ஏற்படாத அளவிற்கு சிரமம் இருந்தால் நோன்பு 'மக்ரூஹ்' -வெறுக்கப்பட்ட செயலாக இருக்கும். நோன்பு வைப்பதால் தாங்க முடியாத சிரமமும் தீங்கும் ஏற்படும் என்று இருந்தால் அவர்கள் நோன்பு வைப்பது "ஹராம்"- தடுக்கப்பட்ட செயலாக ஆகிவிடும். அவள் நோன்பை விட்டுவிட வேண்டும். விடுபட்ட நோன்புகளை பிறகு கழா செய்ய வேண்டும்.

இந்த இரு வகைப் பெண்களும் பிள்ளைகள் விஷயத்தில் பயந்தால் அவர்கள் நோன்பை விட்டுவிட வேண்டும். விட்ட நோன்புகளை பிறகு கழா செய்ய வேண்டும். இதற்காக இவர்கள் உணவளிக்க வேண்டியதில்லை. இதுதான் சரியான கூற்றாகும்.

2) தங்கள் மீதும் தங்கள் பிள்ளைகள் மீதும் இந்த வகைப் பெண்களுக்கு பயம் வந்தால் அப்போதும் இவர்கள் நோன்பை





விட்டுவிட வேண்டும். விட்ட நோன்புகளை பிறகு கழா செய்ய வேண்டும்.

அறிஞர் இப்னு பாஸ் ﵀ கூறுகின்றார்: இந்த இருவகைப் பெண்களும் தங்கள் உயிருக்கு பயந்தாலோ அல்லது தங்கள் பிள்ளைகள் விஷயத்தில் பயந்தாலோ அவர்கள் நோன்பை விட்டு விடலாம். பிறகு, அவர்கள் அவற்றை கழா செய்ய வேண்டும். இதுதான் சரியான கூற்றாகும்.

**ஆறாவது காரணம்:** நோன்பை விடுவதற்கு நிர்ப்பந்திக்கப்படுதல்.

அதாவது, நோன்பாளியை ஒருவர் அச்சுறுத்தி, நிர்ப்பந்தப்படுத்தி, நோன்பை முறிக்கக்கூடிய ஒரு காரியத்தை செய்ய வைத்து விட்டால், அந்த நோன்பாளியும் தன் மீது ஆபத்தையோ அல்லது தனது உயிர் அல்லது தனது பிள்ளைகளின் உயிர் கொல்லப்படுவதை பயந்து, அல்லது தனது உடல் உறுப்புகளுக்கு சேதம் ஏற்படுத்தப்படும் அல்லது தனது பிள்ளைகளின் உடல் உறுப்புகளுக்கு சேதம் ஏற்படுத்தப்படும் என்பதை பயந்து நோன்பை முறித்து விட்டால், அவர் மீது அறவே குற்றமில்லை. அவர் நோன்பை கழா செய்தால் மட்டும் போதும். வேறு ஏதும் குற்றப்பரிகாரம் செய்ய வேண்டியது அவர் மீது அவசியமில்லை.

ஆனால், நிர்ப்பந்திப்பவருக்கு அதை செய்யக்கூடிய ஆற்றல் இருந்தால்தான் அவர் அவரின் கட்டளைக்கு கட்டுப்படுவார்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

مَن كَفَرَ بِاللّهِ مِن بَعْدِ إيمَانِهِ إِلاَّ مَنْ أُكْرِهَ وَقَلْبُهُ مُطْمَئِنٌّ بِالإِيمَانِ وَلَكِن مَّن شَرَحَ بِالْكُفْرِ صَدْرًا فَعَلَيْهِمْ غَضَبٌ مِّنَ اللّهِ وَلَهُمْ عَذَابٌ عَظِيمٌ.

(ஆகவே,) எவரேனும் நம்பிக்கை கொண்டதன் பின்னர், அவர் அல்லாஹ்வை (நிராகரித்தால் அவரைப் பற்றி கவனிக்கப்படும்.) அவருடைய உள்ளம் நம்பிக்கையை கொண்டு முற்றிலும் திருப்தியடைந்தே இருக்க, அவர் நிர்ப்பந்திக்கப்பட்டு (இவ்வாறு) நிராகரித்தால் (அவர் மீது யாதொரு குற்றமுமில்லை.) எனினும்,





அவருடைய உள்ளத்தில் நிராகரிப்பே நிறைந்திருந்(து இவ்வாறு செய்)தால் அவர் மீது அல்லாஹ்வுடைய கோபம்தான் ஏற்படும். அவருக்கு கடுமையான வேதனையுமுண்டு. (அல்குர்ஆன் 16:106)

நிர்ப்பந்திக்கப்பட்டதால் ‘குஃப்ர்’ -நிராகரிப்பை செய்தவரையே அல்லாஹ் மன்னித்து விட்டபோது அதைவிட குறைவான பாவத்தை செய்பவர் நிச்சயம் அல்லாஹ்வின் மன்னிப்பிற்குரியவர் ஆவார்.

**وَعَنْ أَبِي ذَرٍّ الْغِفَارِيِّ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ إِنَّ اللهَ تَجَاوَزَ عَنْ أُمَّتِي الْخَطَأَ وَالنِّسْيَانَ وَمَا اسْتُكْرِهُوا عَلَيْهِ رَوَاهُ ابْنُ مَاجَةَ بِرَقْمِ ٢٠٣٣**

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: நிச்சயமாக அல்லாஹ் எனது உம்மத்தை விட்டும் அது தவறுதலாக செய்ததையும், மறதியில் செய்ததையும், இன்னும் நிர்ப்பந்திக்கப்பட்டு செய்ததையும் மன்னித்து விட்டான்.[1]

**وعَنِ ابْنِ عَبَّاسٍ ﵄ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ إِنَّ اللهَ وَضَعَ عَنْ أُمَّتِي الْخَطَأَ وَالنِّسْيَانَ وَمَا اسْتُكْرِهُوا عَلَيْهِ رَوَاهُ ابْنُ مَاجَةَ بِرَقْمِ ٢٠٣٥**

நபி ﷺ கூறினார்கள்: நிச்சயமாக அல்லாஹ் எனது உம்மத்தை விட்டும் அது தவறுதலாக செய்ததையும், மறதியில் செய்ததையும், இன்னும் நிர்ப்பந்திக்கப்பட்டு செய்ததையும் மன்னித்து விட்டான்.[2]

**ஏழாவது காரணம்:** பிற மனிதரின் அவசியத் தேவைக்காக நோன்பை விடுவது.

அதாவது, பிற மனிதரின் அவசியத் தேவைக்காக ஒருவர் நோன்பை விடவேண்டிய நிலைக்கு ஆளாகிவிட்டால் அவர் நோன்பை விட்டுவிடுவார். உதாரணமாக, தண்ணீரில் மூழ்கக்கூடியவரையோ, தீ அல்லது கட்டிட இடிபாடுகளில் அல்லது வேறு ஏதோ ஓர் ஆபத்தில் சிக்கியவர்களையோ காப்பாற்ற வேண்டிய அவசியம் ஏற்பட்டு,

1. அறிவிப்பாளர்: அபூ தர் ﵁, நூல்: சுனன் இப்னு மாஜா 2033.
2. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﵄, நூல்: சுனன் இப்னு மாஜா 2035.





அந்த நேரத்தில் நோன்புடன் அந்த காரியத்தை செய்ய முடியாது என்று இருந்தால் அவர் நோன்பை விட்டுவிட்டு உயிர்களைக் காப்பாற்றுவார். பிறகு, அவர் நோன்பை 'கழா' செய்வார். அவர் இதற்காக பரிகாரம் செய்யவேண்டிய அவசியமில்லை. இதுதான் அறிஞர்களின் கூற்றில் சரியான கூற்றாகும்.

இவ்வாறே, இரத்த தானம் கொடுத்து ஒருவரை காப்பாற்ற வேண்டிய நேரத்தில், அவர் நோன்பை முறித்துதான் இரத்ததானம் செய்ய முடியும் என்று இருந்தால் அவர் நோன்பை முறித்து விட்டு இரத்த தானம் செய்வார். அல்லாஹ் மிக அறிந்தவன்.

**எட்டாவது காரணம்:** ஒருவருக்கு பசி, அல்லது தாகம் கடுமையாக ஏற்பட்டு உயிர் பிரிந்துவிடும் என்று பயந்தால், அல்லது அறிவு, அல்லது கண் பார்வை, அல்லது செவிப்புலன் அல்லது வேறு ஏதாவது ஓர் உறுப்பில் பாதிப்பு ஏற்படும் என்று பயந்தால் அவர் நோன்பை முறித்துவிட்டு தன்னை பாதுகாத்துக்கொள்ள வேண்டும். ஆபத்திலிருந்து தன்னை பாதுகாக்கின்ற அளவிற்கு மட்டும் உணவு, பானத்தை எடுக்க வேண்டும். பிறகு, அந்த நோன்பை கழா செய்ய வேண்டும்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَلاَ تُلْقُواْ بِأَيْدِيكُمْ إِلَى التَّهْلُكَةِ

உங்களை நீங்களே ஆபத்திற்குள்ளாக்கிக் கொள்ளாதீர்கள்.

(அல்குர்ஆன் 2:195)

وَمَا جَعَلَ عَلَيْكُمْ فِي الدِّينِ مِنْ حَرَجٍ

இந்த மார்க்கத்தில் அல்லாஹ் உங்களுக்கு யாதொரு கஷ்டத்தையும் ஏற்படுத்தவில்லை. (அல்குர்ஆன் 22:78)

وَلاَ تَقْتُلُواْ أَنفُسَكُمْ إِنَّ اللّهَ كَانَ بِكُمْ رَحِيمًا

உங்களை நீங்கள் அழித்துக் கொள்ளாதீர்கள்! நிச்சயமாக அல்லாஹ் உங்கள் மீது மிகக் கருணையுள்ளவனாக இருக்கின்றான்.

(அல்குர்ஆன் 4:29)





يُرِيدُ اللهُ بِكُمُ الْيُسْرَ وَلاَ يُرِيدُ بِكُمُ الْعُسْرَ

அல்லாஹ் உங்களுக்கு இலகுவா(ன கட்டளையைக் கொடு)க்க விரும்புகிறானே தவிர கஷ்டத்தை(க் கொடுக்க) விரும்பவில்லை.

(அல்குர்ஆன் 2:185)

ஒருவருக்கு உணவு ஏதும் கிடைக்காமல் கடுமையான பசிக்கு ஆளாகி இருக்கும்போது அவருக்கு முன் இறந்த ஒரு பிராணி மட்டும் இருந்தால் அவர் தனது உயிரை பாதுகாக்கின்ற அளவிற்கு மட்டும் சாப்பிட்டு தனது உயிரை பாதுகாக்க வேண்டும். பிறகு, நிறுத்திக்கொள்ள வேண்டும் என்ற மார்க்க சட்டத்தைப் போன்றுதான் நோன்பின் மேற்கூறப்பட்ட சட்டமும்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

فَمَنِ اضْطُرَّ فِي مَخْمَصَةٍ غَيْرَ مُتَجَانِفٍ لِّإِثْمٍ فَإِنَّ اللهَ غَفُورٌ رَّحِيمٌ

எவரேனும், பாவம் செய்யும் எண்ணமின்றி பசியின் கொடுமையினால் நிர்ப்பந்திக்கப்பட்டு (மேலே கூறப்பட்ட விலக்கப்பட்டவைகளைப் புசித்து)விட்டால் (அது குற்றமாகாது.) ஏனென்றால், நிச்சயமாக அல்லாஹ் (நிர்ப்பந்தத்திற்குள்ளான அவருடைய குற்றங்களை) மிகவும் மன்னித்துக் கருணை புரிபவனாக இருக்கின்றான்.

(அல்குர்ஆன் 5:3)

فَمَنِ اضْطُرَّ غَيْرَ بَاغٍ وَلاَ عَادٍ فَإِنَّ رَبَّكَ غَفُورٌ رَّحِيمٌ

வரம்பு மீறியவராக இல்லாமல், பாவம் செய்யும் நோக்கமின்றி எவரேனும் நிர்ப்பந்திக்கப்பட்டு (இவற்றில் எதையும் புசித்து) விட்டால் (அது அவர்கள் மீது குற்றமாகாது.) நிச்சயமாக உங்கள் இறைவன் மிக்க மன்னிப்பவனும், கருணையுடையவனும் ஆவான்.

(அல்குர்ஆன் 6:145)

**ஒன்பதாவது காரணம்:** அல்லாஹ்வின் பாதையில் எதிரிகளிடம் போர் புரிவதற்கு வலிமை வேண்டும் என்பதற்காக நோன்பை விடவேண்டிய தேவை உள்ளவர்களும் நோன்பை விட்டுவிட்டு





பிறகு நோன்பை கழா செய்துகொள்ள வேண்டும். இந்த அனுமதி வெளியூரில் சென்று போர் புரிந்தாலும் உண்டு. அல்லது எதிரிகள் தங்களை தாக்க வரும்போது தனது ஊரில் இருந்துகொண்டே எதிரிகளை எதிர்க்க வேண்டிய நிலை ஏற்பட்டாலும் நோன்பை விட்டுவிட அனுமதி உண்டு.

**رُوِيَ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ فِي غَزْوَةِ فَتْحِ مَكَّةَ إِنَّكُمْ قَدْ دَنَوْتُمْ مِنْ عَدُوِّكُمْ وَالْفِطْرُ أَقْوَى لَكُمْ فَكَانَتْ رُخْصَةً فَمِنَّا مَنْ صَامَ وَمِنَّا مَنْ أَفْطَرَ ثُمَّ نَزَلْنَا مَنْزِلًا آخَرَ فَقَالَ إِنَّكُمْ مُصَبِّحُو عَدُوِّكُمْ وَالْفِطْرُ أَقْوَى لَكُمْ فَأَفْطِرُوا وَكَانَتْ عَزْمَةً فَأَفْطَرْنَا ثُمَّ قَالَ لَقَدْ رَأَيْتُنَا نَصُومُ مَعَ رَسُولِ اللهِ ﷺ بَعْدَ ذٰلِكَ فِي السَّفَرِ رَوَاهُ مُسْلِمٌ بِرَقْمِ ١٨٨٨**

நபி ﷺ மக்காவை வெற்றி கொள்ளச் சென்ற போரில் கூறினார்கள்: “நீங்கள் உங்கள் எதிரிகளை நெருங்கி விட்டீர்கள். நோன்பை விடுவது உங்களுக்கு நல்ல வலிமையைத் தரும்.” இது (-நபியவர்களின் இந்தக் கூற்று) எங்களுக்கு அனுமதியாக இருந்தது. ஆகவே, எங்களில் சிலர் நோன்பு வைத்தனர். சிலர் நோன்பை விட்டுவிட்டனர். பிறகு, வேறு ஒரு தங்குமிடத்தில் நாங்கள் தங்கினோம்.

அப்போது, நபி ﷺ கூறினார்கள்: “நீங்கள் காலையில் எதிரிகளை சந்திப்பீர்கள். நோன்பை விடுவது உங்களுக்கு நல்ல வலிமையைத் தரும். ஆகவே, நோன்பை விட்டு விடுங்கள்!” இது (-நபியவர்களின் இந்தக் கூற்று நோன்பை விடுவதற்கு எங்களுக்கு) கட்டளையாக இருந்தது. ஆகவே, நாங்கள் நோன்பை விட்டு விட்டோம். பிறகு, அறிவிப்பாளர் கூறுகிறார்: இதற்கு பின்னர் நாங்கள் நபி ﷺ அவர்களுடன் பயணத்தில் சென்றபோது நாங்கள் நோன்பு வைத்திருந்ததை நான் பார்த்திருக்கின்றேன்.[1]

அறிஞர் இப்னுல் கய்யிம் رحمه الله கூறுகிறார்கள்: இது போன்ற ஒரு சந்தர்ப்பம் உள்ளூரில் இருக்கும்போது நிகழ்ந்தால், நோன்பை

---

1. அறிவிப்பாளர்: அபூ சயீது அல்குத்ரி رضي الله عنه, நூல்: ஸஹீஹ் முஸ்லிம் 1888.





விட்டால்தான் எதிரிகளை எதிர்க்க வலிமை பெற முடியும் என்றால் நோன்பை விட்டுவிடலாம் என்பதுதான் சரியான கருத்தாகும். இதுதான் அறிஞர் இப்னு தைமிய்யா ﵀ அவர்களின் விருப்பமான கருத்துமாகும்.

---------



## பயணத்தில் நோன்பு வைப்பது

பயணத்தில் நோன்பு வைப்பது மூன்று வகைப்படும்.

**முதல் வகை:** பொதுவாக பயணத்தில் நோன்பை விடுவதற்கு அனுமதி உண்டு.

**عَنِ ابْنِ عَبَّاسٍ رضي الله عنهما أَنَّ النَّبِيَّ ﷺ خَرَجَ فِي رَمَضَانَ مِنْ الْمَدِينَةِ وَمَعَهُ عَشَرَةُ آلَافٍ وَذٰلِكَ عَلَى رَأْسِ ثَمَانِ سِنِينَ وَنِصْفٍ مِنْ مَقْدَمِهِ الْمَدِينَةَ فَسَارَ هُوَ وَمَنْ مَعَهُ مِنْ الْمُسْلِمِينَ إِلَى مَكَّةَ يَصُومُ وَيَصُومُونَ حَتّٰى بَلَغَ الْكَدِيدَ وَهُوَ مَاءٌ بَيْنَ عُسْفَانَ وَقُدَيْدٍ أَفْطَرَ وَأَفْطَرُوا رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ٣٩٤١.**

நபி ﷺ அவர்கள் ரமழான் மாதத்தில் தம்முடன் முஸ்லிம்கள் பத்தாயிரம் பேரை அழைத்துக் கொண்டு (மக்காவை வெற்றி கொள்வதற்காக) மதீனாவிலிருந்து மக்கா நோக்கிப் புறப்பட்டார்கள். இது நபி ﷺ அவர்கள் மதீனாவிற்கு (ஹிஜ்ரத் செய்து) வருகை தந்ததிலிருந்து எட்டு ஆண்டுகள் ஆறு மாதங்கள் முடிந்த போது நடைபெற்றது. நபி ﷺ அவர்களும் நோன்பு நோற்றவர்களாக, அவர்களுடன் இருந்த முஸ்லிம்களும் நோன்பு நோற்றவர்களாக பயணம் செய்தார்கள். இறுதியில் 'கதீத்' என்னுமிடத்திற்குச் சென்று சேர்ந்தார்கள். இந்த இடம் உஸ்ஃபானுக்கும் குதைதுக்கும் இடையே உள்ள ஒரு நீர் நிலையாகும் -(அங்கு) நபி ﷺ அவர்கள் நோன்பை விட்டுவிட்டார்கள். மக்களும் நோன்பை விட்டு விட்டார்கள்.[1]

**وعَنِ ابْنِ عَبَّاسٍ رضي الله عنهما قَالَ سَافَرَ رَسُولُ اللهِ ﷺ فِي رَمَضَانَ فَصَامَ حَتّٰى بَلَغَ عُسْفَانَ ثُمَّ دَعَا بِإِنَاءٍ مِنْ مَاءٍ فَشَرِبَ نَهَارًا لِيُرِيَهُ النَّاسَ فَأَفْطَرَ حَتّٰى قَدِمَ**

1. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் رضي الله عنهما, நூல்: ஸஹீஹுல் புகாரி 3941.





مَكَّةَ قَالَ وَكَانَ ابْنُ عَبَّاسٍ يَقُولُ صَامَ رَسُولُ اللهِ ﷺ فِي السَّفَرِ وَأَفْطَرَ فَمَنْ شَاءَ صَامَ وَمَنْ شَاءَ أَفْطَرَ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ٣٩٤٣

ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் ரமழானில் பயணித்தார்கள். (பயணத்தில்) நோன்பும் நோற்றார்கள். உஸ்ஃபான் என்ற இடம் வந்தவுடன் ஒரு பாத்திரத்தில் தண்ணீர் கொண்டுவரக் கூறி மக்களுக்கு காண்பிப்பதற்காக பகலில் அந்த தண்ணீரை குடித்து, நோன்பை விட்டுவிட்டார்கள். இப்படியாக மக்கா வந்து சேர்ந்தார்கள். இப்னு அப்பாஸ் ؓ கூறுவார்கள்: பயணத்தில் ரசூலுல்லாஹ் ﷺ நோன்பு வைத்துள்ளார்கள். நோன்பை விடவும் செய்துள்ளார்கள். ஆகவே, விரும்பியவர் நோன்பு வைக்கட்டும். விரும்பியவர் நோன்பை விடட்டும்.[1]

**இரண்டாவது வகை:** பயணத்தில் நோன்பு வைப்பது இன்னும் நோன்பை விடுவது இரண்டுக்கும் இடையில் எது விருப்பமோ அதை செய்வது.

عَنْ أَبِي الدَّرْدَاءِ ؓ قَالَ خَرَجْنَا مَعَ النَّبِيِّ ﷺ فِي بَعْضِ أَسْفَارِهِ فِي يَوْمٍ حَارٍّ حَتَّى يَضَعَ الرَّجُلُ يَدَهُ عَلَى رَأْسِهِ مِنْ شِدَّةِ الْحَرِّ وَمَا فِينَا صَائِمٌ إِلَّا مَا كَانَ مِنَ النَّبِيِّ ﷺ وَابْنِ رَوَاحَةَ ؓ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٨٠٩

நாங்கள் நபி ﷺ அவர்களுடன் அவர்களின் பயணங்களில் ஒரு சில பயணத்தில் கடுமையான வெயில் பொழுதில் இருந்தோம். ஒருவர் தனது கையை கடுமையான வெப்பத்தால் தனது தலையில் வைத்துக் கொண்டார். நபி ﷺ இன்னும் இப்னு ரவாஹா ؓ ஆகியோரைத் தவிர எங்களில் யாரும் நோன்பாளியாக இருக்கவில்லை.[2]

وعَنْ جَابِرٍ ؓ قَالَ سَافَرْنَا مَعَ رَسُولِ اللهِ ﷺ فَصَامَ بَعْضُنَا وَأَفْطَرَ بَعْضُنَا رَوَاهُ النَّسَائِيُّ بِرَقْمِ ٢٢٧٢

---

1. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ؓ, நூல்: ஸஹீஹுல் புகாரி 3943.
2. அறிவிப்பாளர்: அபுத் தர்தா ؓ, நூல்: ஸஹீஹுல் புகாரி 1809.





நாங்கள் ரசூலுல்லாஹ் ﷺ அவர்களுடன் பயணித்தோம். எங்களில் சிலர் நோன்பு நோற்றார்கள். எங்களில் சிலர் நோன்பை விட்டார்கள்.[1]

**மூன்றாவது வகை:** நோன்பை விடுவதற்கு ஆர்வ மூட்டுவதும் அதற்கு கட்டளையிடுவதும், நோன்பு வைப்பதை எச்சரிப்பதும்.

**عَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ رضي الله عنه قَالَ لَمَّا بَلَغَ النَّبِيُّ ﷺ عَامَ الْفَتْحِ مَرَّ الظَّهْرَانِ فَآذَنَنَا بِلِقَاءِ الْعَدُوِّ فَأَمَرَنَا بِالْفِطْرِ فَأَفْطَرْنَا أَجْمَعُونَ رَوَاهُ التِّرْمِذِيُّ بِرَقْمِ ١٦٠٧**

மக்காவை வெற்றிகொண்ட ஆண்டில் ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் மர்ருள் ளஹ்ரான் என்ற இடத்தை அடைந்தவுடன் எதிரிகளை போரில் சந்திக்க வேண்டும் என்று அறிவிப்பு செய்து, நோன்பை விடும்படி எங்களுக்கு கட்டளையிட்டார்கள். நாங்கள் அனைவரும் நோன்பை விட்டுவிட்டோம்.[2]

**وَعَنْ أَبِي بَكْرِ بْنِ عَبْدِ الرَّحْمَنِ عَنْ بَعْضِ أَصْحَابِ رَسُولِ اللَّهِ ﷺ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ أَمَرَ النَّاسَ فِي سَفَرِهِ عَامَ الْفَتْحِ بِالْفِطْرِ وَقَالَ تَقَوَّوْا لِعَدُوِّكُمْ وَصَامَ رَسُولُ اللَّهِ ﷺ قَالَ أَبُو بَكْرٍ رضي الله عنه قَالَ الَّذِي حَدَّثَنِي لَقَدْ رَأَيْتُ رَسُولَ اللَّهِ ﷺ بِالْعَرْجِ يَصُبُّ الْمَاءَ عَلَى رَأْسِهِ مِنْ الْعَطَشِ أَوْ مِنْ الْحَرِّ ثُمَّ قِيلَ لِرَسُولِ اللَّهِ ﷺ يَا رَسُولَ اللَّهِ إِنَّ طَائِفَةً مِنْ النَّاسِ قَدْ صَامُوا حِينَ صُمْتَ قَالَ فَلَمَّا كَانَ رَسُولُ اللَّهِ ﷺ بِالْكَدِيدِ دَعَا بِقَدَحٍ فَشَرِبَ فَأَفْطَرَ النَّاسُ رَوَاهُ مالك في الموطا برقم ٥٧٧**

மக்காவை வெற்றிகொண்ட ஆண்டில் தனது பயணத்தில் உடன் இருந்த மக்களுக்கு நோன்பை விடும்படி கட்டளையிட்டார்கள். உங்கள் எதிரிகளை சந்திக்க வலிமை பெறுங்கள் என்று கூறினார்கள். ஆனால், நபி ﷺ அவர்கள் நோன்பு வைத்திருந்தார்கள். இந்த ஹதீஸை அறிவிப்பவர் அபூபக்ர் رضي الله عنه கூறுகிறார்: அர்ஜ் என்ற இடத்தில் நபி ﷺ அவர்கள் தாகத்தின் காரணமாக அல்லது வெப்பத்தின் காரணமாக

---

1. அறிவிப்பாளர்: ஜாபிர் رضي الله عنه, நூல்: சுனன் நசாயி 2272.
2. அறிவிப்பாளர்: அபூ சயீது அல்குத்ரி رضي الله عنه, நூல்: ஜாமிவுத் திர்மிதி 1607.





தனது தலையில் தண்ணீர் ஊற்றுவதை நான் பார்த்தேன். பிறகு, அல்லாஹ்வின் தூதரே! நிச்சயமாக நீங்கள் நோன்பு நோற்றதைப் பார்த்து மக்களில் சிலர் நோன்பு வைத்திருக்கின்றார்கள் என்று நபி ﷺ அவர்களிடம் கூறப்பட்டது. பிறகு, கதீத் என்ற இடத்தில் நபி ﷺ அவர்கள் இருந்தபோது ஒரு பாத்திரத்தில் தண்ணீர் வரவழைத்து குடித்தார்கள். மக்களும் நோன்பை விட்டார்கள்.[1]

**وَعَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ ﵁ قَالَ كُنَّا نَغْزُو مَعَ رَسُولِ اللّٰهِ ﷺ فِي رَمَضَانَ فَمِنَّا الصَّائِمُ وَمِنَّا الْمُفْطِرُ فَلَا يَجِدُ الصَّائِمُ عَلَى الْمُفْطِرِ وَلَا الْمُفْطِرُ عَلَى الصَّائِمِ يَرَوْنَ أَنَّ مَنْ وَجَدَ قُوَّةً فَصَامَ فَإِنَّ ذٰلِكَ حَسَنٌ وَيَرَوْنَ أَنَّ مَنْ وَجَدَ ضَعْفًا فَأَفْطَرَ فَإِنَّ ذٰلِكَ حَسَنٌ رَوَاهُ مُسْلِمٌ بِرَقْمِ ١٨٨٢**

நாங்கள் ரசூலுல்லாஹ் ﷺ அவர்களுடன் ரமழானில் போருக்கு செல்வோம். எங்களில் நோன்பாளிகளும் இருப்பார்கள். நோன்பில்லாதவர்களும் இருப்பார்கள். நோன்பு வைக்காதவரை நோன்பாளி குறை சொல்ல மாட்டார். நோன்பாளியை நோன்பில்லாதவர் குறைசொல்ல மாட்டார். யாருக்கு வலிமை இருக்குமோ அவர் நோன்பு வைப்பார். நிச்சயமாக அது நல்லதுதான் என்று அவர்கள் கருதுவார்கள். யாருக்கு பலவீனம் இருக்குமோ அவர் நோன்பை விட்டுவிடுவார். நிச்சயமாக அது நல்லதுதான் என்று கருதுவார்கள்.[2]

**وَعَنْ جَابِرِ بْنِ عَبْدِ اللّٰهِ ﵁ قَالَ كَانَ رَسُولُ اللّٰهِ ﷺ فِي سَفَرٍ فَرَأَى زِحَامًا وَرَجُلًا قَدْ ظُلِّلَ عَلَيْهِ فَقَالَ مَا هٰذَا فَقَالُوا صَائِمٌ فَقَالَ لَيْسَ مِنْ الْبِرِّ الصَّوْمُ فِي السَّفَرِ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٨١٠**

ஒரு சமயம் ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் பயணத்தில் இருந்தார்கள். அப்போது, மக்கள் கூட்டத்தையும் ஒருவர் நிழலில்

1. அறிவிப்பாளர்: ஒரு நபித்தோழர் ﵁, நூல்: முவத்தா இமாம் மாலிக் 577.
2. அறிவிப்பாளர்: அபூ சயீது அல்குத்ரி ﵁, நூல்: ஸஹீஹ் முஸ்லிம் 1882.





வைக்கப்பட்டிருப்பதையும் பார்த்து இவருக்கு என்ன ஆனது? என்று கேட்டார்கள். இவர் நோன்பாளி என்று மக்கள் கூறினார்கள். பயணத்தில் நோன்பு வைப்பது நன்மைகளில் உள்ளதல்ல என்று ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்.[1]

وَعَنْ مُحَمَّد بْن عَبْدِ الرَّحْمٰنِ قَالَ أَخْبَرَنِي جَابِرُ بْنُ عَبْدِ اللهِ رَضِيَ اللهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللهِ ﷺ مَرَّ بِرَجُلٍ فِي ظِلِّ شَجَرَةٍ يُرَشُّ عَلَيْهِ الْمَاءُ قَالَ مَا بَالُ صَاحِبِكُمْ هٰذَا قَالُوا يَا رَسُولَ اللهِ صَائِمٌ قَالَ إِنَّهُ لَيْسَ مِنَ الْبِرِّ أَنْ تَصُومُوا فِي السَّفَرِ وَعَلَيْكُمْ بِرُخْصَةِ اللهِ الَّتِي رَخَّصَ لَكُمْ فَاقْبَلُوهَا رَوَاهُ النَّسَائِيُّ بِرَقْمِ ٢٢٢٦

ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் மரத்தின் நிழலில் படுக்கவைக்கப்பட்டிருந்த ஒருவரை கடந்து சென்றார்கள். அவர் மீது தண்ணீர் தெளிக்கப்பட்டது. உங்கள் இந்த தோழரின் நிலைமை என்ன? என்று ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் கேட்டார்கள். அவர் நோன்பாளி என்று மக்கள் கூறினார்கள். நபி ﷺ கூறினார்கள். “நீங்கள் பயணத்தில் நோன்பு வைப்பது நன்மைகளில் உள்ளதல்ல. அல்லாஹ் உங்களுக்கு வழங்கிய சலுகைகளை நீங்கள் எடுத்துக் கொள்ளுங்கள்! அவற்றை நீங்கள் ஏற்றுக் கொள்ளுங்கள்!”[2]

---------

1. அறிவிப்பாளர்: ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் رضي الله عنه, நூல்: ஸஹீஹுல் புகாரி 1810.
2. அறிவிப்பாளர்: ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் رضي الله عنه, நூல்: சுனன் நசாயி 2226.





# பயணி நோன்பு வைப்பதின் சட்டம்

பயணி நோன்பு வைப்பதுடைய மூன்று நிலைகள்

பயணி நோன்பை விடுவது கூடும் என்ற சட்டம் குர்ஆன், சுன்னா, மற்றும் ஏகோபித்த முடிவின் அடிப்படையில் உள்ள ஒன்றாகும். அதே நேரத்தில் பயணி ஒருவர் நோன்பு நோற்றாலும் அந்த நோன்பு நிறைவேறி விடும்.

மார்க்க ஆதாரங்களை நாம் ஆழ்ந்து கவனிக்கும்போது பயணியின் நோன்பை மூன்று நிலைகளில் வகைப்படுத்தலாம்.

**முதல் நிலை:** நோன்பு வைப்பது அவருக்கு மிகுந்த சிரமத்தை கொடுக்கும். அதை அவரால் சமாளிக்க முடியாது. இந்த வகைப் பயணி கண்டிப்பாக நோன்பை விட்டுவிட வேண்டும். இவர் நோன்பு வைப்பது ஹராம் - கூடாது.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَلَا تَقْتُلُوٓاْ أَنفُسَكُمْ إِنَّ اللهَ كَانَ بِكُمْ رَحِيمًا

உங்களை நீங்கள் அழித்துக் கொள்ளாதீர்கள்! நிச்சயமாக அல்லாஹ் உங்கள் மீது மிகக் கருணையுள்ளவனாக இருக்கின்றான்.

(அல்குர்ஆன் 4:29)

وَلَا تُلْقُواْ بِأَيْدِيكُمْ إِلَى التَّهْلُكَةِ

உங்களை நீங்களே ஆபத்திற்குள்ளாக்கிக் கொள்ளாதீர்கள்.

(அல்குர்ஆன் 2:195)

وعَنْ جَابِرِ بْنِ عَبْدِ اللهِ ﵁ أَنَّ رَسُولَ اللهِ ﷺ خَرَجَ عَامَ الْفَتْحِ إِلَى مَكَّةَ فِي رَمَضَانَ فَصَامَ حَتَّى بَلَغَ كُرَاعَ الْغَمِيمِ فَصَامَ النَّاسُ ثُمَّ دَعَا بِقَدَحٍ مِنْ مَاءٍ





فَرَفَعَهُ حَتّٰى نَظَرَ النَّاسُ إِلَيْهِ ثُمَّ شَرِبَ فَقِيلَ لَهُ بَعْدَ ذٰلِكَ إِنَّ بَعْضَ النَّاسِ قَدْ صَامَ فَقَالَ أُولَئِكَ الْعُصَاةُ أُولَئِكَ الْعُصَاةُ رَوَاهُ مُسْلِمٌ بِرَقْمِ ١٨٧٨

ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் மக்காவை வெற்றி கொண்ட ஆண்டு, ரமழானில் மக்காவிற்கு சென்றார்கள். நோன்பு வைத்திருந்தார்கள். குராவுல் கமீம் என்ற இடத்தை வந்து சேர்ந்தார்கள். மக்களும் நோன்பு நோற்றார்கள். பிறகு, ஒரு பாத்திரத்தில் தண்ணீரை வரவழைத்து மக்கள் அதை பார்க்கின்ற அளவிற்கு அதை உயர்த்திக் காண்பித்து (அதை) குடித்தார்கள். இந்த நிகழ்ச்சிக்குப் பின்னர் அவர்களிடம் கூறப்பட்டது: மக்களில் சிலர் நோன்பு வைத்துள்ளார்கள் என்று. ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: அவர்கள்தான் மாறுசெய்தவர்கள், அவர்கள்தான் மாறுசெய்தவர்கள்![1]

**இரண்டாவது நிலை:** நோன்பு வைப்பதால் சிறிது சிரமம் இருந்தாலும் அதை அவரால் தாங்கிக்கொள்ள முடியும். நோன்பை விடுவதுதான் அவருக்கு இலகுவானதாக இருக்கும். இத்தகைய நேரத்தில் அவர் நோன்பை விடுவதுதான் சிறந்ததாகும். நோன்பு வைப்பது அவருக்கு 'மக்ரூஹ்' -வெறுக்கப்பட்ட ஒரு செயலாக இருக்கும்.

عَنْ جَابِرِ بْنِ عَبْدِ اللهِ رَضِيَ اللهُ عَنْهُ قَالَ كَانَ رَسُولُ اللهِ ﷺ فِي سَفَرٍ فَرَأَى زِحَامًا وَرَجُلًا قَدْ ظُلِّلَ عَلَيْهِ فَقَالَ مَا هٰذَا فَقَالُوا صَائِمٌ فَقَالَ لَيْسَ مِنْ الْبِرِّ الصَّوْمُ فِي السَّفَرِ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٨١٠

ஒரு சமயம் ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் பயணத்தில் இருந்தார்கள். அப்போது, மக்கள் கூட்டத்தையும், ஒருவர் நிழலில் அமர்த்தப்பட்டிருப்பதையும் பார்த்து இவர் யார்? என்று கேட்டார்கள். இவர் நோன்பாளி என்று மக்கள் கூறினார்கள். பயணத்தில் நோன்பு வைப்பது நன்மைகளில் உள்ளதல்ல என்று ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்.[2]

1. அறிவிப்பாளர்: ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் رضي الله عنه, நூல்: ஸஹீஹ் முஸ்லிம் 1878.
2. அறிவிப்பாளர்: ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் رضي الله عنه, நூல்: ஸஹீஹுல் புகாரி 1810.

وَعَنْ جَابِرِ بْنِ عَبْدِ اللهِ ﵁ أَنَّ رَسُولَ اللهِ ﷺ مَرَّ بِرَجُلٍ فِي ظِلِّ شَجَرَةٍ يُرَشُّ عَلَيْهِ الْمَاءُ قَالَ مَا بَالُ صَاحِبِكُمْ هٰذَا قَالُوا يَا رَسُولَ اللهِ صَائِمٌ قَالَ إِنَّهُ لَيْسَ مِنَ الْبِرِّ أَنْ تَصُومُوا فِي السَّفَرِ وَعَلَيْكُمْ بِرُخْصَةِ اللهِ الَّتِي رَخَّصَ لَكُمْ فَاقْبَلُوهَا رَوَاهُ النَّسَائِيُّ بِرَقْمِ ٢٢٢٦

ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் மரத்தின் நிழலில் படுக்கவைக்கப்பட்டிருந்த ஒருவரை கடந்து சென்றார்கள். அவர் மீது தண்ணீர் தெளிக்கப்பட்டது. உங்கள் இந்த தோழரின் நிலைமை என்ன? என்று ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் கேட்டார்கள். அவர் நோன்பாளி என்று மக்கள் கூறினார்கள். நபி ﷺ கூறினார்கள். "பயணத்தில் நீங்கள் நோன்பு வைப்பது நன்மைகளில் உள்ளதல்ல. அல்லாஹ் உங்களுக்கு வழங்கிய சலுகைகளை நீங்கள் எடுத்துக் கொள்ளுங்கள்! அவற்றை நீங்கள் ஏற்றுக் கொள்ளுங்கள்!"[1]

**மூன்றாவது நிலை:** நோன்பு வைப்பதில் அவருக்கு எவ்வித சிரமமும் இருக்காது. நோன்பு வைப்பது அவருக்கு மிக இலகுவாக இருக்கும். இந்த நிலையில் அவர் நோன்பு வைப்பதும் கூடும். நோன்பை விடுவதும் கூடும்.

عَنْ عَائِشَةَ ﵂ زَوْجِ النَّبِيِّ ﷺ أَنَّ حَمْزَةَ بْنَ عَمْرٍو الْأَسْلَمِيَّ قَالَ لِلنَّبِيِّ ﷺ أَأَصُومُ فِي السَّفَرِ وَكَانَ كَثِيرَ الصِّيَامِ فَقَالَ إِنْ شِئْتَ فَصُمْ وَإِنْ شِئْتَ فَأَفْطِرْ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٨٠٧

ஹம்சா இப்னு அம்ர் அல்அஸ்லமி ﵁ நபி ﷺ அவர்களிடம், நான் பயணத்தில் நோன்பு வைக்கட்டுமா என்று கேட்டார். அவர் அதிகம் நோன்பு வைப்பவராக இருந்தார். நபி ﷺ கூறினார்கள்: நீர் விரும்பினால் நோன்பிருப்பீராக! நீர் விரும்பினால் நோன்பை விட்டுவிடுவீராக![2]

---

1. அறிவிப்பாளர்: ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் ﵁, நூல்: சுனன் நசாயி 2226.
2. அறிவிப்பாளர்: ஆயிஷா ﵂, நூல்: ஸஹீஹுல் புகாரி 1807





وَعَنْ حَمْزَةَ بْنِ عَمْرٍو الْأَسْلَمِيِّ ﵁ أَنَّهُ قَالَ يَا رَسُولَ اللهِ أَجِدُ بِي قُوَّةً عَلَى الصِّيَامِ فِي السَّفَرِ فَهَلْ عَلَيَّ جُنَاحٌ فَقَالَ رَسُولُ اللهِ ﷺ هِيَ رُخْصَةٌ مِنَ اللهِ فَمَنْ أَخَذَ بِهَا فَحَسَنٌ وَمَنْ أَحَبَّ أَنْ يَصُومَ فَلَا جُنَاحَ عَلَيْهِ رَوَاهُ مُسْلِمٌ بِرَقْمِ ١٨٩١

ஹம்சா இப்னு அம்ர் அல்அஸ்லமி ﵁ அவர்கள், அல்லாஹ்வின் தூதரே! பயணத்தில் நோன்பு வைப்பதற்கு என்னிடம் வலிமை இருக்கின்றது. ஆகவே, (நான் நோன்பு வைப்பது) என் மீது குற்றமாகுமா? என்று கேட்டார்கள். ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: இது அல்லாஹ்வின் புறத்திலிருந்து கொடுக்கப்பட்ட ஒரு சலுகையாகும். யார் இதை பயன்படுத்துவாரோ அதுவும் அழகானதுதான். யார் நோன்பு வைக்க விரும்புவாரோ அவர் மீது அதுவும் குற்றமில்லை.[1]

என்றாலும் நோன்பு வைக்காமல் இருப்பதுதான் சிறப்பானதும் சுன்னாவிற்கு நெருக்கமானதும் ஆகும்.

عَنِ ابْنِ عُمَرَ ﵄ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ إِنَّ اللهَ يُحِبُّ أَنْ تُؤْتَى رُخَصُهُ كَمَا يَكْرَهُ أَنْ تُؤْتَى مَعْصِيَتُهُ. رَوَاهُ أحمد في المسند برقم ٥٦٠٠.

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: நிச்சயமாக அல்லாஹ் தனது சலுகைகள் பயன்படுத்தப்பட வேண்டும் என்று விரும்புகிறான், அவன் தடுத்த காரியங்களை (மக்கள்) செய்வதை அவன் வெறுப்பது போன்று.[2]

ஒருவர் இந்த மூன்றாவது நிலையில் பயணத்தில் நோன்பு வைக்க விரும்பினால் அதுவும் அனுமதிக்கப்பட்டதுதான். அதில் எவ்வித குற்றமும் இல்லை.

இந்தக் கருத்தை இதற்கு முன்பு கூறப்பட்ட ஹம்சா இப்னு அம்ர்

1. அறிவிப்பாளர்: ஹம்சா இப்னு அம்ர் அல்அஸ்லமி ﵁, நூல்: ஸஹீஹ் முஸ்லிம் 1891
2. அறிவிப்பாளர்: இப்னு உமர் ﵄, நூல்: முஸ்னது அஹ்மது 5600.

அல்அஸ்லமி அவர்கள் அறிவிக்கின்ற நபிமொழியும் பின்னால் வருகின்ற சில நபிமொழிகளும் உறுதிபடுத்துகின்றன.

**وَعَنْ ابْنِ عَبَّاسٍ ﵄ قَالَ لَا تَعِبْ عَلَى مَنْ صَامَ وَلَا عَلَى مَنْ أَفْطَرَ قَدْ صَامَ رَسُولُ اللَّهِ ﷺ فِي السَّفَرِ وَأَفْطَرَ رَوَاهُ مُسْلِمٌ بِرَقْمِ ١٨٧٧**

இப்னு அப்பாஸ் ﵄ கூறினார்கள்: (பயணத்தில்) நோன்பு வைப்பவரையும் பழிக்காதீர்! நோன்பை விடுபவரையும் நீர் பழிக்காதீர்! ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் பயணத்தில் நோன்பும் வைத்திருக்கின்றார்கள், நோன்பை விடவும் செய்திருக்கின்றார்கள்.[1]

**فَكَانَ ابْنُ عَبَّاسٍ ﵄ يَقُولُ قَدْ صَامَ رَسُولُ اللَّهِ ﷺ وَأَفْطَرَ فَمَنْ شَاءَ صَامَ وَمَنْ شَاءَ أَفْطَرَ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٨١٢**

இப்னு அப்பாஸ் ﵄ கூறுவார்கள்: ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் (பயணத்தில்) நோன்பு வைத்திருக்கின்றார்கள். நோன்பை விடவும் செய்திருக்கின்றார்கள். ஆகவே, யார் விரும்புவாரோ அவர் நோன்பு வைக்கட்டும். யார் விரும்புவாரோ அவர் நோன்பை விடட்டும்.[2]

---------

1. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﵄, நூல்: ஸஹீஹ் முஸ்லிம் 1877.
2. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﵄, நூல்: ஸஹீஹுல் புகாரி 1812.





# நோன்பை முறிக்கக்கூடிய செயல்கள்

நோன்பை முறித்து, மேலும் அதை வீணாக்கிவிடுகின்ற செயல்கள் பல உள்ளன.

**முதல் வகை:** உடலுறவு கொள்வது.

இதன் மூலம் இந்திரியம் வெளியேறவில்லை என்றாலும் சரி. இருவரின் உறுப்புகள் சேர்ந்துவிட்டால் நோன்பு முறிந்து விடும். நோன்பு நேரத்தில் இது மிகப் பாவமான செயலாகும்.

இதற்கு குர்ஆன், சுன்னா, ஏகோபித்த முடிவிலிருந்து பல ஆதாரங்கள் உள்ளன.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

**فَالْآنَ بَاشِرُوهُنَّ وَابْتَغُواْ مَا كَتَبَ اللهُ لَكُمْ وَكُلُواْ وَاشْرَبُواْ حَتَّى يَتَبَيَّنَ لَكُمُ الْخَيْطُ الأَبْيَضُ مِنَ الْخَيْطِ الأَسْوَدِ مِنَ الْفَجْرِ ثُمَّ أَتِمُّواْ الصِّيَامَ إِلَى الَّليْلِ.**

ஆகவே, இனி இருள் நீங்கி விடியற்காலை (ஃபஜ்ர்) ஆகிவிட்டது என்று உங்களுக்குத் தெளிவாகும் வரையில் (நோன்பின் இரவு காலங்களில் உங்கள்) மனைவிகளுடன் சேர்ந்து அல்லாஹ் உங்களுக்கு(ச் சந்ததியாக) விதித்திருப்பதைத் தேடிக் கொள்ளுங்கள். இன்னும் (அந்நேரங்களில்) புசியுங்கள், பருகுங்கள். (கிழக்கு வெளுத்த) பின்பு இரவு (ஆரம்பமாகும்) வரை (மேலே கூறியவைகளைத் தவிர்த்து) நோன்புகளை (நோற்று) முழுமையாக்குங்கள்.

(அல்குர்ஆன் 2:187)

சுன்னாவிலிருந்து ஆதாரம்:



عن أبي هُرَيْرَةَ ﵁ قَالَ بَيْنَمَا نَحْنُ جُلُوسٌ عِنْدَ النَّبِيِّ ﷺ إِذْ جَاءَهُ رَجُلٌ فَقَالَ يَا رَسُولَ اللهِ هَلَكْتُ قَالَ مَا لَكَ قَالَ وَقَعْتُ عَلَى امْرَأَتِي وَأَنَا صَائِمٌ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٨٠٠

நாங்கள் நபி ﷺ அவர்களிடம் அமர்ந்திருந்த நேரத்தில் அவர்களிடம் ஓர் ஆடவர் வந்தார். அல்லாஹ்வின் தூதரே! நான் அழிந்து விட்டேன் என்றார். உனக்கு என்ன ஆனது? என்று நபி ﷺ கேட்டார்கள். நான் நோன்பாளியாக இருந்தபோது என் மனைவியிடம் நான் உடலுறவு வைத்துவிட்டேன்.[1]

நோன்பு நோற்ற நிலையில் உறவுவைத்த செயலால் நான் அழிந்து விட்டேன் என்று அவர் கூறியதை நபி ﷺ அவர்கள் மறுக்கவில்லை. ஆகவே, இந்த செயல் நோன்பை முறித்து விடுகிறது என்றும், இது ஒரு பெரும்பாவம் என்றும் அறிய முடிகிறது.

அறிஞர் இப்னுல் முன்திர் ﵀ கூறுகிறார்: நிச்சயமாக அல்லாஹ் நோன்பாளியின் மீது பகல் நேரத்தில் அவர் உடலுறவு கொள்வதையும் உண்பதையும் குடிப்பதையும் ஹராமாக -தடுக்கப்பட்ட செயலாக ஆக்கியுள்ளான் என்பதில் கல்வியாளர்களுக்கு மத்தியில் மாறுபட்ட கருத்துக்கள் இல்லை.

அறிஞர் இப்னு ஹஸ்ம் ﵀ கூறுகிறார்: உணவாக எடுக்கப்படுகின்ற பொருள்களை உண்பதும் குடிப்பதும் உடலுறவு வைப்பதும் (நோன்பாளிக்கு) ஹராம் தடுக்கப்பட்ட செயல் என்பதில் அறிஞர்கள் ஒருமித்த கருத்துள்ளவர்களாக இருக்கின்றனர்.

ஆகவே, நோன்பாளி உடலுறவு கொண்டுவிட்டால் அவர் வைத்திருந்த நோன்பு முறிந்துவிடும். அது ஃபர்ழ் அல்லது நஃபில் நோன்பாக இருந்தாலும் சரி. அவர் ரமழானுடைய பகலில் இந்த காரியத்தை செய்துவிட்டால் அவர் அந்த நோன்பை கழா செய்ய வேண்டும். இன்னும், கஃப்ஃபாரா -பரிகாரமும் கொடுத்தாக வேண்டும்.

1. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: ஸஹீஹுல் புகாரி, 1800.





عن أَبِي هُرَيْرَةَ ﵁ قَالَ بَيْنَمَا نَحْنُ جُلُوسٌ عِنْدَ النَّبِيِّ ﷺ إِذْ جَاءَهُ رَجُلٌ فَقَالَ يَا رَسُولَ اللهِ هَلَكْتُ قَالَ مَا لَكَ قَالَ وَقَعْتُ عَلَى امْرَأَتِي وَأَنَا صَائِمٌ فَقَالَ رَسُولُ اللهِ ﷺ هَلْ تَجِدُ رَقَبَةً تُعْتِقُهَا قَالَ لَا قَالَ فَهَلْ تَسْتَطِيعُ أَنْ تَصُومَ شَهْرَيْنِ مُتَتَابِعَيْنِ قَالَ لَا فَقَالَ فَهَلْ تَجِدُ إِطْعَامَ سِتِّينَ مِسْكِينًا قَالَ لَا قَالَ فَمَكَثَ النَّبِيُّ ﷺ فَبَيْنَا نَحْنُ عَلَى ذٰلِكَ أُتِيَ النَّبِيُّ ﷺ بِعَرَقٍ فِيهَا تَمْرٌ وَالْعَرَقُ الْمِكْتَلُ قَالَ أَيْنَ السَّائِلُ فَقَالَ أَنَا قَالَ خُذْهَا فَتَصَدَّقْ بِهِ فَقَالَ الرَّجُلُ أَعَلَى أَفْقَرَ مِنِّي يَا رَسُولَ اللهِ فَوَاللّٰهِ مَا بَيْنَ لَابَتَيْهَا يُرِيدُ الْحَرَّتَيْنِ أَهْلُ بَيْتٍ أَفْقَرُ مِنْ أَهْلِ بَيْتِي فَضَحِكَ النَّبِيُّ ﷺ حَتَّى بَدَتْ أَنْيَابُهُ ثُمَّ قَالَ أَطْعِمْهُ أَهْلَكَ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٨٠٠

நாங்கள் நபி ﷺ அவர்களுடன் அமர்ந்திருந்தபோது அவர்களிடம் ஒருவர் வந்து, ‘இறைத்தூதர் அவர்களே! நான் அழிந்து விட்டேன்!’ என்றார். நபி ﷺ அவர்கள் ‘உமக்கு என்ன நேர்ந்தது?’ என்று கேட்டார்கள். நான் நோன்பு வைத்துக்கொண்டு என் மனைவியுடன் கூடிவிட்டேன்! என்று அவர் சொன்னார்.

நபி ﷺ அவர்கள், ‘ஓர் அடிமையை விடுதலை செய்வதற்கு உன்னிடம் வசதி இருக்கிறதா?’ என்று கேட்டார்கள். அவர் ‘இல்லை!’ என்றார். தொடர்ந்து இரண்டு மாதங்கள் நீர் நோன்பு நோற்க சக்தி பெறுவீரா?’ என்று நபி ﷺ அவர்கள் கேட்டார்கள். அவர், ‘இல்லை!’ என்றார்.

அறுபது ஏழைகளுக்கு உணவளிக்க உமக்கு வசதி இருக்கிறதா?’ என்று நபி ﷺ அவர்கள் கேட்டார்கள். அதற்கும் அவர், ‘இல்லை!’ என்றார். நபி ﷺ அவர்களிடம் ஓர் ‘அரக்’[1] அளவு பேரீச்சம் பழம் கொண்டு வரப்பட்டது.

அப்போது, நபி ﷺ அவர்கள் ‘கேள்வி கேட்டவர் எங்கே?’

1. ஓர் அரக் என்பது 30 கிலோ 600 கிராம் ஆகும்.





என்றார்கள். நான் தான் என்று அவர் கூறினார். இதைப் பெற்றுக் கொள்வீராக, இன்னும் இவற்றை தர்மம் செய்துவிடுவீராக!' என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.

அப்போது அம்மனிதர், 'ரசூலுல்லாஹ் ﷺ அவர்களே! என்னை விட ஏழையாக இருப்பவர்களுக்கா (நான் தர்மம் செய்ய வேண்டும்)? மதீனாவின் (கருங்கற்கள் நிறைந்த) இரண்டு மலைகளுக்கும் இடைப்பட்ட பகுதியில் என் குடும்பத்தினரைவிட பரம ஏழைகளான குடும்பம் வேறு யாருமில்லை!' என்று கூறினார்.

அப்போது நபி ﷺ அவர்கள் தங்களின் கடைவாய்ப் பற்கள் தெரியும் அளவுக்குச் சிரித்தார்கள்: பிறகு 'இதை உமது குடும்பத்தாருக்கே உண்ணக் கொடுப்பீராக!' என்றார்கள்.[1]

**عن عَائِشَةَ رضي الله عنها زَوْجِ النَّبِيِّ ﷺ تَقُولُ أَتَى رَجُلٌ إِلَى رَسُولِ اللهِ ﷺ فِي الْمَسْجِدِ فِي رَمَضَانَ فَقَالَ يَا رَسُولَ اللهِ احْتَرَقْتُ احْتَرَقْتُ فَسَأَلَهُ رَسُولُ اللهِ ﷺ مَا شَأْنُهُ فَقَالَ أَصَبْتُ أَهْلِي قَالَ تَصَدَّقْ فَقَالَ وَاللهِ يَا نَبِيَّ اللهِ مَالِي شَيْءٌ وَمَا أَقْدِرُ عَلَيْهِ قَالَ اجْلِسْ فَجَلَسَ فَبَيْنَا هُوَ عَلَى ذٰلِكَ أَقْبَلَ رَجُلٌ يَسُوقُ حِمَارًا عَلَيْهِ طَعَامٌ فَقَالَ رَسُولُ اللهِ ﷺ أَيْنَ الْمُحْتَرِقُ آنِفًا فَقَامَ الرَّجُلُ فَقَالَ رَسُولُ اللهِ ﷺ تَصَدَّقْ بِهٰذَا فَقَالَ يَا رَسُولَ اللهِ أَغَيْرَنَا فَوَاللهِ إِنَّا لَجِيَاعٌ مَا لَنَا شَيْءٌ قَالَ فَكُلُوهُ رَوَاهُ مُسْلِمٌ بِرَقْمِ ١٨٧٤**

நபி ﷺ அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது: ஒரு மனிதர் ரமழானில் அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களிடம் பள்ளிவாசலுக்கு வந்து, "நான் எரிந்துவிட்டேன், அல்லாஹ்வின் தூதரே! நான் எரிந்துவிட்டேன்" என்றார். "அவருக்கு என்ன ஆயிற்று?" என அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் அவரிடம் வினவினார்கள்.

1. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா رضي الله عنه, நூல்: ஸஹீஹுல் புகாரி 1800.





அவர், “நான் (நோன்பு நோற்றுக்கொண்டு) என் மனைவியுடன் (பகலில்) தாம்பத்திய உறவு கொண்டு விட்டேன்” என்றார். அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள், தர்மம் செய்வீராக! என்றார்கள். அவர் “அல்லாஹ்வின் மீது ஆணையாக! நபியே! (தர்மம் செய்ய) என்னிடம் எதுவும் இல்லை. அதற்கான சக்தியும் எனக்கு இல்லை” என்றார்.

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள், “உட்காருங்கள்!” என்றார்கள். அவர் உட்கார்ந்தார். அவர் அமர்ந்திருந்தபோது மற்றொரு மனிதர் ஒரு கழுதையை ஓட்டிக்கொண்டு (அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களிடம்) வந்தார். அதன் மீது உணவுப் பொருட்கள் இருந்தன.

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள், “சற்று முன்னர் கரிந்துபோனவர் வந்தாரே அவர் எங்கே?” என்று கேட்டார்கள். அந்த மனிதர் எழுந்து நின்றார். அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள், “இதைப் பெற்று) தர்மம் செய்வீராக!” என்றார்கள்.

அவர், “அல்லாஹ்வின் தூதரே! மற்றவர்களுக்கா (தர்மம் செய்யச் சொல்கிறீர்கள்)? அல்லாஹ்வின் மீது ஆணையாக! நாங்களே பசித்தவர்களாக இருக்கிறோம். எங்களிடம் எதுவும் இல்லை?” என்றார். அல்லாஹ்வின் தூதர் அவர்கள், “அவ்வாறாயின், அதை நீங்களே உண்ணுங்கள்!” என்றார்கள்.[1]

இந்த ஹதீஸில் நாம் அறிய வேண்டிய பயனுள்ள பல விஷயங்கள் உள்ளன.

1) ரமழானுடைய பகலில் உடலுறவு வைப்பது ஒரு பெரும் பாவம், அது அழித்து விடக்கூடியது, எரித்து விடக்கூடியது ஆகும்.

2) ஒருவர் உள்ளூரில் இருக்கின்றார், உடல் நலமுள்ளவராகவும் இருக்கின்றார். இவர் ரமழானின் பகலில் உடலுறவு வைத்தால் இவர்மீது நான்கு காரியங்கள் கடமையாகின்றன.

**முதலாவது:** கடுமையான பரிகாரம். அது வரிசை முறைப்படி

1. அறிவிப்பாளர்: ஆயிஷா (ரலி), நூல்: ஸஹீஹ் முஸ்லிம் 1874.





மூன்றில் ஒன்றாகும். அ) முஃமினான ஓர் அடிமையை உரிமையிடுவது. ஆ) அது முடியவில்லை என்றால், பிறை மாதத்தின்படி இரண்டு மாதங்கள் இடைவிடாது நோன்பு இருத்தல் வேண்டும். இடையில் மார்க்கம் கூறிய காரணங்களைத் தவிர உதாரணமாக, பெரு நாட்கள், தஷ்ரீகுடைய நாட்கள், நோய், எதார்த்தமான பயணம், ஹைழ், நிஃபாஸ் ஆகிய இவற்றைத் தவிர வேறு காரணங்களுக்காக நோன்பை இடையில் விடக்கூடாது. அப்படி தகுந்த காரணம் இன்றி அவர் இரண்டு மாதங்களுக்கு இடையில் ஒரு நோன்பை விட்டுவிட்டாலும் அவர் மீண்டும் புதிதாக இரண்டு மாதங்கள் நோன்பு வைக்க வேண்டும். இ) இதை செய்வதற்கும் முடியவில்லை என்றால் அறுபது ஏழைகளுக்கு உணவளிக்க வேண்டும். அந்த உணவு உள்ளூரில் பயன்படுத்தப்படுகின்ற உணவாகவும் பாதி ஸாஃவும் இருக்க வேண்டும்.

**இரண்டாவது:** நோன்பு முறிந்துவிட்டாலும் சூரியன் மறைகின்ற வரை மீதமுள்ள நேரத்தில் நோன்பாளியைப் போன்று கட்டுப்பாட்டுடன் இருக்க வேண்டும். உண்ணுவது, பருகுவது, அல்லது மீண்டும் உடலுறவு கொள்வது கூடாது. இவர் மார்க்கம் அனுமதித்த காரணம் இன்றி பாவமான காரியத்தை செய்து நோன்பை முறித்துள்ளார். ஆகவே, இவர் தகுந்த காரணத்திற்காக நோன்பை விட்டவருடைய சலுகையைப் பெறமாட்டார்.

**மூன்றாவது:** நோன்பை முறித்த அன்றைய நாளை அவர் கழா செய்ய வேண்டும்.

**நான்காவது:** அவர் அல்லாஹ்விடம் தன் தவறுக்காக பாவமன்னிப்புக் கோரி திருந்த வேண்டும். தனது மனைவியிடம் உடலுறவு வைத்து நோன்பை முறித்துவிட்டு பரிகாரம் தேடி நபி ﷺ அவர்களிடம் வந்த மனிதருக்கு நபி ﷺ கூறினார்கள்:

وَصُمْ يَوْمًا وَاسْتَغْفِرِ اللَّهَ



நீ ஒரு நாள் நோன்பு வை! அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கேள்![1]

3) ரமழானில் வேண்டுமென்றே, பகலில் உடலுறவு வைத்தவர் அவருக்கு இந்திரியம் வெளியேறினாலும், வெளியேறவில்லை என்றாலும் அவர் இந்த கடுமையான பரிகாரத்தை செய்தாக வேண்டும்.

4) நபி ﷺ அவர்களின் உயர்ந்த நற்குணத்தை இந்த ஹதீஸில் அறிய முடிகிறது. அவர் செய்த குற்றத்தைக் கொண்டு அவரை ஏசவில்லை, இழிவாக பேசவில்லை, தன் சார்பாக அவரை தண்டிக்கவில்லை. மாறாக, இறுதியில் அவர் பேசியதை கேட்டு சிரிக்கவும் செய்து, அதை உமது குடும்பத்திற்கே உணவளிப்பீராக என்று கூறி அனுப்பினார்கள். (புகாரி, 6215)

5) ஒருவர் இந்த குற்றத்தை ரமழானில் பல நாட்கள் செய்தால் அவர் ஒவ்வொரு நாளுக்காகவும் மேற்கூறப்பட்ட கஃப்ஃபாரா -பரிகாரத்தை முறைப்படி செய்வதுடன் ஒவ்வொரு நாளின் நோன்புக்காகவும் தனித்தனியாக ஒரு நோன்பு வைக்க வேண்டும்.

**இரண்டாவது வகை:** ஒருவர் உடலுறவு இல்லாத வேறு வழிகளின் மூலமாக தனது சுயவிருப்பத்துடன் இந்திரியத்தை வெளியேற்றினால் அவருடைய நோன்பு வீணாகிவிடும்.

முத்தமிடுவதால், தொடுவதால், இச்சையுடன் பலமுறை பார்ப்பதால் அல்லது வேறு ஒரு காரணத்தால் அவர் இந்திரியத்தை வெளியேற்றுவதை இதற்கு உதாரணமாக கூறலாம்.

ஒரு நோன்பாளி இத்தகைய இச்சைகளை விட்டு விலகி இருக்க வேண்டும் என்பது மார்க்கத்தின் வழிகாட்டலாகும்.

عَنْ أَبِي هُرَيْرَةَ رضي الله عنه قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ كُلُّ عَمَلِ ابْنِ آدَمَ يُضَاعَفُ الْحَسَنَةُ عَشْرُ أَمْثَالِهَا إِلَى سَبْعِمِائَةِ ضِعْفٍ قَالَ اللهُ عَزَّ وَجَلَّ إِلَّا الصَّوْمَ فَإِنَّهُ لِي وَأَنَا

1. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா رضي الله عنه, நூல்: சுனன் அபூ தாவூத் 2043.





أَجْزِي بِهِ يَدَعُ شَهْوَتَهُ وَطَعَامَهُ مِنْ أَجْلِي لِلصَّائِمِ فَرْحَتَانِ فَرْحَةٌ عِنْدَ فِطْرِهِ وَفَرْحَةٌ عِنْدَ لِقَاءِ رَبِّهِ وَلَخُلُوفُ فِيهِ أَطْيَبُ عِنْدَ اللهِ مِنْ رِيحِ الْمِسْكِ رَوَاهُ مُسْلِمٌ بِرَقْمِ ١٩٤٥

ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: ஆதமின் மகனுடைய (மனிதனுடைய) ஒவ்வொரு நற்செயலுக்கும் ஒன்றுக்குப் பத்து முதல் எழுநூறு மடங்கு வரை நன்மைகள் வழங்கப்படுகின்றன; அல்லாஹ் கூறுகின்றான்: நோன்பைத் தவிர. ஏனெனில், நோன்பு எனக்கு உரியதாகும். அதற்கு நானே நற்கூலி வழங்குவேன். அவன் எனக்காகவே தனது இச்சையையும் உணவையும் விடுகிறான் (என அல்லாஹ் கூறுகின்றான்). நோன்பாளிக்கு இரண்டு மகிழ்ச்சிகள் உள்ளன. அவர் நோன்பைத் திறக்கும் போது ஒரு மகிழ்ச்சியும், தமது இறைவனைச் சந்திக்கும் போது மற்றொரு மகிழ்ச்சியும் அவருக்கு உண்டு. நோன்பாளியின் வாயிலிருந்து வரும் வாடை, அல்லாஹ்விடம் கஸ்தூரியின் மணத்தைவிட நறுமணமிக்கதாகும்.[1]

عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ الصِّيَامُ جُنَّةٌ فَلَا يَرْفُثْ وَلَا يَجْهَلْ وَإِنْ امْرُؤٌ قَاتَلَهُ أَوْ شَاتَمَهُ فَلْيَقُلْ إِنِّي صَائِمٌ مَرَّتَيْنِ وَالَّذِي نَفْسِي بِيَدِهِ لَخُلُوفُ فَمِ الصَّائِمِ أَطْيَبُ عِنْدَ اللهِ تَعَالَى مِنْ رِيحِ الْمِسْكِ يَتْرُكُ طَعَامَهُ وَشَرَابَهُ وَشَهْوَتَهُ مِنْ أَجْلِي الصِّيَامُ لِي وَأَنَا أَجْزِي بِهِ وَالْحَسَنَةُ بِعَشْرِ أَمْثَالِهَا رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٧٦١

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: நோன்பு ஒரு கேடயமாகும்; எனவே, நோன்பாளி கெட்ட பேச்சுகளைப் பேசவேண்டாம்! முட்டாள் தனமான செயல்களில் ஈடுபட வேண்டாம்! யாரேனும் அவருடன் சண்டைக்கு வந்தால் அல்லது அவரை ஏசினால் 'நான் நோன்பாளி' என்று இருமுறை கூறட்டும். என் உயிர் எவன் கைவசம் இருக்கிறதோ அந்த

1. அறிவிப்பாளர்: அபூஹுரைரா ؓ, நூல்: ஸஹீஹ் முஸ்லிம் 1945.

இறை)வன் மேல் ஆணையாக! நோன்பாளியின் வாயிலிருந்து வீசும் வாடை, அல்லாஹ்விடம் கஸ்தூரியின் வாடையைவிடச் சிறந்ததாகும்! (மேலும்) நோன்பாளி தனது உணவையும், தனது பானத்தையும், தனது இச்சையையும் எனக்காக விட்டு விடுகிறார்! நோன்பு எனக்கு (மட்டுமே) உரியது; அதற்கு நானே கூலி கொடுப்பேன்! ஒரு நன்மை என்பது அது போன்ற பத்து மடங்குகளாகும்! (என்று அல்லாஹ் கூறினான்).[1]

மனைவியை அணைப்பதும் அல்லது முத்தமிடுவதும் நோன்பை முறிக்காது. இதனால் இந்திரியம் வெளியேறாமல் இருக்கவேண்டும். இந்திரியம் வெளியேறிவிட்டால் நோன்பு முறிந்துவிடும்.

**عَنْ عَائِشَةَ رَضِيَ اللهُ عَنْهَا قَالَتْ كَانَ النَّبِيُّ ﷺ يُقَبِّلُ وَيُبَاشِرُ وَهُوَ صَائِمٌ وَكَانَ أَمْلَكَكُمْ لِإِرْبِهِ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٧٩٢**

நபி ﷺ அவர்கள் நோன்பு நோற்ற நிலையில் (தம் மனைவியரை) முத்தமிடுவார்கள், கட்டியணைப்பார்கள். உங்களில் தமது ஆசையை அதிகம் கட்டுப்படுத்துபவர்களாக அவர்கள் இருந்தார்கள்![2]

**عَنْ عَائِشَةَ رَضِيَ اللهُ عَنْهَا قَالَتْ إِنْ كَانَ رَسُولُ اللهِ ﷺ لَيُقَبِّلُ بَعْضَ أَزْوَاجِهِ وَهُوَ صَائِمٌ ثُمَّ ضَحِكَتْ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٧٩٣**

ஆயிஷா رضي الله عنها கூறினார்கள்: நபி ﷺ அவர்கள் நோன்பு நோற்ற நிலையில் தம் மனைவியரில் சிலரை முத்தமிடுவார்கள்!' (இதைக் கூறிய) பிறகு, ஆயிஷா رضي الله عنها சிரித்தார்கள்.[3]

**عَنْ عَائِشَةَ رَضِيَ اللهُ عَنْهَا قَالَتْ كَانَ رَسُولُ اللهِ ﷺ يُقَبِّلُ فِي شَهْرِ الصَّوْمِ رَوَاهُ مُسْلِمٌ بِرَقْمِ ١٨٥٩**

---

1. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா رضي الله عنه, நூல்: ஸஹீஹுல் புகாரி 1761.
2. அறிவிப்பாளர்: ஆயிஷா رضي الله عنها, நூல்: ஸஹீஹுல் புகாரி 1792.
3. அறிவிப்பாளர்: ஆயிஷா رضي الله عنها, நூல்: ஸஹீஹுல் புகாரி 1793.





ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் நோன்பு மாதத்தில் முத்தமிடுபவர்களாக இருந்தார்கள்.[1]

عَنْ عَائِشَةَ رضي الله عنها قَالَتْ كَانَ رَسُولُ اللّٰهِ ﷺ يُقَبِّلُ وَهُوَ صَائِمٌ وَيُبَاشِرُ وَهُوَ صَائِمٌ وَلَكِنَّهُ أَمْلَكُكُمْ لِإِرْبِهِ رَوَاهُ مُسْلِمٌ بِرَقْمِ ١٨٥٤

ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் நோன்பு நோற்றவர்களாக இருக்கும் போது (தம் மனைவிமார்களை) முத்தமிடுபவர்களாக இருந்தார்கள், இன்னும், அவர்கள் நோன்பு நோற்றவர்களாக இருக்கும் போது (தம் மனைவிமார்களை) கட்டியணைப்பவர்களாக இருந்தார்கள். என்றாலும் அவர்கள், உங்களில் தமது (உடல்) ஆசையை அதிகம் கட்டுப்படுத்துபவர்களாக இருந்தார்கள்![2]

عَنْ عُمَرَ بْنِ أَبِي سَلَمَةَ رضي الله عنه أَنَّهُ سَأَلَ رَسُولَ اللّٰهِ ﷺ أَيُقَبِّلُ الصَّائِمُ فَقَالَ لَهُ رَسُولُ اللّٰهِ ﷺ سَلْ هَذِهِ لِأُمِّ سَلَمَةَ فَأَخْبَرَتْهُ أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ يَصْنَعُ ذٰلِكَ فَقَالَ يَا رَسُولَ اللّٰهِ قَدْ غَفَرَ اللّٰهُ لَكَ مَا تَقَدَّمَ مِنْ ذَنْبِكَ وَمَا تَأَخَّرَ فَقَالَ لَهُ رَسُولُ اللّٰهِ ﷺ أَمَا وَاللّٰهِ إِنِّي لَأَتْقَاكُمْ لِلّٰهِ وَأَخْشَاكُمْ لَهُ رَوَاهُ مُسْلِمٌ بِرَقْمِ ١٨٦٣

உமர் இப்னு அபீ சலமா رضي الله عنه அவர்கள் ரசூலுல்லாஹ் ﷺ அவர்களிடம் நோன்பாளி முத்தமிடலாமா என்று கேட்டார்கள். ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் உம்மு சலமாவை சுட்டிக் காண்பித்து இவரிடம் கேள் என்றார்கள். ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் அதை செய்பவர்களாக இருந்தார்கள் என்று அவருக்கு உம்மு சலமா رضي الله عنها அறிவித்தார்கள்.

அவர் கூறினார்: ரசூலுல்லாஹ் ﷺ அவர்களே! உங்களுக்கு உங்களின் முன்சென்ற, பின்சென்ற (பாவங்கள்) அனைத்தையும் அல்லாஹ் மன்னித்து விட்டான். அவருக்கு ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: அறிந்துகொள்: அல்லாஹ்வின் மீது ஆணையாக, நிச்சயமாக நான் உங்களில் அல்லாஹ்வை அதிகம்

1. அறிவிப்பாளர்: ஆயிஷா رضي الله عنها, நூல்: ஸஹீஹ் முஸ்லிம் 1859.
2. அறிவிப்பாளர்: ஆயிஷா رضي الله عنها, நூல்: ஸஹீஹ் முஸ்லிம் 1854.





அஞ்சக்கூடியவனாகவும் அவனை அதிகம் பயப்படக்கூடியவனாகவும் இருக்கின்றேன்.[1]

முத்தமிடுவதாலும் தொடுவதாலும் அணைப்பதாலும் இந்திரியம் வெளியேறிவிடும் என்றோ அல்லது ஈமான் பலவீனமாக இருப்பதால், இச்சை அதிகமாகி உடலுறவு வரை தாம் சென்றுவிடுவோம் என்றோ ஒரு நோன்பாளி பயந்தால் அவர் இந்த அனைத்து செயல்களை விட்டும் விலகி இருப்பார், இவையெல்லாம் அவருக்கு தடுக்கப்பட்ட செயல்களாக ஆகிவிடும். ஏனெனில், இவை அவரின் நோன்பு முறிவதற்கு வழிவகுத்துவிடும், பாவத்தின் பக்கம் அவரை இழுத்துவிடும்.

நோன்பு வைத்த வாலிபர் தன் மனைவியை கட்டியணைக்க வேண்டாம் என்றும் வயதானவர், முத்தமிடலாம், கட்டியணைக்கலாம் என்றும் நபி ﷺ கூறியதன் காரணம் இதுவாகவும் இருக்கலாம். அல்லாஹ் மிக அறிந்தவன்!

**عَنْ أَبِي هُرَيْرَةَ رضي الله عنه أَنَّ رَجُلًا سَأَلَ النَّبِيَّ ﷺ عَنِ الْمُبَاشَرَةِ لِلصَّائِمِ فَرَخَّصَ لَهُ وَأَتَاهُ آخَرُ فَسَأَلَهُ فَنَهَاهُ فَإِذَا الَّذِي رَخَّصَ لَهُ شَيْخٌ وَالَّذِي نَهَاهُ شَابٌّ رَوَاهُ أَبُو دَاوُدَ بِرَقْمِ ٢٠٣٩**

ஒருவர் நபி ﷺ அவர்களிடம் நோன்பு வைத்திருப்பவர் தன் மனைவியை அணைப்பதைப் பற்றி கேட்டார். நபி ﷺ அவர்கள் அவருக்கு சலுகை வழங்கினார்கள். வேறு ஒருவர் நபி ﷺ அவர்களிடம் வந்து அதே கேள்வியைக் கேட்டார்.

நபி ﷺ அவர்கள் அவரை (அதிலிருந்து) தடுத்துவிட்டார்கள். ஆக, நபி ﷺ அவர்கள் யாருக்கு சலுகை வழங்கினார்களோ அவர் வயது முதிர்ந்தவராக இருந்தார். யாரை நபி ﷺ அவர்கள் தடுத்தார்களோ அவர் வாலிபராக இருந்தார்.[2]

1. அறிவிப்பாளர்: உமர் இப்னு அபீ சலமா رضي الله عنه, நூல்: ஸஹீஹ் முஸ்லிம் 1863.
2. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா رضي الله عنه, நூல்: சுனன் அபூ தாவூத் 2039.





நோன்பு வைத்திருப்பவர் உளூ செய்யும்போது மூக்கில் தண்ணீர் செலுத்தி சுத்தம் செய்வதில் அதிகமாக செய்வதை நபி ﷺ அவர்கள் தடுத்தார்கள். ஏனெனில், மூக்கின் வழியாக வயிற்றில் தண்ணீர் சென்று, அதனால் அவரின் நோன்பு முறிந்துவிடக் கூடாது. ஒரு கடமையை செய்வதற்கு எது அவசியமோ அதுவும் கடமையானதாக ஆகிவிடும். பாவத்திற்கு எது வழியாக இருக்குமோ அதுவும் தடுக்கப்பட்டதாக ஆகிவிடும்.

தூங்கும்போது கனவில் ஒருவருக்கு ஸ்கலிதம் ஆகிவிட்டால், அல்லது ஒருவர் மனதில் சிந்தித்ததால், அதன் மூலம் அவருக்கு இந்திரியம் வெளியேறினால், அவரின் நோன்பு முறியாது. ஏனெனில், தூக்கத்தில் ஸ்கலிதம் ஆகுவது நோன்பாளியின் சுய இஷ்டத்திற்கு அப்பாற்பட்டதாகும். அவ்வாறே, இந்திரியத்தை வெளியேற்றுவதற்காக எதையும் செய்யாமல், அந்த நோக்கமும் இல்லாமல் வெறும் சிந்திப்பதால் மட்டும் ஒருவருக்கு இந்திரியம் வெளியேறுவதும் மன்னிக்கப்பட்டதாகும்.

**عَنْ أَبِي هُرَيْرَةَ رضي الله عنه قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ إِنَّ اللهَ عَزَّ وَجَلَّ تَجَاوَزَ لِأُمَّتِي عَمَّا حَدَّثَتْ بِهِ أَنْفُسَهَا مَا لَمْ تَعْمَلْ أَوْ تَكَلَّمْ بِهِ رَوَاهُ مُسْلِمٌ بِرَقْمِ ١٨٢**

ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: நிச்சயமாக அல்லாஹ் எனது உம்மத்திற்கு அவர்கள் மனதில் பேசுவதை மன்னித்து விட்டான், அவர்கள் அதை செய்யாத வரை, அல்லது அதைப்பற்றி பேசாத வரை.[1]

**மூன்றாவது வகை:** உண்பது, குடிப்பது.

உண்பது, குடிப்பது நோன்பை முறித்துவிடும். இது குர்ஆன், சுன்னா, மற்றும் ஏகோபித்த முடிவின்படி உறுதியான ஒரு சட்டமாகும்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

---

1. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா رضي الله عنه, நூல்: ஸஹீஹ் முஸ்லிம் 182.



وَكُلُواْ وَاشْرَبُواْ حَتَّىٰ يَتَبَيَّنَ لَكُمُ الْخَيْطُ الأَبْيَضُ مِنَ الْخَيْطِ الأَسْوَدِ مِنَ الْفَجْرِ ثُمَّ أَتِمُّواْ الصِّيَامَ إِلَى الَّيْلِ .

இன்னும் இருள் நீங்கி விடியற்காலை (ஃபஜ்ர்) ஆகிவிட்டது என்று உங்களுக்குத் தெளிவாகும் வரையில் புசியுங்கள், பருகுங்கள். (கிழக்கு வெளுத்த) பின்பு இரவு (ஆரம்பமாகும்) வரை (மேலே கூறியவற்றைத் தவிர்த்து) நோன்பை முழுமையாக்குங்கள். (அல்குர்ஆன் 2:187)

இந்த வசனத்தில் அதிகாலை வருகின்ற வரை இரவெல்லாம் உண்பதற்கும் குடிப்பதற்கும் அனுமதி வழங்கி, பிறகு அதிகாலை வந்ததிலிருந்து இரவு வருகின்ற வரை அவற்றை தவிர்த்து நோன்பை முழுமையாக்குங்கள் என்று அல்லாஹ் கட்டளை இட்டிருக்கின்றான். ஆகவே, நோன்பின் பகல் காலங்களில் உண்பதும் குடிப்பதும் தடுக்கப்பட்டது என்பதை அறியமுடிகிறது.

يَتْرُكُ طَعَامَهُ وَشَرَابَهُ وَشَهْوَتَهُ مِنْ أَجْلِي الصِّيَامُ لِي وَأَنَا أَجْزِي بِهِ وَالْحَسَنَةُ بِعَشْرِ أَمْثَالِهَا رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٧٦١.

(மேலும்) நோன்பாளி தனது உணவையும், தனது பானத்தையும், தனது இச்சையையும் எனக்காக விட்டு விடுகிறார்! நோன்பு எனக்கு (மட்டுமே) உரியது; அதற்கு நானே கூலி கொடுப்பேன்! ஒரு நன்மை என்பது அது போன்ற பத்து மடங்குகளாகும்! (என்று அல்லாஹ் கூறுவதாக நபி ﷺ கூறினார்கள்).[1]

உணவாக உட்கொள்ளப்படுகின்ற எதையும் உண்பதாலும் குடிப்பதாலும் நோன்பு முறிந்துவிடும் என்பதில் அறிஞர்கள் ஒருமித்த கருத்தில்தான் இருக்கின்றனர். உணவாக எடுத்துக் கொள்ளப்படாத ஒன்றை சாப்பிட்டாலோ அல்லது குடித்தாலோ நோன்பு முறியுமா என்பதில் இரு கருத்துக்கள் இருந்தாலும் நோன்பு முறிந்துவிடும் என்பதுதான் அதிகமான கல்வியாளர்களின் கருத்தாகும்.

1. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﷺ, நூல்: ஸஹீஹுல் புகாரி 1761.





மூக்கில் மருந்திடுவதும் வேண்டுமென்றே தண்ணீர் செலுத்துவதும் உண்பதைப் போலவும், குடிப்பதைப் போலவும்தான். அது நோன்பை முறித்துவிடும்.

عَنْ لَقِيطِ بْنِ صَبْرَةَ ﷺ قَالَ قُلْتُ يَا رَسُولَ اللهِ أَخْبِرْنِي عَنِ الْوُضُوءِ قَالَ أَسْبِغْ الْوُضُوءَ وَبَالِغْ فِي الِاسْتِنْشَاقِ إِلَّا أَنْ تَكُونَ صَائِمًا رَوَاهُ ابن ماجة ٤٠١.

அல்லாஹ்வின் தூதரே! ﷺ எனக்கு உளூவைப் பற்றி சொல்லுங்கள்! என்று நான் கேட்டேன். ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: உளூவைப் பூரணமாக செய்! மூக்கில் தண்ணீர் செலுத்தி சுத்தம் செய்யும்போது அதிகமாக செய், நீ நோன்பாளியாக இருந்தாலே தவிர![1]

இந்த நபிமொழியிலிருந்து மூக்கும் உணவு செல்வதற்குள்ள ஒரு வழி என்பதையும் அதன் மூலம் உள்ளே செல்லக்கூடியது வயிற்றுக்கும் குடலுக்கும் சென்றுவிடும் என்பதையும் அறிய முடிகிறது.

நறுமணத்தை நுகருவதால், (அல்லது துர்வாடை உள்ளே செல்வதால்) நோன்பு முறிந்துவிடாது. ஏனெனில், நறுமணத்திற்கு என்று குடலுக்குள் செல்லக்கூடிய அளவு ஒரு தடிமன் ஏதும் இல்லை. ஆனால், புகைக்கு தடிமன் இருக்கின்றது. ஆகவே, நோன்பாளி சாம்பிராணி, ஊதுபத்தி, புகூர் புகைகளை உள்ளே சுவாசிப்பதை, அல்லது வாயின் வழியாக உள்ளே இழுப்பதை தவிர்த்துக்கொள்ள வேண்டும். புகை என்பது தடிமன் உள்ள ஒன்றாகும். அல்லாஹ் மிக அறிந்தவன்.

**நான்காவது வகை:** உண்பது அல்லது குடிப்பதின் நோக்கத்தில் உள்ள செயல்களாகும். இதை இரண்டு வகையாகப் பிரிக்கலாம்.

ஒன்று: நோயாளிக்கு இரத்தம் ஏற்றுதல். ஒருவருக்கு அதிகமாக இரத்தம் வெளியேறியதால் அவருக்கு இரத்தம் ஏற்ற வேண்டிய கட்டாயம் ஏற்பட்டு இரத்தம் ஏற்றப்பட்டால் அவரின் நோன்பு முறிந்துவிடும்.

1. அறிவிப்பாளர்: லக்கீத் இப்னு ஸப்ரா ؓ, நூல்: சுனன் இப்னு மாஜா 401.





ஏனெனில், உணவு இன்னும் குடிப்பின் நோக்கம் இரத்தமாகும். ஆகவே, ஒருவரின் உடலில் இரத்தம் ஏற்றப்பட்டால் அவரது நோன்பு முறிந்துவிடும். உடல் இரத்தத்தைக் கொண்டுதான் நிலைப்பெற்றிருக்கிறது. ஒருவருக்கு இரத்தம் இல்லை என்றால் அவருக்கு மரணம் ஏற்பட்டுவிடும். உணவிலிருந்தும் பானத்திலிருந்தும்தான் இரத்தம் உருவாகிறது.

ஆகவே, உணவு உண்பது இன்னும் குடிப்பதைப் போன்றுதான் இரத்தம் ஏற்றுவதும். எப்படி உண்ணாமல், குடிக்காமல் இருந்தால் உடல் பலவீனம் ஏற்பட்டு, மரணம் சம்பவித்து விடுமோ அதுபோலவேதான் இரத்தமும். அது இல்லை என்றால் மரணம் சம்பவித்துவிடும்.

மற்றொன்று: உடலுக்கு வலிமைத் தரக்கூடிய ஊசிகளை போடுவது.

உண்பது இன்னும் குடிப்பதை விட்டும் தேவை இன்றி இருக்கச் செய்கின்ற ஊசிகளை போடுவதும் நோன்பை முறித்துவிடும். இந்த வகை ஊட்டச்சத்து ஊசிகளை போடுவது வெளிப்படையில் உண்பது குடிப்பது போன்று இல்லையென்றாலும் உண்பது, குடிப்பதால் என்ன நோக்கமோ அது இதன் மூலம் நிறைவேறுவதால் இதற்கும் அதே சட்டம்தான்.

**கவனிக்க:** ஊட்டச்சத்து அல்லாத ஊசிகளை போட்டுக் கொள்வதால் நோன்பு முறிந்துவிடாது. அந்த ஊசியை நரம்புகளில், அல்லது தசைகளில், அல்லது கையின் இரத்த நரம்பில் போட்டுக் கொள்வதாலும் நோன்பு முறிந்துவிடாது. அவ்வாறு ஊசி போடும்போது தொண்டையில் அதன் உஷ்ணத்தை உணர்ந்தாலும் சரி. ஏனெனில், இந்த வகை ஊசிகள் உணவும் இல்லை, பானமும் இல்லை. அந்த நோக்கத்தில் உள்ளதும் இல்லை. ஆகவே, உண்பது, குடிப்பதின் சட்டம் இதற்கு பொருந்தாது.

கண்ணில், அல்லது காதில் சொட்டு மருந்து போடுவதால், சுர்மா போடுவதால் நோன்பு முறிந்து விடாது. இதுதான் அறிஞர்களின் கூற்றுகளில் மிக சரியான கூற்றாகும்.





ஏனெனில் இவை உணவு வகைகளை சேர்ந்தவை அல்ல. கண்ணும் காதும் உணவோ குடிபானமோ செல்வதற்கு உள்ள வழியுமல்ல. சில அறிஞர்கள் இவற்றால் நோன்பு முறிந்துவிடும் என்று கூறி இருப்பதால் அந்தக் கூற்றையும் கவனத்தில்கொண்டு இவற்றை இரவில் செய்வது நல்லது என்று கூறலாம். அது பேணுதலாகவும் இருக்கும். ஆனால், இரவில்தான் செய்ய வேண்டும் என்று கட்டாயமாக சொல்ல முடியாது. அல்லாஹ் மிக அறிந்தவன்.

ஆஸ்துமா நோய் உள்ளவர்கள் சுவாச சிரமத்தை உணரும்போது அவர்கள் இன்ஹேலர் பயன்படுத்துவது நோன்பை முறிக்காது. ஏனெனில், இது உண்பதைப் போன்றோ, குடிப்பதைப் போன்றோ அல்ல. ஆகவே, டெஸ்ட் -பகுப்பாய்வு செய்வதற்காக இரத்தம் எடுப்பதைப் போன்றுதான் இதுவும். எனவே, இது நோன்பை முறிக்காது. பகுப்பாய்வு செய்வதற்காக இரத்தம் எடுப்பதும், ஊட்டச்சத்து அல்லாத ஊசிகளை சிகிச்சைக்காக பயன்படுத்துவதும் நோன்பை முறிக்காது, இது நோன்பாளிக்கு நிர்ப்பந்தமான தேவையாக இருந்தால்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَقَدْ فَصَّلَ لَكُمْ مَا حَرَّمَ عَلَيْكُمْ إِلَّا مَا اضْطُرِرْتُمْ إِلَيْهِ

உங்கள் மீது அவன் தடுத்தவற்றை அவன் உங்களுக்கு விரிவாக விளக்கியுள்ளான், ஆனால், நீங்கள் (இவற்றில்) எந்த ஒன்றையாவது உண்பதற்கு (அல்லது செய்வதற்கு) நிர்ப்பந்திக்கப்பட்டாலே தவிர.

(அல்குர்ஆன் 6:119)

ஆகவே, இதுபோன்ற 'ஸ்பிரே' (-தெளிப்பானை) பயன்படுத்துவதும் தவறல்ல. இது ஒரு வகையான கேஸ் ஆகும். அது எதிலும் தரிபட்டு இருக்காது. வெளியேறிய உடன் அது காணாமல் போய்விடும். இன்னும் இது குடலுக்குள் செல்வதில்லை. ஆகவே, சுவாச நோய்களுக்காக சில மருத்துவ 'ஸ்பிரே' தெளிப்பான்களை பயன்படுத்துவது உணவாகவும் பானமாகவும் இன்னும் அதன் நோக்கத்திலும் இல்லாத ஒன்றுதான். ஆகவே, இவற்றால் நோன்பு முறியாது.





**ஐந்தாவது வகை:** ஹிஜாமா மூலம் இரத்தம் எடுப்பது. இது நோன்பை முறித்துவிடும்.

**عن شَدَّاد بْن أَوْسٍ ﷺ بَيْنَمَا هُوَ يَمْشِي مَعَ رَسُولِ اللهِ ﷺ بِالْبَقِيعِ فَمَرَّ عَلَى رَجُلٍ يَحْتَجِمُ بَعْدَ مَا مَضَى مِنْ الشَّهْرِ ثَمَانِيَ عَشْرَةَ لَيْلَةً فَقَالَ رَسُولُ اللهِ ﷺ أَفْطَرَ الْحَاجِمُ وَالْمَحْجُومُ رَوَاهُ أَبُو دَاوُدَ بِرَقْمِ ١٦٧١**

ஷத்தாத் இப்னு அவ்ஸ் ﷺ அவர்கள் ரசூலுல்லாஹ் ﷺ அவர்களுடன் பக்கீஃ[1] இல் நடந்து சென்று கொண்டிருந்த போது ரமழான் மாதத்தில் பதினெட்டு நாள்கள் முடிந்திருந்த நிலையில் ஒருவர் ஹிஜாமா -இரத்தம் குத்தி எடுத்துக் கொண்டிருந்தார். அப்போது ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: இரத்தம் குத்தி எடுத்தவரும் யாரிடம் எடுக்கப்பட்டதோ அவரும் நோன்பை முறித்துவிட்டனர்.[2]

**عَنْ ثَوْبَانَ ﷺ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ أَفْطَرَ الْحَاجِمُ وَالْمَحْجُومُ رَوَاهُ أَبُو دَاوُدَ بِرَقْمِ ٢٠٢٣.**

ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: ஹிஜாமா இரத்தம் குத்தி எடுப்பவரும் யாரிடம் எடுக்கப்பட்டதோ அவரும் நோன்பை முறித்து விட்டனர்.[3]

**ஆறாவது வகை:** வாந்தி எடுப்பது.

அதாவது, வேண்டுமென்றே தானாக வாந்தியை வரவழைப்பது நோன்பை முறித்துவிடும்.

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ مَنْ ذَرَعَهُ الْقَيْءُ فَلَا قَضَاءَ عَلَيْهِ وَمَنْ اسْتَقَاءَ فَعَلَيْهِ الْقَضَاءُ رَوَاهُ ابن ماجه برقم ١٦٦٦**

நபி ﷺ கூறினார்கள்: யாருக்கு வாந்தி தானாக வந்ததோ அவர்

1. பக்கீஃ : மஸ்ஜிது நபவிக்கு அருகில் இருக்கின்ற அடக்கஸ்தலம்.
2. அறிவிப்பாளர்: ஷத்தாத் இப்னு அவ்ஸ் ﷺ, நூல்: சுனன் அபூ தாவூத் 1671.
3. அறிவிப்பாளர்: சவ்பான் ﷺ, நூல்: சுனன் அபூ தாவூத் 2023.

மீது நோன்பை கழா செய்ய அவசியமில்லை. யார் வேண்டுமென்றே வாந்தி எடுப்பாரோ அவர் நோன்பை கழா செய்யட்டும்.[1]

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ مَنْ ذَرَعَهُ الْقَيْءُ فَلَيْسَ عَلَيْهِ قَضَاءٌ وَمَنْ اسْتَقَاءَ عَمْدًا فَلْيَقْضِ رَوَاهُ التِّرْمِذِيُّ بِرَقْمِ ٦٥٣**

நபி ﷺ கூறினார்கள்: யாருக்கு வாந்தி தானாக வந்ததோ அவர் மீது நோன்பை கழா செய்ய அவசியமில்லை. யார் வேண்டுமென்றே வாந்தி எடுப்பாரோ அவர் நோன்பை கழா செய்யட்டும்.[2]

அறிஞர் இப்னுல் முன்திர் ﵀ கூறுகிறார்: யாருக்கு வாந்தி தானாக முட்டிக்கொண்டு வந்ததோ அவர் மீது எவ்வித குற்றமும் இல்லை, (அவர் நோன்பை தொடருவார். அவர் மீது பரிகாரம் ஏதும் இல்லை.) வேண்டுமென்று யார் வாந்தி எடுப்பாரோ அவருடைய நோன்பு 'பாத்தில்' (-வீணாக) ஆகிவிடும்.

அறிஞர் இப்னு குதாமா ﵀ கூறுகிறார்: இதுதான் பெரும்பாலான கல்வியாளர்களின் கருத்தாகும்.

அறிஞர் அல்கத்தாபி ﵀ கூறுகிறார்: இதில் கருத்து வேற்றுமையை நான் அறியமாட்டேன். (-இதில் கருத்து வேற்றுமை இல்லை.)

ஒருவர் வாந்தியை எந்த வகையில் வரவழைத்தாலும் சரி அவருடைய நோன்பு முறிந்துவிடும். ஒருவர் வயிற்றை பிசைகிறார்; தொண்டையில் கைவிட்டு குடைகிறார்; வாந்தியை உண்டாக்கும் வாசனைகளை நுகர்கிறார்; எதைப் பார்த்தால் வாந்தி வருமோ அதை வேண்டுமென்றே பார்க்கிறார் இப்படி செய்வதால் இவருக்கு வாந்தி வந்து விட்டால், அவருடைய நோன்பு முறிந்துவிடும். அவர் அந்த நோன்பை கழா செய்ய வேண்டும்.

இவருடைய செயல் இல்லாமல், இவர் எதையும் செய்யாமல் வாந்தி வந்தால் நோன்புக்கு எந்த பாதிப்பும் இல்லை. தானாக வருகின்ற

1. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: சுனன் இப்னு மாஜா 1666.
2. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: ஜாமிவுத் திர்மிதி 653.





வாந்தியை தடுக்கக் கூடாது. அது அவருக்குக் கெடுதியை உண்டாக்கும். வாந்தி எடுப்பதற்கும் முயற்சி செய்யக்கூடாது, வருகின்ற வாந்தியை அடக்கவும் முயற்சிக்கக் கூடாது. வாந்தி தானாக வந்துவிட்டால் நோன்பு முறியாது, நோன்பை கழா செய்யத் தேவை இல்லை.

மேலும், உணவில் சாப்பிட்ட ஒன்று தொண்டையில் இருந்து வெளியே வந்து அது இவரின் எவ்வித செயலும் இன்றி மீண்டும் வாயிக்குள் சென்றுவிட்டால் நோன்பு முறிந்துவிடாது. வெளியில் வந்ததை இவர் வேண்டுமென்றே முழுங்கினால் நோன்பு முறிந்து விடும். சாப்பிட்டதில் ஏதாவது தொண்டை வரை வெளியே வந்துவிட்டால் அவர் அதை வெளியே துப்பிவிட வேண்டும்.

**ஏழாவது வகை:** இஸ்லாமை விட்டு வெளியேறுவது.

ஒருவர் தனது சொல்லால், அல்லது செயலால், அல்லது நம்பிக்கையால், அல்லது சந்தேகத்தால் இஸ்லாமை விட்டு வெளியேறிவிட்டால், அல்லது இஸ்லாமிலிருந்து வெளியேற்றி விடக்கூடிய, ஷஹாதாவை முறிக்கக்கூடிய ஒரு செயலை செய்து விட்டால் அவருடைய நோன்பு முறிந்துவிடும். நோன்பு மட்டுமல்ல அவரின் எல்லா நல்லமல்களும் வீணாகிவிடும்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

لَئِنْ أَشْرَكْتَ لَيَحْبَطَنَّ عَمَلُكَ

நீர் இணைவைத்தால் உமது அமல்கள் நிச்சயமாக வீணாகிவிடும்.

(அல்குர்ஆன் 39:65)

அறிஞர் இப்னு குதாமா ﵀ கூறுகிறார்: நோன்பு வைத்திருக்கின்ற நேரத்தில் ஒருவர் ‘முர்தத்’ ஆகிவிட்டால் -மதம் மாறிவிட்டால் அவரின் நோன்பு வீணாகிவிடும் என்பதில் கல்வியாளர்களுக்கு மத்தியில் கருத்து வேற்றுமை இருப்பதாக நாம் அறிய மாட்டோம்.

நோன்பு ஒரு வணக்கமாகும். அதில் நிய்யத் இருப்பது





நிபந்தனையாகும். ஒருவர் இஸ்லாமை விட்டு வெளியேறுவதால் அது அவரின் நிய்யத்தை பாழாக்கிவிடும்.

மேலும் நோன்பு, தொழுகையைப் போல் ஒரு வணக்கமாகும். 'குஃப்ர்' -இறை நிராகரிப்பு அதற்கு முரணானதாகும். இஸ்லாமிய நாட்டில் வாழுகின்ற முஸ்லிம் ஒருவர் இஸ்லாமிய மார்க்கத்தை விட்டு வெளியேறினால் அவருக்கு இஸ்லாமிய மார்க்கத்தை விளக்கமாக எடுத்துக் கூறி அவரை மறுபடியும் இஸ்லாமிற்கு அழைக்கப்படும். அவர் பாவமன்னிப்புக் கோரி முஸ்லிமாகி விட்டால் அவரது உயிர் பாதுகாக்கப்படும். இல்லையென்றால் ஆட்சியாளர் அவரை கொன்றுவிடுவார்.

---------



# நோன்பை முறிக்கின்ற செயல்களின் நிபந்தனைகள்

நோன்பை முறிக்கின்ற செயல்களில் ஹைழ், நிஃபாஸ் ஆகிய இரண்டைத் தவிர மற்ற செயல்களால் நோன்பு முறிவதற்கு மூன்று நிபந்தனைகள் அவசியமாகும். அந்த மூன்று நிபந்தனைகள் இல்லையென்றால் இந்த செயல்கள் நோன்பை முறிக்காது.

அறிஞர் முஹம்மது இப்னு முஃப்லிஹ் அல்மக்திஸி ﵀ கூறுகிறார்: மேற்கூறப்பட்ட அனைத்தும் நோன்பை முறித்துவிடும். ஆனால், இவை ஒருவரின் நோன்பை முறிப்பதற்கு சில நிபந்தனைகள் உள்ளன. அ) இந்த செயல்களில் ஒன்றை நோன்பாளி வேண்டுமென்றே செய்வது. ஆ) தான் நோன்பு வைத்திருக்கின்றோம் என்பது நினைவிருக்கின்ற நிலையில் செய்வது. இ) யாரின் நிர்ப்பந்தமும் இன்றி சுயவிருப்பத்துடன் செய்வது.

மேற்கூறப்பட்ட நிபந்தனைகளின் சுருக்கமான விளக்கம்:

**முதல் நிபந்தனை:** நோன்பாளி சட்டத்தை அறிந்திருக்க வேண்டும். ஒருவருக்கு சட்டமே தெரியாமல், அறியாமையினால் செய்துவிட்டால் நோன்பு முறியாது.

**عَنْ ابْنِ عَبَّاسٍ قَالَ لَمَّا نَزَلَتْ هَذِهِ الْآيَةُ وَإِنْ تُبْدُوا مَا فِي أَنْفُسِكُمْ أَوْ تُخْفُوهُ يُحَاسِبْكُمْ بِهِ اللَّهُ قَالَ دَخَلَ قُلُوبَهُمْ مِنْهَا شَيْءٌ لَمْ يَدْخُلْ قُلُوبَهُمْ مِنْ شَيْءٍ فَقَالَ النَّبِيُّ ﷺ قُولُوا سَمِعْنَا وَأَطَعْنَا وَسَلَّمْنَا قَالَ فَأَلْقَى اللَّهُ الْإِيمَانَ فِي قُلُوبِهِمْ فَأَنْزَلَ اللَّهُ تَعَالَى لَا يُكَلِّفُ اللَّهُ نَفْسًا إِلَّا وُسْعَهَا لَهَا مَا كَسَبَتْ وَعَلَيْهَا مَا اكْتَسَبَتْ رَبَّنَا لَا تُؤَاخِذْنَا إِنْ نَسِينَا أَوْ أَخْطَأْنَا قَالَ قَدْ فَعَلْتُ رَبَّنَا وَلَا تَحْمِلْ**





عَلَيْنَا إِصْرًا كَمَا حَمَلْتَهُ عَلَى الَّذِينَ مِنْ قَبْلِنَا قَالَ قَدْ فَعَلْتُ وَاغْفِرْ لَنَا وَارْحَمْنَا أَنْتَ مَوْلَانَا قَالَ قَدْ فَعَلْتُ رَوَاهُ مُسْلِمٌ بِرَقْمِ ١٨٠

இப்னு அப்பாஸ் ﵄ அவர்கள் கூறியதாவது:

**"உங்கள் மனதிலுள்ளவற்றை நீங்கள் வெளிப்படுத்தினாலும், அல்லது அவற்றை மறைத்தாலும் அவற்றைப் பற்றியும் அல்லாஹ் உங்களிடம் விசாரணை செய்வான்"**

எனும் இந்த (2:284ஆவது) வசனம் இறங்கியபோது,

மக்களின் உள்ளத்தில் முன்பு ஏற்பட்டிராத (பயம்) ஒன்று அப்போது ஏற்பட்டது.

உடனே நபி ﷺ அவர்கள் (தோழர்களை நோக்கி), **"செவியுற்றோம்; கீழ்ப்படிந்தோம்; முற்றிலும் பணிந்தோம்; ஏற்றுக்கொண்டோம்"** (சமிஃனா, வ அதஃனா, வ சல்லம்னா) என்று கூறுங்கள்" என்றார்கள்.

உடனே (மக்களும் அவ்வாறு செய்யவே) அவர்களது உள்ளங்களில் அல்லாஹ் ஈமானை -நம்பிக்கையை ஏற்படுத்தினான். மேலும்,

**"எந்த ஆன்மாவுக்கும் அது தாங்கிக்கொள்ள முடியாத பொறுப்பை அல்லாஹ் சுமத்துவதில்லை; அது சம்பாதித்த நன்மை அதற்கே; அது சம்பாதித்த தீமையும் அதற்கே. எங்கள் அதிபதியே! நாங்கள் மறந்து விட்டாலும், அல்லது நாங்கள் தவறு செய்து விட்டாலும் எங்களைத் தண்டித்துவிடாதே!"**

(என்று பிரார்த்தியுங்கள்)" எனும் (2:286ஆவது) வசனத் தொடரை அல்லாஹு தஆலா இறக்கினான்.

(அவ்வாறே மக்கள் பிரார்த்தித்ததும், உங்கள் பிரார்த்தனையை ஏற்று) அவ்வாறே செய்தேன் என்று அல்லாஹ் கூறினான்.

**"எங்கள் அதிபதியே! எங்களுக்கு முன் சென்றோர் மீது சுமத்திய சுமையைப் போன்று எங்கள் மீது சுமத்தி விடாதே!"**





(என்று நம்பிக்கையாளர்கள் பிரார்த்திக்க) “அவ்வாறே செய்தேன்” என்று அல்லாஹ் கூறினான்.

**“எங்களை பொருத்தருள்! எங்களை மன்னித்தருள்! எங்கள்மீது கருணை புரி! நீயே எங்கள் காவலன்!”**

(என்று நம்பிக்கையாளர்கள் பிரார்த்திக்க) அதற்கும் அல்லாஹ் அவ்வாறே செய்தேன் என்றான்.[1]

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

**وَلَيْسَ عَلَيْكُمْ جُنَاحٌ فِيمَا أَخْطَأْتُم بِهِ وَلَكِن مَّا تَعَمَّدَتْ قُلُوبُكُمْ وَكَانَ اللهُ غَفُورًا رَّحِيمًا.**

(இதற்கு முன்னர்) நீங்கள் ஏதும் தவறிழைத்திருந்தால் அதைப் பற்றி உங்கள் மீது குற்றமில்லை. (எனினும், வேண்டுமென்றே உங்கள் மனமார நீங்கள் கூறினாலோ (அது உங்கள் மீது குற்றமாகும்.) அல்லாஹ் மிக மன்னிப்பவனாகவும் கருணையுள்ளவனாகவும் இருக்கின்றான். (அல்குர்ஆன் 33:5)

**இரண்டாவது நிபந்தனை:** தான் நோன்பு வைத்திருக்கிறோம் என்பது ஞாபகம் இருப்பதுடன் நோன்புக்கு முரணான காரியத்தை செய்வது.

ஒருவர் மறந்த நிலையில் நோன்பை முறிக்கின்ற காரியத்தைச் செய்துவிட்டால் அவருடைய நோன்பு ‘பாத்தில்’ -வீணாக ஆகிவிடாது. நோன்பு சரியானதாகவே இருக்கும். அவர் நோன்பை ‘கழா’ செய்ய வேண்டியதில்லை.

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ مَنْ نَسِيَ وَهُوَ صَائِمٌ فَأَكَلَ أَوْ شَرِبَ فَلْيُتِمَّ صَوْمَهُ فَإِنَّمَا أَطْعَمَهُ اللهُ وَسَقَاهُ رَوَاهُ مُسْلِمٌ بِرَقْمِ ١٩٥٢**

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: யார் தான் நோன்பாளியாக இருக்கின்றபோது மறந்து, சாப்பிட்டுவிட்டாலோ அல்லது குடித்து

1. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﷺ, நூல்: ஸஹீஹ் முஸ்லிம் 180.





விட்டாலோ அவர் தனது நோன்பை முழுமைப்படுத்தவும். அவருக்கு உணவளித்ததும் நீர் புகட்டியதும் அல்லாஹ்தான்.[1]

நோன்பை முழுமைப்படுத்தவும் என்று நபி ﷺ கூறியது அவரின் நோன்பு முறியவில்லை என்பதற்கு ஆதாரமாகும். அல்லாஹ்தான் உணவளித்தான், நீர் புகட்டினான் என்று கூறியது இது விஷயத்தில் அல்லாஹ் அவரை குற்றம் பிடிக்க மாட்டான், தண்டிக்க மாட்டான் என்பதற்கு ஆதாரமாகும்.

**قال البخاري رحمه الله وَقَالَ عَطَاءٌ رحمه الله إِنْ اسْتَنْثَرَ فَدَخَلَ الْمَاءُ فِي حَلْقِهِ لَا بَأْسَ إِنْ لَمْ يَمْلِكْ وَقَالَ الْحَسَنُ إِنْ دَخَلَ حَلْقَهُ الذُّبَابُ فَلَا شَيْءَ عَلَيْهِ وَقَالَ الْحَسَنُ وَمُجَاهِدٌ إِنْ جَامَعَ نَاسِيًا فَلَا شَيْءَ عَلَيْهِ.**

இமாம் அதா رحمه الله கூறுகிறார்: ஒருவர் மூக்கில் தண்ணீர் செலுத்தும்போது தண்ணீர் அவரின் தொண்டையில் சென்று விட்டால், (இந்த செயல்) அவரின் சக்திக்கு உட்படாத விஷயம் என்பதால் அவர் மீது தவறாகாது. இமாம் ஹசன் رحمه الله கூறுகிறார்: அவரின் தொண்டையில் ஈ சென்றுவிட்டால் அவர் மீது குற்றம் ஏதுமில்லை. இமாம் ஹசன் رحمه الله, இமாம் முஜாஹித் رحمه الله கூறுகிறார்கள்: ஒருவர் மறந்தவராகவே உடலுறவு வைத்துவிட்டால் அவர் மீதும் குற்றம் இல்லை.[2]

ஆனால், அவருக்கு ஞாபகம் வந்தவுடன், அல்லது அவருக்கு ஒருவர் ஞாபகமூட்டியவுடன் அவர் உடனே தன்னை தடுத்துக் கொள்ள வேண்டும். தான் சாப்பிட்டுக் கொண்டிருந்ததை நிறுத்திவிட்டு, தன் வாயில் உள்ளதை துப்பிவிட வேண்டும். காரணம் இப்போது அவருக்கு ஞாபகம் வந்துவிட்டது. அல்லது ஞாபகமூட்டப்பட்டுவிட்டது.

**மூன்றாவது நிபந்தனை:** அவர் சுயவிருப்பத்துடன் செய்திருக்க வேண்டும். தனது சுயவிருப்பத்துடன், தனது நாட்டத்துடன்

1. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா رضي الله عنه, நூல்: ஸஹீஹ் முஸ்லிம் 1952
2. நூல்: புகாரி, பாடம்: நோன்பாளி மறந்தவராக சாப்பிட்டால் அல்லது பருகினால்.





ஒருவர் இந்த செயல்களில் ஒன்றை செய்தால் அவரின் நோன்பு முறிந்துவிடும். அவரை யாராவது வலுக்கட்டாயப்படுத்தி இவற்றை செய்யவைத்தால் அவரின் நோன்பு முறியாது. அவரின் நோன்பு சரியானதாகவே இருக்கும். பரிகாரம் ஏதும் செய்வது அவர் மீது அவசியம் இல்லை

வலுக்கட்டாயத்தால் குஃப்ரை ஒருவர் செய்துவிடுகிறார். ஆனால், அவருடைய உள்ளத்தில் ஈமான் பரிபூரணமாக இருக்கிறது என்றால் அவர் மன்னிக்கப்பட்டு விடுகின்றார் என்று அல்லாஹ் கூறுகின்றான்.

**مَن كَفَرَ بِاللهِ مِن بَعْدِ إيمَانِهِ إِلاَّ مَنْ أُكْرِهَ وَقَلْبُهُ مُطْمَئِنٌّ بِالإِيمَانِ وَلَكِن مَّن شَرَحَ بِالْكُفْرِ صَدْرًا فَعَلَيْهِمْ غَضَبٌ مِّنَ اللهِ وَلَهُمْ عَذَابٌ عَظِيم.**

(ஆகவே,) எவரேனும் நம்பிக்கை கொண்டதன் பின்னர், அவர் அல்லாஹ்வை (நிராகரித்தால் அவரைப் பற்றி கவனிக்கப்படும்.) அவருடைய உள்ளம் நம்பிக்கையைக் கொண்டு முற்றிலும் திருப்தியடைந்தே இருக்க, எவருடைய நிர்ப்பந்தத்தினால் அவர் (இவ்வாறு) நிராகரித்தால் (அவர் மீது யாதொரு குற்றமுமில்லை.) எனினும், அவருடைய உள்ளத்தில் நிராகரிப்பே நிறைந்திருந்(து இவ்வாறு செய்)தால் அவர் மீது அல்லாஹ்வுடைய கோபம்தான் ஏற்படும். அவருக்கு கடுமையான வேதனையுமுண்டு

(அல்குர்ஆன் 16:106.)

நிர்ப்பந்தத்தால் குஃப்ர் -நிராகரிப்பை செய்தவரையே அல்லாஹ் மன்னித்துவிட்டபோது அதை விட குறைவான பாவத்தை நிர்ப்பந்தத்தால் செய்பவர் நிச்சயம் அல்லாஹ்வின் மன்னிப்பிற்குரியவர் ஆவார்.

**عَنْ أَبِي ذَرٍّ الْغِفَارِيِّ رضي الله عنه قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ إِنَّ اللهَ تَجَاوَزَ عَنْ أُمَّتِي الْخَطَأَ وَالنِّسْيَانَ وَمَا اسْتُكْرِهُوا عَلَيْهِ رَوَاهُ ابن ماجه برقم ٢٠٣٣.**

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: நிச்சயமாக அல்லாஹ் எனது உம்மத்தை விட்டும் அது தவறுதலாக செய்ததையும், மறதியில்





செய்ததையும், இன்னும் நிர்ப்பந்திக்கப்பட்டு செய்ததையும் மன்னித்து விட்டான்.[1]

ஒரு நோன்பாளி நோன்பை விடுவதற்கு நிர்ப்பந்திக்கப்பட்டு அவர் நோன்பை விட்டுவிட்டால் அவரின் நோன்பு சரியானதாக ஆகிவிடும். அவர் மீது நோன்பை கழா செய்வது அவசியமில்லை. பரிகாரமும் அவசியமில்லை. மேலும், ஓர் ஆண், தனது மனைவியை வலுக்கட்டாயப்படுத்தி அவளுடன் உடலுறவு கொண்டுவிட்டால் அவளின் நோன்பு சரியானதாக ஆகிவிடும். அவள் மீது பரிகாரம் ஏதும் இல்லை.

நோன்பாளியின் தொண்டையில், வயிற்றில் ஏதாவது ஒன்று அவரின் விருப்பம் இன்றி, அவரின் சுய செயல் இன்றி சென்றுவிட்டால் அவரின் நோன்பு முறியாது. நோன்பு சரியானதாகத்தான் இருக்கும். அவர் நோன்பை கழா செய்ய வேண்டியதில்லை.

இவ்வாறுதான் வாய் கொப்பளிக்கும் போதும், மூக்கில் தண்ணீர் செலுத்தும் போதும் தண்ணீர் தொண்டைக்குள் சென்றுவிட்டால், அல்லது மூக்கின் வழியாக வயிற்றில் தண்ணீர் சென்றுவிட்டால் நோன்பு முறியாது.

நோன்பு வைத்திருப்பவர் தூங்கிக் கொண்டிருக்கும் போது அவருக்கு கனவில் ஸ்கலிதம் ஏற்பட்டுவிட்டால் நோன்பு முறியாது. கனவில் நிகழ்வது அவரின் சக்திக்கும் விருப்பத்திற்கும் உட்பட்டதல்ல.

---------

1. அறிவிப்பாளர்: அபூ தர் அல்கிஃபாரி ﷺ, நூல்: சுனன் இப்னு மாஜா 2033.





# நோன்பில்
# தடுக்கப்பட்ட செயல்கள்

எதை செய்பவருக்கு தண்டனையும் அல்லாஹ்வை பயந்து அதை விடுகின்றவருக்கு நன்மையும் கொடுக்கப்படுமோ அதற்கு தடுக்கப்பட்ட செயல் என்று சொல்லப்படும்.

அல்லாஹ்வும் அவனது ரசூலும் ﷺ எதை எல்லாம் 'ஹராமாக' -தடுக்கப்பட்டதாக ஆக்கினார்களோ அவையெல்லாம் நோன்பாளியின் மீது 'ஹராமாக' -தடுக்கப்பட்டதாக இருக்கும்.

நோன்பாளியின் மீது தடுக்கப்பட்ட -ஹராமாக்கப்பட்ட செயல்கள் இரு வகைப்படும்.

**முதல் வகை:** முன்பு கூறப்பட்ட நோன்பை முறிக்கின்ற அனைத்து செயல்கள். இவை அனைத்தும் ஒரு நோன்பாளியின் மீது தடுக்கப்பட்டவையாக இருக்கும். இவற்றை செய்வதால் நோன்பு முறிந்துவிடும். உதாரணமாக உண்பது, குடிப்பது, உடலுறவு வைப்பது, தனது விருப்பத்துடன் இந்திரியத்தை வெளியாக்குவது, இரத்தம் குத்தி எடுப்பது, வேண்டுமென்றே வாந்தி எடுப்பது, உணவின் நோக்கத்தை கொடுக்கக்கூடிய பொருள்களை உட்கொள்வது, ஃபர்ழான நோன்பில் மார்க்கம் அனுமதித்த காரணம் இன்றி நோன்பை முறிப்பதாக 'நிய்யத்' -மனதில் உறுதியாக நினைப்பது, இவை எல்லாம் தடுக்கப்பட்ட செயல்களாக இருக்கும்.

ஆனால், ஒருவருக்கு நோன்பை விடுவதற்கு ஒரு சரியான காரணம் இருந்தால் அவர் நோன்பை முறிக்கலாம். ஒருவர் ஒரு கடமையான அமலை செய்ய ஆரம்பித்து விட்டால் அதை அவர் முழுமையாக நிறைவேற்ற வேண்டும். மார்க்கம் அனுமதித்த ஏதாவது ஒரு சரியான





காரணம் இருந்தால் மட்டும்தான் அவர் அந்த அமலை முறிக்கலாம். ரமழான் மாதத்தில் நோன்பாளி தான் வைத்துள்ள நோன்பை தகுந்த காரணமின்றி முறித்துவிட்டால் அவர் பெரிய பாவத்தை செய்தவராவார். ஆகவே, நோன்பாளி அந்த பாவத்தைவிட்டு விலகுவதுடன் மீதமுள்ள நேரத்தில் அவர் கட்டுப்பாட்டுடன் இருக்க வேண்டும். பிறகு, தான் விட்ட நோன்பை கழாவும் செய்ய வேண்டும். தனது இந்த குற்றத்திற்காக அல்லாஹ்விடம் தவ்பா செய்து பாவமன்னிப்பு கேட்க வேண்டும்.

ரமழான் மாதத்தின் பகல் நேரத்தில் உடலுறவு கொண்டதால் அவர் நோன்பை முறித்து இருந்தால் அவர் பரிகாரமும் செய்தாக வேண்டும். நோன்பை கழாவும் செய்ய வேண்டும். இந்த பரிகாரம் என்ன வென்று முன்பு தெளிவாக விளக்கப்பட்டுள்ளது.

ரமழான் அல்லாத மாதத்தில் வைக்கப்பட்டுள்ள ஃபர்ழான நோன்பாக இருந்தால், உதாரணமாக: குற்ற செயல்களுக்காக வைக்கப்படுகின்ற நோன்புகளைப் போல், அல்லது ரமழானில் விடுபட்ட நோன்புகளை கழா செய்வதைப் போல், அல்லது நேர்ச்சையால் தன்மீது கடமையாக்கிய நோன்புகளைப் போல், இந்த வகை நோன்பை ஒருவர் முறித்துவிட்டால் அவர் பகலில் மீதமுள்ள நேரங்களில் கட்டுப்பாட்டுடன் இருக்க வேண்டும் என்ற அவசியமில்லை.

அவர் தனது குற்றத்திற்காக அல்லாஹ்விடம் தவ்பா செய்ய வேண்டும், பாவமன்னிப்புக் கோரி திருந்த வேண்டும். ஃபர்ழான நோன்பில் ஒருவர் தகுந்த காரணம் இல்லாமல் நோன்பை முறித்தால் அது பற்றி மிகப் பெரிய எச்சரிக்கை வந்துள்ளது.

**عَنْ أَبِي أُمَامَةَ الْبَاهِلِيِّ ﵁ قَالَ سَمِعْتُ رَسُولَ اللهِ ﷺ يَقُولُ بَيْنَا أَنَا نَائِمٌ إِذْ أَتَانِي رَجُلَانِ فَأَخَذَا بِضَبْعَيَّ فَأَتَيَا بِي جَبَلًا وَعْرًا فَقَالَا اصْعَدْ. فَقُلْتُ إِنِّي لَا أُطِيقُهُ. فَقَالَا إِنَّا سَنُسَهِّلُهُ لَكَ. فَصَعِدْتُ حَتَّى إِذَا كُنْتُ فِي سَوَاءِ الْجَبَلِ إِذَا بِأَصْوَاتٍ شَدِيدَةٍ قُلْتُ مَا هٰذِهِ الْأَصْوَاتُ؟ قَالُوا هٰذَا عُوَاءُ أَهْلِ النَّارِ. ثُمَّ انْطُلِقَ**





بِي فَإِذَا أَنَا بِقَوْمٍ مُعَلَّقِينَ بِعَرَاقِيبِهِمْ مُشَقَّقَةٍ أَشْدَاقُهُمْ تَسِيلُ أَشْدَاقُهُمْ دَمًا قَالَ قُلْتُ مَنْ هَؤُلَاءِ؟ قَالَ هَؤُلَاءِ الَّذِينَ يُفْطِرُونَ قَبْلَ تَحِلَّةِ صَوْمِهِمْ. رَوَاهُ ابن خزيمة برقم ١٩٨٦.

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: நான் தூங்கிக்கொண்டிருந்த போது இருவர் என்னிடம் வந்து எனது இரு புஜங்களையும் பிடித்து கரடு முரடான கஷ்டமான ஒரு மலைக்கு கொண்டுவந்தார்கள். இதில் ஏறுங்கள் என்று கூறினார்கள். நான் அதற்கு சக்தி பெற மாட்டேன் என்று கூறினேன். நாங்கள் உமக்கு அதை இலகுவாக்கித் தருவோம் என்று அவர்கள் கூறினார்கள்.

ஆகவே, நான் ஏறினேன். மலையின் நடுவில் நான் இருந்தபோது கடுமையான சப்தங்கள் அங்கு இருந்தன. இவை என்ன சப்தங்கள் என்று நான் கேட்டேன். இது நரகவாசிகளின் ஊளை என்று கூறினார்கள். பிறகு என்னை அழைத்து செல்லப்பட்டது. அப்போது அங்கே ஒரு கூட்டத்தார்களை நான் பார்த்தேன். அவர்கள் தங்கள் கரண்டைக்கால் நரம்புகளில் தலைக்கீழாக தொங்கவிடப்பட்டிருந்தார்கள். அவர்களுடைய வாயின் இரண்டு பக்கங்களிலும் இரத்தம் வழிந்து கொண்டிருந்தது. இவர்கள் யார் என்று நான் கேட்டேன். இவர்கள்தான் நோன்பு திறப்பதின் நேரம் வருவதற்கு முன்னர் நோன்பு திறந்தவர்கள் என்று அவர்கள் கூறினார்கள்.[1]

**இரண்டாவது வகை:** ரமழான் மாதத்திலும் இன்னும் மற்ற எல்லா மாதங்களிலும் இஸ்லாமிய மார்க்கத்தில் ஹராமாக்கப்பட்டுள்ள -தடுக்கப்பட்டுள்ள எல்லாக் காரியங்களும் ஆகும்.

ஆகவே, நோன்பு வைத்திருப்பவர் அல்லாஹ் ஹராமாக்கிய எல்லா விதமான சொல், செயல்களிலிருந்து விலகி இருக்க வேண்டும். அவற்றில் எதையும் எப்போதும் செய்யக் கூடாது. குறிப்பாக,

1. அறிவிப்பாளர்: அபூ உமாமா அல்பாஹிலி ؓ, நூல்: ஸஹீஹ் இப்னு குஸைமா 1986.





நோன்பிருக்கும் போது மிக கவனமாக அவற்றை விட்டு விலகி இருக்க வேண்டும்.

ஹராமாக்கப்பட்ட காரியங்கள் அநேகம் உள்ளன. அவற்றைவிட்டு எல்லா நேரங்களிலும் -ரமழானிலும், ரமழான் அல்லாத மற்ற நேரத்திலும் அனைத்து முஸ்லிம்களும் விலகி இருக்க வேண்டும்.

---------



# நோன்பில் விரும்பத் தகுந்த ஒழுக்கங்கள்

எந்தக் காரியங்களை செய்தால் நற்கூலி இருக்கின்றதோ, அதைச் செய்யாததால் தண்டனை இல்லையோ அத்தகைய காரியங்களுக்கு விரும்பத்தக்கவை (முஸ்தஹப்) என்று சொல்லப்படும்.

நோன்பில் விரும்பத்தகுந்த பல ஒழுக்கங்கள் உள்ளன. அவற்றை நோன்பாளி பேணவேண்டும். அவற்றை கவனமாக செயலில் கொண்டுவர வேண்டும். அதன் மூலம் நோன்பாளிக்கு நிறைய நன்மைகள் கிடைக்கும்.

**1). ஸஹ்ர் -அதிகாலை விடிவதற்கு முன்பதாக ஸஹ்ர் உணவு உண்பது.**

நோன்பு வைப்பவர் இரவின் இறுதிப் பகுதியில் சாப்பிடுகின்ற உணவு அல்லது பானத்திற்கு 'சுஹூர்' -ஸஹ்ர் உணவு என்று சொல்லப்படும்.

சுஹூருடைய நேரம் அதிகாலை விடிவதற்கு சற்று முன்புள்ள இரவின் இறுதிப் பகுதியாகும். அல்லது இரவின் மூன்றாவது பகுதியிலிருந்து அதிகாலை உதிக்கின்ற வரை உள்ள நேரமாகும்.

**2) ஸஹ்ர் உணவை முடிந்தளவு தாமதப்படுத்தி உண்பது மிகச் சிறந்ததாகும்.**

**عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ ﷺ أَنَّ زَيْدَ بْنَ ثَابِتٍ ﷺ حَدَّثَهُ أَنَّهُمْ تَسَحَّرُوا مَعَ النَّبِيِّ ﷺ ثُمَّ قَامُوا إِلَى الصَّلَاةِ قُلْتُ كَمْ بَيْنَهُمَا قَالَ قَدْرُ خَمْسِينَ أَوْ سِتِّينَ يَعْنِي آيَة رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ٥٤١**

நிச்சயமாக அவர்கள் (-நபித்தோழர்கள்) நபி ﷺ அவர்களுடன் ஸஹ்ர் உணவு சாப்பிட்டார்கள். பிறகு தொழுகைக்கு தயாரானார்கள் என்று





சைது இப்னு ஸாபித் ﷺ கூறினார். நான் கேட்டேன்: இரண்டிற்கும் இடையில் எவ்வளவு நேரம் இருந்தது? அவர் கூறினார்: ஐம்பது அல்லது அறுபது வசனங்கள் (ஓதுகின்ற) அளவு.[1]

وَعَنْ أَنَسِ بْنِ مَالِكٍ رضي الله عنه أَنَّ نَبِيَّ اللهِ ﷺ وَزَيْدَ بْنَ ثَابِتٍ تَسَحَّرَا فَلَمَّا فَرَغَا مِنْ سَحُورِهِمَا قَامَ نَبِيُّ اللهِ ﷺ إِلَى الصَّلَاةِ فَصَلَّى قُلْنَا لِأَنَسٍ رضي الله عنه كَمْ كَانَ بَيْنَ فَرَاغِهِمَا مِنْ سَحُورِهِمَا وَدُخُولِهِمَا فِي الصَّلَاةِ قَالَ قَدْرُ مَا يَقْرَأُ الرَّجُلُ خَمْسِينَ آيَةً رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ٥٤٢.

நபி ﷺ அவர்களும் சைது இப்னு ஸாபித் ﷺ அவர்களும் ஸஹ்ர் உணவு சாப்பிட்டார்கள். ஸஹ்ர் உணவை முடித்தவுடன் நபி ﷺ தொழுகைக்கு தயாராகி, தொழுதார்கள். அவர்கள் இருவரும் ஸஹ்ர் உணவு முடித்ததற்கும் தொழுகையை ஆரம்பித்ததற்கும் எவ்வளவு நேரம் இருந்தது என்று நாங்கள் கேட்டோம். அனஸ் ﷺ கூறினார்கள்: ஒருவர் ஐம்பது வசனங்கள் ஓதுகின்ற அளவு நேரம் இருந்தது.[2]

ஸஹ்ர் உணவை தாமதப்படுத்தி உண்பது நோன்பாளிக்கு நல்லதாகும். இது அவருக்கு நோன்பு வைப்பதை இலகுவாக்குவதுடன், ஃபஜ்ரு தொழுகை தவறிவிடுவதிலிருந்து பாதுகாக்கும்.

ஒரு முறை ஸஹ்ர் செய்து நிய்யத் வைத்த பிறகும் 'ஃபஜ்ர்' அதிகாலை உதயமாகின்றவரை அவர் சாப்பிடலாம், குடிக்கலாம்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَكُلُوا وَاشْرَبُوا حَتَّى يَتَبَيَّنَ لَكُمُ الْخَيْطُ الْأَبْيَضُ مِنَ الْخَيْطِ الْأَسْوَدِ مِنَ الْفَجْرِ ثُمَّ أَتِمُّوا الصِّيَامَ إِلَى اللَّيْلِ.

ஆகவே, இருள் நீங்கி விடியற்காலை (-ஃபஜ்ர்) ஆகிவிட்டது என்று உங்ளுக்குத் தெளிவாகும் வரையில் (நோன்பின் இரவு காலங்களில்

1. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ﷺ, நூல்; புகாரி 541.
2. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ﷺ, நூல்: ஸஹீஹுல் புகாரி 542.





எப்போது வேண்டுமானாலும் தூங்கி எழுந்தும்) நீங்கள் புசியுங்கள்! பருகுங்கள்! (அல்குர்ஆன் 2:187)

ஃபஜ்ர் உதயமாகுவது: ஒன்று அதை வானக்கோடியில் பார்த்து முடிவு செய்யப்படும். அல்லது அதான் சொல்லப்படுவதைக் கொண்டு, அல்லது அதை அறிவிப்பதற்காக உள்ள நம்பத்தகுந்த செய்தியை வைத்து முடிவு செய்யப்படும். ஃபஜ்ர் உதயமாகி விட்டது என்று தெரிந்து விட்டால் அதற்குப் பிறகு உண்பது, குடிப்பது கூடாது. உடனே நிறுத்திக்கொள்ள வேண்டும். பிறகு, நோன்பை உள்ளத்தில் நிய்யத் செய்துவிட வேண்டும். நாவினால் நிய்யத்தை மொழிவது 'பித்அத்' -புதுமையான ஒரு காரியமாகும்.

**3) நோன்பு திறப்பது.**

சூரியன் மறைந்தவுடன் நோன்பாளி நோன்பை முடித்துவிட வேண்டும். அந்த நோன்பை தொடரக்கூடாது. இதுதான் சுன்னாவாகும்.

**عن عُمَرَ بْنِ الْخَطَّابِ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ إِذَا أَقْبَلَ اللَّيْلُ مِنْ هَا هُنَا وَأَدْبَرَ النَّهَارُ مِنْ هَا هُنَا وَغَرَبَتْ الشَّمْسُ فَقَدْ أَفْطَرَ الصَّائِمُ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٨١٨.**

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: இரவு இங்கிருந்து வந்துவிட்டால், பகல் இங்கிருந்து சென்றுவிட்டால், சூரியன் மறைந்து விட்டால் நோன்பாளி நோன்பு திறந்துவிடுவார்.[1]

**4). சூரியன் மறைந்தது தெரிந்த உடன் நோன்பு திறந்துவிட வேண்டும்.** தாமதப்படுத்தக் கூடாது. நேரம் வந்தவுடன் நோன்பு திறப்பதில் தீவிரம் காட்ட வேண்டும்.

**عَنْ سَهْلِ بْنِ سَعْدٍ ﵁ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ لَا يَزَالُ النَّاسُ بِخَيْرٍ مَا عَجَّلُوا الْفِطْرَ رَوَاهُ مُسْلِمٌ بِرَقْمِ ١٨٣٨.**

1. அறிவிப்பாளர்: உமர் இப்னுல் கத்தாப் ﵁, நூல்: ஸஹீஹுல் புகாரி 1818.





ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: மக்கள் நோன்பு திறப்பதை தீவிரப்படுத்துகின்ற வரை நன்மையில் இருப்பார்கள்.[1]

தீவிரப்படுத்துவது என்றால் பகல் மேற்கை நோக்கி சென்று, இரவு கிழக்கில் உதிப்பது தெரிந்தவுடன், சூரியன் மறைந்தவுடன் நோன்பாளி நோன்பை திறந்துவிட வேண்டும். இன்னும் இருட்டட்டும் என்று எதிர்பார்க்கக்கூடாது.

**وعَنْ أَبِي هُرَيْرَةَ رضي الله عنه عَنِ النَّبِيِّ ﷺ قَالَ لَا يَزَالُ الدِّينُ ظَاهِرًا مَا عَجَّلَ النَّاسُ الْفِطْرَ لِأَنَّ الْيَهُودَ وَالنَّصَارَى يُؤَخِّرُونَ رَوَاهُ أَبُو دَاوُدَ بِرَقْمِ ٢٠٠٦.**

நபி ﷺ கூறினார்கள்: மக்கள் நோன்பு திறப்பதை தீவிரப்படுத்துகின்ற வரை மார்க்கம் ஓங்கி இருக்கும். ஏனெனில், யூதர்களும் கிறிஸ்தவர்களும் (அதை) தாமதப்படுத்துகின்றார்கள்.[2]

**وعَنِ ابْنِ عَبَّاسٍ رضي الله عنهما عَنِ النَّبِيِّ ﷺ قَالَ إِنَّا مَعَاشِرَ الأَنْبِيَاءِ أُمِرْنَا أَنْ نُعَجِّلَ الإِفْطَارَ وَأَنْ نُؤَخِّرَ السَّحُورَ وَأَنْ نَضْرِبَ بِأَيْمَانِنَا عَلَى شمائِلِنا رَوَاهُ الطبراني في المعجم الكبير برقم ١٠٦٩٣**

நபி ﷺ கூறினார்கள்: நாங்கள் நபிமார்களின் சமூகமாகும். நோன்பு திறப்பதை தீவிரப்படுத்த வேண்டும், ஸஹ்ர் உணவை தாமதப்படுத்த வேண்டும், (தொழுகையில்) இடது கைக்கு மேல் வலது கையை வைக்க வேண்டும் என்று எங்களுக்கு பணிக்கப்பட்டுள்ளது.[3]

**وَعَنْ أَبِي هُرَيْرَةَ عَنْ رَسُولِ اللهِ ﷺ قَالَ يَقُولُ اللهُ عَزَّ وَجَلَّ إِنَّ أَحَبَّ عِبَادِي إِلَيَّ أَعْجَلُهُمْ فِطْرًا رَوَاهُ أَحْمَدُ بِرَقْمِ ٦٩٤٣**

---

1. அறிவிப்பாளர்: சஹ்ல் இப்னு சஃது رضي الله عنه, நூல்: ஸஹீஹ் முஸ்லிம் 1838.
2. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா رضي الله عنه, நூல்: சுனன் அபூ தாவூத் 2006.
3. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் رضي الله عنهما, நூல்: அல்முஜம் அல்கபீர் - தப்ரானி 10693.





கண்ணியமிகுந்த, கம்பீரத்திற்குரிய அல்லாஹ் கூறியதாக ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: நிச்சயமாக என் அடியார்களில் எனக்கு மிக விருப்பமானவர்கள் அவர்களில் நோன்பு திறப்பதில் விரைவானவர்கள் (விரைந்து நோன்பு திறப்பவர்கள்)தான்.[1]

**5). நோன்பு திறக்கும் போது கனிந்த ஈரமான பேரீத்தம் பழங்களை முதலில் உண்பது சுன்னாவாகும்.** அது கிடைக்கவில்லை என்றால் முற்றிலும் பழுத்துவிட்ட பேரீத்தம் பழங்கள். அதுவும் இல்லை என்றால் தண்ணீரைக் கொண்டு நோன்பு திறப்பது சுன்னாவாகும்.

**عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ ﷺ قَالَ كَانَ النَّبِيُّ ﷺ يُفْطِرُ قَبْلَ أَنْ يُصَلِّيَ عَلَى رُطَبَاتٍ فَإِنْ لَمْ تَكُنْ رُطَبَاتٌ فَتُمَيْرَاتٌ فَإِنْ لَمْ تَكُنْ تُمَيْرَاتٌ حَسَا حَسَوَاتٍ مِنْ مَاءٍ رَوَاهُ التِّرْمِذِيُّ بِرَقْمِ ٦٣٢**

நபி ﷺ அவர்கள் தொழுவதற்கு முன்பாக கனிந்த, ஈரமான சில பேரீத்தம் பழங்களைக் கொண்டு நோன்பு திறப்பார்கள். கனிந்த பழங்கள் இல்லையென்றால், முற்றிலும் பழுத்துவிட்ட பேரீத்தம் பழங்கள். அதுவும் இல்லையென்றால் சில மிடறு தண்ணீரை அள்ளிக்குடிப்பார்கள்.[2]

மேற்கூறப்பட்டவற்றில் எதுவும் கிடைக்கவில்லை என்றால் ஹலாலான உணவில் அல்லது பானத்தில் எது கிடைக்கிறதோ அதை வைத்து நோன்பு திறந்து கொள்ள வேண்டும். எதுவுமே கிடைக்கவில்லை என்றால் நோன்பு திறந்துவிட்டதாக மனதில் நிய்யத் செய்துவிட வேண்டும்.

**6) நோன்பு வைத்திருக்கும்போதும் நோன்பு திறக்கும்போதும் அதிகம் துஆக்கள் கேட்க வேண்டும்.** நோன்பாளியின் துஆ அவர் நோன்பு திறக்கின்ற வரையும் அவர் நோன்பு திறக்கும்போதும் மறுக்கப்படாது.

---

1. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﷺ, நூல்: முஸ்னது அஹ்மது 6943.
2. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ﷺ, நூல்: ஜாமிவுத் திர்மிதி 632.



عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ ثَلَاثَةٌ لَا تُرَدُّ دَعْوَتُهُمْ الْإِمَامُ الْعَادِلُ وَالصَّائِمُ حَتَّى يُفْطِرَ وَدَعْوَةُ الْمَظْلُومِ يَرْفَعُهَا اللهُ دُونَ الْغَمَامِ يَوْمَ الْقِيَامَةِ وَتُفْتَحُ لَهَا أَبْوَابُ السَّمَاءِ وَيَقُولُ بِعِزَّتِي لَأَنْصُرَنَّكَ وَلَوْ بَعْدَ حِينٍ رَوَاهُ ابْنُ مِاجَةَ بِرَقْمِ ١٧٤٢

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: மூன்று நபர்களின் துஆ மறுக்கப்படாது. நீதமான மன்னர். நோன்பாளி நோன்பு திறக்கின்றவரை. அநீதி இழைக்கப்பட்டவரின் துஆ. அல்லாஹ் அதை மேகத்திற்கு அருகில் உயர்த்துகின்றான். அந்த துஆவிற்காக வானத்தின் வாசல்கள் திறக்கப்படுகின்றன. என் கண்ணியத்தின் மீது ஆணையாக, கொஞ்சம் காலம் கழித்தாவது நிச்சயமாக நான் உனக்கு உதவி செய்வேன் என்று அல்லாஹ் கூறுகின்றான்.[1]

**7) நோன்பு திறந்தவுடன் பின்வரும் துஆவை ஓதுவது.**

وعن عبد الله بن عمر ﵄ قال كَانَ رَسُولُ اللهِ ﷺ إِذَا أَفْطَرَ قَالَ ذَهَبَ الظَّمَأُ وَابْتَلَّتْ الْعُرُوقُ وَثَبَتَ الْأَجْرُ إِنْ شَاءَ اللهُ رَوَاهُ أَبُو دَاوُدَ بِرَقْمِ ٢٠١٠

நபி ﷺ அவர்கள் நோன்பு திறந்து விட்டால், கூறுவார்கள்: தாகம் தீர்ந்தது! நரம்புகள் நனைந்தன! இன் ஷா அல்லாஹ் கூலி உறுதியாக கிடைக்கும்.[2]

**8) நோன்பாளிக்கு நோன்பு திறக்க உணவளிப்பது.** இதற்கு அதிகமான நன்மைகள் உள்ளன. நோன்பாளி வசதியுள்ளவராக இருந்தாலும் அவர் நோன்பு திறக்க அவருக்கு உணவளிப்பதும் நன்மைதான். உணவளிப்பதில் பேரீத்தம் பழம், தண்ணீர், பால் இவ்வாறு எது தன்னால் முடியுமோ அதைக்கொண்டு நோன்பு திறக்க வைப்பது போதுமானதாகும்.

---

1. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: சுனன் இப்னு மாஜா 1742.
2. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு உமர் ﵄, நூல்: அபூதாவூத் 2010.





عَنْ زَيْدِ بْنِ خَالِدٍ الْجُهَنِيِّ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ مَنْ فَطَّرَ صَائِمًا كَانَ لَهُ مِثْلُ أَجْرِهِمْ مِنْ غَيْرِ أَنْ يَنْقُصَ مِنْ أُجُورِهِمْ شَيْئًا. رَوَاهُ ابن ماجة ١٧٣٦

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: யார் ஒரு நோன்பாளிக்கு நோன்பு திறக்க ஏற்பாடு செய்வாரோ அவருக்கு (நோன்பு வைத்த) அவர்களின் நன்மையைப் போன்று கிடைக்கும். (நோன்பு வைத்த) அவர்களின் நன்மைகளில் எதுவும் குறைக்கப்படாது.[1]

**9) நோன்பு திறக்காமல், ஸஹ்ர் வரை நோன்பை தொடராமல் இருப்பது. இதுதான் ஏற்றமானதும், சுன்னாவும் ஆகும்.**

இஃப்தாரின்றி நோன்பைத் தொடரவேண்டும் என்று ஒருவர் விரும்பினால் அவர் ஸஹ்ர் வரை சாப்பிடாமல் இருக்கலாம். ஆனால், ஸஹ்ர் செய்யாமல் அடுத்த நாள் நோன்பை அப்படியே தொடர்வது கூடாது.

ஒவ்வொரு நோன்பையும் சூரியன் மறைந்தவுடன் திறந்து விடுவதுதான் நபிவழியாகும். அதுதான் மிகச்சிறந்த முறையாகும்.

عَنْ عَبْدِ اللهِ ﵁ أَنَّ النَّبِيَّ ﷺ وَاصَلَ فَوَاصَلَ النَّاسُ فَشَقَّ عَلَيْهِمْ فَنَهَاهُمْ قَالُوا إِنَّكَ تُوَاصِلُ قَالَ لَسْتُ كَهَيْئَتِكُمْ إِنِّي أَظَلُّ أُطْعَمُ وَأُسْقَى رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٧٨٨.

நபி ﷺ அவர்கள் (இஃப்தார் இன்றி) தொடர்ந்து நோன்பு நோற்றார்கள். மக்களும் தொடர்ந்து நோன்பு நோற்றார்கள். அது அவர்களுக்கு மிக சிரமமாக ஆகிவிட்டது. ஆகவே, அவர்களை நபி ﷺ தடுத்தார்கள். நீங்கள் தொடர்ந்து நோன்பு வைக்கின்றீர்களே என்று மக்கள் கேட்டார்கள். நான் உங்கள் (உடல்) அமைப்பைப் போன்று உள்ளவன் இல்லை. நிச்சயமாக எனக்கு உணவளிக்கப்படுகிறது, நீர் புகட்டப்படுகின்றது.[2]

---

1. அறிவிப்பாளர்: சைது இப்னு காலித் அல்ஜுஹ்னி ﵁. நூல்: சுனன் இப்னு மாஜா 1736.
2. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் ﵁, நூல்: ஸஹீஹுல் புகாரி 1788.





وَعَنْ أَبِي سَعِيدٍ ﵁ أَنَّهُ سَمِعَ النَّبِيَّ ﷺ يَقُولُ لَا تُوَاصِلُوا فَأَيُّكُمْ إِذَا أَرَادَ أَنْ يُوَاصِلَ فَلْيُوَاصِلْ حَتَّى السَّحَرِ قَالُوا فَإِنَّكَ تُوَاصِلُ يَا رَسُولَ اللهِ قَالَ إِنِّي لَسْتُ كَهَيْئَتِكُمْ إِنِّي أَبِيتُ لِي مُطْعِمٌ يُطْعِمُنِي وَسَاقٍ يَسْقِينِ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٨٢٧

நபி ﷺ கூறினார்கள்: நீங்கள் (இஃப்தார் செய்யாமல்) தொடர்ந்து நோன்பு இருக்காதீர்கள்! உங்களில் யார் (இஃப்தார் செய்யாமல் நோன்பை) தொடர விரும்புவாரோ அவர் ஸஹ்ர் வரை தொடரவும். (பிறகு, கண்டிப்பாக ஸஹ்ர் சாப்பிடவும்.)

மக்கள் கூறினார்கள்: அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் நோன்பு திறக்காமல் தொடர்கிறீர்களே! நபி ﷺ கூறினார்கள்: நிச்சயமாக நான் உங்கள் (உடல்) அமைப்பை போன்றவன் அல்ல. நிச்சயமாக நான் இரவு கழிக்கின்றேன், எனக்கு உணவளிப்பவன் ஒருவன் இருக்கின்றான். அவன் எனக்கு உணவளிக்கின்றான். நீர் புகட்டுபவன் ஒருவன் இருக்கின்றான். அவன் எனக்கு நீர் புகட்டுகின்றான்.[1]

மேற்கண்ட நபிமொழிகள் எல்லாம், இஃப்தார் இன்றி நோன்பை தொடர்வது வெறுக்கத்தக்க ஒரு செயல் என்பதைத்தான் சுட்டிக் காட்டுகின்றன. ஆகவே, வீண் சிரமம் எடுக்கக்கூடாது.

ஒருநாள் நோன்புடன் அடுத்த நாள் நோன்பையும் சேர்த்து தொடர்வதற்கு 'விஸால்' என்று கூறப்படும். இது வெறுக்கப்பட்ட செயலாகும்.

ஆனால், ஒருவர் இஃப்தார் செய்யாமல் ஸஹ்ர் மட்டும் செய்ய விரும்பினால் அதற்கு அவருக்கு அனுமதியுள்ளது. ஆனால், அது சிறப்பல்ல. ஸஹரில் ஆரம்பித்த நோன்பை சூரியன் மறைந்தவுடன் முடித்துவிடுவதுதான் சிறப்பான செயலாகும்.

1. அறிவிப்பாளர்: அபூ சயீது ﵁, நூல்: ஸஹீஹுல் புகாரி 1827.





**10). குர்ஆன் ஓதுவது, திக்ர் செய்வது, துஆக்கள் கேட்பது, நஃபில் தொழுவது, தர்மங்கள் செய்வது, இன்னும் இதுபோன்ற நல்லமல்களை ஒரு நோன்பாளி முடிந்தளவு அதிகமாக செய்ய வேண்டும்.**

**11). அவ்வாறே ரமழானில் உம்ரா செய்வது சிறப்பான செயலாகும்.**

**12). காலை மாலை திக்ருகளை பேணுதலுடன் நிறைவேற்றுவதிலும்,** சமய சந்தர்ப்பங்களில் ஓத வேண்டிய திக்ருகளை செய்வதிலும் இரவு தொழுகைகளை பேணுவதிலும் துஆக்கள் அதிகம் கேட்பதிலும் தர்மங்களை அதிகப்படுத்துவதிலும் அதிக கவனம் செலுத்த வேண்டும். இன்னும் அதிகமான நன்மைகளை செய்ய வேண்டும்.

**عَنْ ابْنِ عَبَّاسٍ ﵄ قَالَ كَانَ رَسُولُ اللهِ ﷺ أَجْوَدَ النَّاسِ وَكَانَ أَجْوَدُ مَا يَكُونُ فِي رَمَضَانَ حِينَ يَلْقَاهُ جِبْرِيلُ وَكَانَ يَلْقَاهُ فِي كُلِّ لَيْلَةٍ مِنْ رَمَضَانَ فَيُدَارِسُهُ الْقُرْآنَ فَلَرَسُولُ اللهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ أَجْوَدُ بِالْخَيْرِ مِنْ الرِّيحِ الْمُرْسَلَةِ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ٥.**

ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் மக்களில் அதிகம் கொடை கொடுப்பவராக இருந்தார்கள். நபியவர்களை ஜிப்ரீல் ﵇ ரமழானில் சந்திக்கும்போது எப்போதையும் விட மிக அதிகம் கொடை கொடுப்பவர்களாக இருந்தார்கள். ரமழானில் ஒவ்வோர் இரவிலும் நபியவர்களை ஜிப்ரீல் சந்திப்பார்கள். அவர்களுடன் குர்ஆனை ஓதி பரிமாறிக்கொள்வார்கள். அப்போது ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் விரைவாக வீசுகின்ற காற்றை விட வேகமாக செல்வத்தை தர்மம் செய்பவர்களாக இருப்பார்கள்.[1]

**13). நோன்பு வைக்க அல்லாஹ் வாய்ப்பளித்தமைக்கு நன்றி உள்ளவராக இருக்க வேண்டும்.** நோன்பை அல்லாஹ் எளிதாக்கி தந்தமைக்கும் அல்லாஹ்விற்கு நன்றி செலுத்த வேண்டும். ரமழான் மாதத்தை கிடைக்கப் பெற்றதற்கும் அதில் முழுமையாக நோன்பு

1. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﵄, நூல்: ஸஹீஹுல் புகாரி 5.





வைக்க அல்லாஹ் வாய்ப்பளித்ததற்கும் அல்லாஹ்விற்கு அதிகம் நன்றி செலுத்த வேண்டும்.

பலர் ரமழானை அடையாமல் இறந்து விடுகின்றனர். பலர் நோன்பை முழுமையாக்க முடியாமல் பலவீனப்பட்டு விடுகின்றனர். பலர் நோன்பு வைப்பதில் அலட்சியம் செய்கின்றனர்.

நோன்பு நோற்க பாக்கியம் பெற்ற முஸ்லிம் இந்த நற்பேருக்காக அல்லாஹ்வை புகழ்ந்து அவனுக்கு நன்றி செலுத்த வேண்டும். இந்த நோன்பு பாவ மன்னிப்பிற்கும் சொர்க்க பதவிகள் கிடைப்பதற்கும் காரணமான ஒன்றல்லவா!

**14). மிஸ்வாக் செய்ய வேண்டும்.** மிஸ்வாக் செய்வது (-அராக், அல்லது அது போன்ற குச்சியைக் கொண்டு பல் துலக்குவது) எல்லா நேரங்களிலும் நபிவழியாகும். நோன்பு வைத்திருக்கும் போதும், நோன்பில்லாமல் இருக்கும் போதும், நோன்பு நேரத்தில் காலை, பகல், மாலை என எப்போதும் மிஸ்வாக் செய்வது சிறப்பான ஒரு செயலாகும்.

**عَنْ عَائِشَةَ ﵂ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ السِّوَاكُ مَطْهَرَةٌ لِلْفَمِ مَرْضَاةٌ لِلرَّبِّ رَوَاهُ النَّسَائِيُّ بِرَقْمِ ٥**

நபி ﷺ கூறினார்கள்: மிஸ்வாக் செய்வது வாயை சுத்தப்படுத்துகிறது, ரப்பை (-அல்லாஹ்வை) திருப்திபடுத்துகிறது.[1]

**15). உறுப்புகளை ஹராமான செயல்களை விட்டும் கண்டிப்பாக பாதுகாத்து வைக்க வேண்டும்.**

தவறான காட்சிகளை விட்டும் பார்வையை பாதுகாத்து வைத்திருக்க வேண்டும்.

அல்லாஹ்வின் வணக்கத்தை விட்டு தன்னைத் திருப்பிவிடக்கூடிய

1. அறிவிப்பாளர்: ஆயிஷா ﵂, நூல்: சுனன் நசாயி 5.





எல்லா சொல், செயல்களை விட்டும் தன்னை தூய்மையாக வைத்திருக்க வேண்டும்.

இவ்வாறு இருப்பது அல்லாஹ்வை அதிகம் வணங்குவதற்கு உதவியாக இருக்கும். வீணான, தேவையற்ற காரியங்களைவிட்டும் விலகி இருப்பது மன மகிழ்ச்சி, இன்னும் நற்பாக்கியத்தின் காரணங்களில் ஒன்றாகும்.

**16). ஜமாஅத்துடன் தராவீஹ் தொழுகையை நிறைவேற்றுவது சிறப்பாகும்.**

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ مَنْ قَامَ رَمَضَانَ إِيمَانًا وَاحْتِسَابًا غُفِرَ لَهُ مَا تَقَدَّمَ مِنْ ذَنْبِهِ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ٣٦**

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: யார் ரமழானில் (இரவு காலங்களில்) இறை நம்பிக்கையுடனும் நன்மையை ஆதரவு வைப்பதுடனும் நின்று வணங்குவாரோ அவரின் முந்திய பாவங்கள் எல்லாம் மன்னிக்கப்பட்டு விடும்.[1]

**وَعَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ قَالَ كَانَ رَسُولُ اللهِ ﷺ يُرَغِّبُ فِي قِيَامِ رَمَضَانَ مِنْ غَيْرِ أَنْ يَأْمُرَهُمْ فِيهِ بِعَزِيمَةٍ فَيَقُولُ مَنْ قَامَ رَمَضَانَ إِيمَانًا وَاحْتِسَابًا غُفِرَ لَهُ مَا تَقَدَّمَ مِنْ ذَنْبِهِ فَتُوُفِّيَ رَسُولُ اللهِ ﷺ وَالْأَمْرُ عَلَى ذٰلِكَ ثُمَّ كَانَ الْأَمْرُ عَلَى ذٰلِكَ فِي خِلَافَةِ أَبِي بَكْرٍ ﷺ وَصَدْرًا مِنْ خِلَافَةِ عُمَرَ ﷺ عَلَى ذٰلِكَ رَوَاهُ مُسْلِمٌ بِرَقْمِ ١٢٦٧**

ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் ரமழானின் இரவு வணக்கத்திற்கு ஆர்வமூட்டுவார்கள். ஆனால், கட்டளையாக ஏவ மாட்டார்கள். நபி ﷺ கூறுவார்கள்: யார் ரமழானில் இறைநம்பிக்கையுடனும்,

1. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﷺ, நூல்: ஸஹீஹுல் புகாரி 36.





நன்மையின் ஆதரவுடனும் நின்று வணங்குவாரோ அவரின் முந்திய பாவங்கள் அவருக்கு மன்னிக்கப்படும்.

இதே நிலையில் இந்த காரியம் (-இரவுத் தொழுகை) இருக்கின்ற போதுதான் ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் இறந்து விட்டார்கள். பிறகு, அபூபக்ரின் رضي الله عنه ஆட்சி காலத்திலும் உமரின் رضي الله عنه ஆட்சி காலத்தின் ஆரம்பத்திலும் இப்படித்தான் இருந்தது.[1]

17). யாராவது தன்னை திட்டினாலோ அல்லது தன்னிடம் சண்டை செய்தாலோ நிச்சயமாக நான் நோன்பு வைத்திருக்கின்றேன் என்று கூறி விலகி விட வேண்டும்.

**عَن أَبِي هُرَيْرَةَ رضي الله عنه يَقُولُ قَالَ رَسُولُ اللهِ ﷺ قَالَ اللهُ كُلُّ عَمَلِ ابْنِ آدَمَ لَهُ إِلَّا الصِّيَامَ فَإِنَّهُ لِي وَأَنَا أَجْزِي بِهِ وَالصِّيَامُ جُنَّةٌ وَإِذَا كَانَ يَوْمُ صَوْمِ أَحَدِكُمْ فَلَا يَرْفُثْ وَلَا يَصْخَبْ فَإِنْ سَابَّهُ أَحَدٌ أَوْ قَاتَلَهُ فَلْيَقُلْ إِنِّي امْرُؤٌ صَائِمٌ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٧٧١**

அல்லாஹ் கூறுவதாக ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: ஆதமுடைய மகனின் எல்லா அமல்களும் அவனுக்கு உரியதுதான். நோன்பைத் தவிர. நிச்சயமாக அது எனக்காக உள்ளது. நான் அதற்கு நற்கூலி வழங்குவேன். நோன்பு கேடயமாகும். உங்களில் ஒருவர் நோன்பு வைத்த நாளாக இருந்தால் அவர் (மனைவியிடம்) ஆபாசமான பேச்சுக்களை பேச வேண்டாம், இன்னும் அவர் கூச்சலிட வேண்டாம். ஒருவர் அவரை ஏசினாலோ அல்லது அவரிடம் ஒருவர் சண்டை செய்தாலோ நிச்சயமாக, நான் நோன்பாளியாவேன் என்று அவர் சொல்லட்டும்.[2]

---------

1. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா رضي الله عنه, நூல்: ஸஹீஹ் முஸ்லிம் 1267.
2. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா رضي الله عنه, நூல்: ஸஹீஹுல் புகாரி 1771.





# நோன்பில் வெறுக்கப்பட்ட காரியங்கள்

நோன்பு வைத்த நிலையில் எந்த காரியங்களை செய்வது மார்க்கத்தில் வெறுக்கப்பட்டதாக இருக்குமோ அவற்றை இங்கு குறிப்பிடுகிறோம்.

1) ஒரு நோன்பாளி வாய் கொப்பளிக்கும் போதும், மூக்கில் தண்ணீர் செலுத்தி சுத்தம் செய்யும்போதும் அதிகமாக செய்வது. அதாவது வாய்வழியாக தண்ணீர் தொண்டைக்குள் செல்லும் அளவு அண்ணாந்து வாய்கொப்பளிப்பதும், அல்லது மூக்கை சுத்தம் செய்யும்போது அதிகமாக தண்ணீர் செலுத்தி, உறிஞ்சி, தொண்டையில் செல்லும் அளவிற்கு செய்வதும் தவறாகும்.

عَنْ لَقِيطِ بْنِ صَبْرَةَ ﷺ قَالَ قُلْتُ يَا رَسُولَ اللهِ أَخْبِرْنِي عَنِ الْوُضُوءِ قَالَ أَسْبِغْ الْوُضُوءَ وَبَالِغْ فِي الِاسْتِنْشَاقِ إِلَّا أَنْ تَكُونَ صَائِمًا رَوَاهُ ابْنُ مَاجَةَ بِرَقْمِ ٤٠١.

லகீத்து இப்னு ஸப்ரா ﵁ கூறுகிறார்: அல்லாஹ்வின் தூதரே! உளூ செய்வதைப் பற்றி எனக்கு சொல்லுங்கள்! என்று நான் கூறினேன். நபி ﷺ கூறினார்கள்: உளூவை முழுமையாக செய்வீராக. மூக்கில் தண்ணீர் செலுத்தும்போது நன்கு இழுத்து செய்வீராக, ஆனால், நீர் நோன்பாளியாக இருந்தாலே தவிர.[1]

2) மனைவியை முத்தமிட்டால், அல்லது கட்டி அணைத்தால், தொட்டு விளையாடினால், அல்லது இச்சையுடன் பார்த்தால் மனதை கட்டுப்படுத்த முடியாமல் உடலுறவு வரை சென்றுவிடுவோம் என்று ஒருவர் பயந்தால் அவர் நோன்புடைய நிலையில் மனைவியை முத்தமிடுவதும் அணைப்பதும் வெறுக்கப்பட்ட செயலாகும்.

---

1. அறிவிப்பாளர்: லகீத்து இப்னு ஸப்ரா ﵁, நூல்: சுனன் இப்னு மாஜா 401.





யாருக்கு அப்படி பயம் இல்லையோ அவருக்கு இவை மக்ரூஹ் (வெறுக்கப்பட்டதாக) ஆகாது. அல்லாஹ் மிக அறிந்தவன்.

3) சளியை முழுங்குவதும் வெறுக்கப்பட்ட ஒன்றாகும். சளி அருவருப்பானது. இதை விழுங்குவது நோன்பாளி, நோன்பாளி அல்லாதவர் என எல்லோருக்கும் கெடுதி தரக்கூடியதாகும். ஆகவே, நோன்பாளி இதையும் கண்டிப்பாக தவிர்க்க வேண்டும்.

4) அவசியமின்றி உணவை சுவைத்துப் பார்ப்பதும் வெறுக்கப்பட்டதாகும். சமையல்காரருக்கு உணவுகளில் உள்ள உப்பு, காரம், இனிப்பு ஆகியவற்றை சுவைத்து பார்க்க வேண்டிய அவசியம் ஏற்பட்டால் அவர் மிகுந்த கவனத்துடன் சுவைத்துவிட்டு, உடனடியாக அதை துப்பிவிட வேண்டும். ஏதும் தொண்டைக்கு உள்ளே சென்று விடாமல் உஷாராக இருக்க வேண்டும்.

5) எவ்வளவுதான் மென்றாலும் உடையாத, கரைந்து விடாத மிகவும் கட்டியாக இருக்கின்ற பிசின் அல்லது சுவிங்கத்தை மெல்லுவது, அசைபோடுவது வெறுக்கப்பட்டதாகும். இவ்வாறு செய்வதால், வாயில் எச்சில் அதிகமாக ஊறும். தாகத்தை ஏற்படுத்தும். சளியை வெளிப்படுத்தும். சில சமயங்களில் அவற்றிலிருந்து கொஞ் சமாவது வயிற்றுக்குள் சென்று விடலாம். மேலும், மக்களுக்கு முன் நோன்பாளி இப்படி மெல்வது அவர் நோன்பு வைக்கவில்லையோ என்ற தவறான எண்ணத்தை ஏற்படுத்தலாம். ஆகவே, நோன்பாளி இப்படி செய்வது நல்லதல்ல.

அதே நேரத்தில், மெல்லுவதால் கட்டியான பிசின் அல்லது சுவிங்கம் கொஞ்சம் கொஞ்சமாக கரைந்துவிடும் என்று இருந்தால் அத்தகையதை மெல்லுவது ஹராமாகும். ஏனெனில், அந்த பிசின் கரையும்போது வயிற்றுக்குள் சென்றுவிட சாத்தியம் உள்ளது. அதனால் நோன்பு முறிந்துவிடும். நோன்பை முறிப்பதற்கு எது காரணமாக இருக்குமோ அதுவும் ஹராமாகவே இருக்கும். மீறி ஒருவர் இவ்வாறு மென்று, அதனால் வயிற்றுக்குள் அதில் இருந்து ஏதும் சென்றுவிட்டால் நோன்பு முறிந்துவிடும்.





6) இஃப்தார் செய்யாமல், ஸஹ்றும் செய்யாமல் இரண்டு, அல்லது மூன்று நாட்கள் தொடர்ந்து நோன்பு வைப்பது வெறுக்கப்பட்டதாகும்.

ஆனால், இஃப்தார் செய்யாமல் ஸஹ்ர் மட்டும் செய்து நோன்பு வைப்பது கூடும். அதாவது இஃப்தார் உடைய நேரத்தில் நோன்பை முடித்துவிட்டோம் என்று மனதில் நினைத்து செய்துவிட்டு, ஏதும் உண்ணாமல், பருகாமல் இருந்து ஸஹ்ர் நேரம் வந்தவுடன் உண்பது. இது அனுமதிக்கப்பட்டதாக இருந்தாலும் சிறந்த காரியம் அல்ல. மாறாக, ஒவ்வொரு நோன்பையும் சூரியன் மறைந்தவுடன் இஃப்தாரைக் கொண்டு முடித்துவிடுவதுதான் சிறந்த செயலாகும்.

---------



## நோன்பில் ஆகுமாக்கப்பட்டவை

எதை செய்வதால் நன்மை இல்லையோ, விடுவதால் தண்டனை இல்லையோ அதற்கு ஆகுமாக்கப்பட்ட செயல் என்று கூறப்படும்.

நோன்பாளிக்கு கீழ்க்காணுகின்ற விஷயங்கள் ஆகுமாக்கப்பட்டவை ஆகும்.

**1) நோன்பாளி அதிகாலை நேரத்தில் பெருந்தொடக்கு உள்ள நிலையில் இருப்பது.**

عَنْ عَائِشَةَ ﵂ قَالَتْ كَانَ النَّبِيُّ ﷺ يُدْرِكُهُ الْفَجْرُ فِي رَمَضَانَ مِنْ غَيْرِ حُلْمٍ (وَهُوَ جُنُبٌ) فَيَغْتَسِلُ وَيَصُومُ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٧٩٥

ஆயிஷா ﵂ கூறுகிறார்கள்: நபி ﷺ அவர்களுக்கு ரமழான் மாதத்தில் கனவில் ஸ்கலிதம் ஆகாமல், உடலுறவு கொண்டதால் அவர்கள் பெருந்தொடக்கு உள்ளவர்களாக இருக்கின்ற நிலையில் 'ஃபஜ்ர்' -அதிகாலை அவர்களை அடையும். பிறகு, அவர்கள் குளிப்பார்கள். நோன்பை தொடருவார்கள்.[1]

**2). மாதவிடாய் உள்ள பெண், பிரசவ உதிரப்போக்கு உள்ள பெண்** இவர்களின் உதிரம் அதிகாலை உதிப்பதற்கு முன்னர் இரவில் நின்றுவிட்டால் அவர்கள் குளிக்காமல் ஸஹ்ர் செய்து நோன்பை ஆரம்பிக்கலாம். ஆனால், சூரியன் உதிப்பதற்கு முன்னர் குளித்து விட்டு ஃபஜ்ர் தொழுகையை தொழுதுவிட வேண்டும். நேரம் வெளியேறுகின்ற வரை தொழுகையை தள்ளிப்போடுவது கூடாது.[2]

1. அறிவிப்பாளர்: ஆயிஷா ﵂, நூல்: புகாரி 1795.
2. அல்முக்னி - இப்னு குதாமா.





**3). நோன்பு வைத்திருக்கின்ற நிலையில் வாய் கொப்பளிப்பதும், மூக்கில் தண்ணீர் செலுத்துவதும் கூடும். ஆனால், அதிகமாக செய்யக் கூடாது.**

**عَنْ عَاصِمِ بْنِ لَقِيطِ بْنِ صَبْرَةَ عَنْ أَبِيهِ ﷺ قَالَ قُلْتُ يَا رَسُولَ اللهِ أَخْبِرْنِي عَنِ الْوُضُوءِ قَالَ أَسْبِغِ الْوُضُوءَ وَبَالِغْ فِي الِاسْتِنْشَاقِ إِلَّا أَنْ تَكُونَ صَائِمًا رَوَاهُ ابن ماجة ٤٠١.**

அல்லாஹ்வின் தூதரே! ﷺ எனக்கு உளூவைப் பற்றி சொல்லுங்கள்! என்று நான் கேட்டேன். ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: உளூவைப் பூரணமாக செய்! மூக்கில் தண்ணீர் செலுத்தி சுத்தம் செய்யும்போது அதிகமாக செய், நீ நோன்பாளியாக இருந்தாலே தவிர![1]

**4). நோன்பாளி குளிப்பதும் வெயில் அல்லது தாகத்தினால் தலையில் குளிர்ந்த நீரை ஊற்றுவதும் கூடும்.**

நோன்பாளி குளிப்பது பற்றிய பாடத்தில் இமாம் புகாரி ﵀ கூறுகிறார்கள்: இப்னு உமர் ﵄ அவர்கள் தான் நோன்பாளியாக இருக்கும்போது ஒரு துணியை ஈரமாக்கி அதை தன் மீது போட்டுக்கொண்டார்கள். இமாம் ஷஅபி ﵀ அவர்கள் தான் நோன்பாளியாக இருக்கின்றபோது குளிப்பதற்காக குளியல் அறைக்கு சென்றார்கள். ஹசன் பசரி ﵀ கூறுகிறார்கள்: நோன்பாளி வாய் கொப்பளிப்பதிலும் குளுமை அடைவதிலும் குற்றம் இல்லை.

**وَعَنْ بَعْضِ أَصْحَابِ رَسُولِ اللهِ ﷺ لَقَدْ رَأَيْتُ رَسُولَ اللهِ ﷺ بِالْعَرْجِ يَصُبُّ الْمَاءَ عَلَى رَأْسِهِ مِنَ الْعَطَشِ أَوْ مِنَ الْحَرِّ رَوَاهُ مالك في الموطا برقم ٥٧٧**

ரசூலுல்லாஹ் ﷺ அர்ஜ் என்ற இடத்தில், தாகத்தின் காரணமாக அல்லது வெப்பத்தின் காரணமாக தனது தலையில் தண்ணீரை ஊற்றுவதை நான் பார்த்தேன்.[2]

---

1. அறிவிப்பாளர்: லக்கீத் இப்னு ஸப்ரா ﵁, நூல்: இப்னு மாஜா 401.
2. அறிவிப்பாளர்: ஒரு நபித்தோழர் ﵁, நூல்: முவத்தா 577.





**5). தேவையின் போது உணவை சுவைத்துப் பார்ப்பது.**

கொஞ்சம் சுவைத்துப் பார்ப்பதில் தவறு இல்லை என்று இப்னு அப்பாஸ் ﵄ கூறுவதாக இமாம் புகாரி ﵀ அவர்கள் தனது நூலில் குறிப்பிடுகிறார்கள்.

இப்னு அப்பாஸ் ﵄ அவர்களின் கூற்றை இப்னு அபீ ஷைபா ﵀ அவர்கள் இவ்வாறு அறிவிக்கிறார்கள்: சிர்கா, அல்லது வேறு ஓர் உணவை நோன்பாளி சுவைத்துப் பார்ப்பதில் தவறு இல்லை, ஆனால், அது அவரின் தொண்டையில் சென்று விடக்கூடாது.[1]

தேன், நெய், இன்னும் இது போன்றவற்றை நோன்பாளி சுவைத்துப் பார்த்துவிட்டு துப்பிவிடுவது குற்றமில்லை என ஹசன் பசரி ﵀ கருதுவதாக அறிவிக்கப்பட்டுள்ளது.[2]

**6) தடுக்கப்பட்ட பாவத்தில் விழுந்துவிட மாட்டேன் என்று உறுதி இருந்தால் நோன்பாளி தன் மனைவியை முத்தமிடலாம், அணைக்கலாம்.** இது அனுமதிக்கப்பட்டது. ஆனால், இந்த செயல்கள் உடலுறவு வரை சேர்த்துவிடும் என்று பயந்தால் நோன்பாளி இவற்றை செய்யக் கூடாது. இது பற்றிய விளக்கம் முன்னர் சென்றுவிட்டது.

**7). நோன்பாளி நறுமணங்களை நுகர்வது தவறில்லை.** ஆனால், சாம்பிராணி புகை இன்னும் அகர் ஊது புகையை மூக்கில் இழுக்கக் கூடாது. ஏனென்றால், புகை என்பது ஒரு பொருளாக இருக்கின்றது. அதை வாய், அல்லது மூக்கின் வழியாக உள் இழுத்தால் அது வயிற்றுக்குள் சென்றுவிடும்.[3]

**8). நோன்பாளி மறதியாக சாப்பிட்டு விட்டாலோ அல்லது பருகிவிட்டாலோ அவர் மீது குற்றமில்லை.** இது பற்றியும் முன்னர் விளக்கப்பட்டுவிட்டது.

1. நூல்: முஸன்னஃப் இப்னு அபீ ஷைபா, அறிவிப்பு எண்: 9277.
2. நூல்: முஸன்னஃப் இப்னு அபீ ஷைபா, அறிவிப்பு எண்: 9279.
3. அறிஞர் இப்னு தைமிய்யா ﵀ அவர்களின் மஜ்மூவுல் ஃபதாவா.





**9). தனது சுய விருப்பமின்றி நோன்பாளிக்கு ஏற்படுகின்ற சில விஷயங்கள்** உதாரணமாக, தொண்டையில் தண்ணீர் சென்றுவிடுதல், ஈ, கொசு தொண்டைக்குள் சென்றுவிடுதல், வாந்தி வந்துவிடுதல், காயம் ஏற்படுதல், மூக்கில் இருந்து இரத்தம் வருதல், வாய்க்குள் எதிர்பாராவிதமாக குரோசின், பெட்ரோல் சென்றுவிடுதல், இப்படியாக தனது சுய விருப்பமின்றி நடக்கின்ற செயல்களால் நோன்பாளி மீது குற்றமில்லை.[1]

**10) இரத்தப் பரிசோதனை செய்வதும் உடலுக்கு வலிமை ஊட்டாத ஊசிகளை சிகிச்சைக்காக பயன்படுத்துவதும் கூடும்.** தலைக்கு எண்ணெய் தேய்ப்பது, (உடலுக்கு மருந்து பூசுவது) கூடும். ஆனால், ஊசி போடுவதையும் இரத்தப் பரிசோதனை செய்வதையும் இரவில் செய்வது நல்லது.

**عن الْحَسَنِ بْنِ عَلِيٍّ ﷺ قال رَسُولُ اللَّهِ ﷺ دَعْ مَا يَرِيبُكَ إِلَى مَا لَا يَرِيبُكَ رَوَاهُ الترمدى برقم ٢٤٤٢**

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: உமக்கு சந்தேகம் தருவதை விட்டுவிட்டு உமக்கு சந்தேகம் தராத ஒன்றுக்கு வந்துவிடு![2]

**عن النُّعْمَانَ بْنَ بَشِيرٍ ﷺ قال سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ فَمَنْ اتَّقَى الْمُشَبَّهَاتِ اسْتَبْرَأَ لِدِينِهِ وَعِرْضِهِ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ٥٠**

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: யார் சந்தேகத்திற்கு இடமான விஷயங்களை விட்டு விலகி விடுவாரோ அவர் தனது மார்க்கத்தையும் தனது மானத்தையும் தூய்மையாக்கிக் கொள்வார்.[3]

**11). ஆஸ்துமா நோய் உள்ளவர்கள் சுவாசிக்க சிரமப்படும் போது சுவாச சாதனத்தை பயன்படுத்துவது தவறில்லை.**

---

1. அறிஞர் இப்னு பாஸ் ﷺ அவர்களின் நோன்பு இன்னும் ஸகாத்து தொகுப்பு.
2. அறிவிப்பாளர்: ஹசன் இப்னு அலி ﷺ, நூல்: திர்மிதி 2442.
3. அறிவிப்பாளர்: நுஃமான் இப்னு பஷீர் ﷺ, நூல்: புகாரி 50.

**12). பல் துலக்கும்போது டூத் பேஸ்ட் (பற்பசைகளை) பயன்படுத்துவது தவறில்லை.** ஆனால், அது தொண்டைக்குள் சென்றுவிடாமல் கவனமாக இருக்க வேண்டும். இவரின் நாட்டமில்லாமல் வாய்க்குள் சென்று விட்டால் நோன்பு முறிந்து விடாது.[1]

---------

1. அறிஞர் இப்னு பாஸ் ﵀ அவர்களின் ஃபத்வா தொகுப்பு.





# ஸகாத்துல் ஃபித்ர்

**ஸதகதுல் ஃபித்ர்: ஸகாதுல் ஃபித்ர் இரண்டும் ஒன்றுதான். இது, ரமழான் மாதத்தின் இறுதியில் பெருநாள் தொழுகைக்கு முன்பாக ஏழைகளுக்கு கொடுக்கப்படுகின்ற தர்மத்திற்கு சொல்லப்படும்.**

**عَنِ ابْنِ عَبَّاسٍ ﵄ قَالَ فَرَضَ رَسُولُ اللهِ ﷺ زَكَاةَ الْفِطْرِ طُهْرَةً لِلصَّائِمِ مِنَ اللَّغْوِ وَالرَّفَثِ وَطُعْمَةً لِلْمَسَاكِينِ مَنْ أَدَّاهَا قَبْلَ الصَّلَاةِ فَهِيَ زَكَاةٌ مَقْبُولَةٌ وَمَنْ أَدَّاهَا بَعْدَ الصَّلَاةِ فَهِيَ صَدَقَةٌ مِنَ الصَّدَقَاتِ رَوَاهُ الإمام أبو داود رحمه الله برقم ١٦٠٩**

ஸகாத்துல் ஃபித்ரை (-நோன்பை முடிக்கும்போது கொடுக்கப்படும் தர்மத்தை) ரசூலுல்லாஹ் ﷺ கடமையாக்கினார்கள் (நோன்பில் நிகழ்ந்துவிட்ட) வீணான பேச்சுகள் மற்றும் ஆபாசமான வார்த்தைகளில் இருந்து நோன்பாளியை சுத்தப்படுத்துவதற்காகவும் ஏழைகளுக்கு உணவாக இருப்பதற்காகவும். யார் அதை (ஈது -பெருநாள்) தொழுகைக்கு முன்பே நிறைவேற்றுவாரோ அது ஏற்றுக்கொள்ளப்பட்ட ஸகாத் -தர்மமாகும். யார் அதை தொழுகைக்கு பின்னர் நிறைவேற்றுவாரோ அது (பொதுவான) தர்மங்களில் ஒரு தர்மமாகும்.[1]

**சட்டம்:** நபி ﷺ அவர்கள் முஸ்லிம்கள் மீது கடமையாக்கிய ஒரு கடமை.

**நுட்பம்:** பெருநாள் அன்று பிறரிடம் கையேந்தாமல் ஏழைகளை பாதுகாப்பது, நோன்பில் நிகழ்ந்து விட்ட தவறுகளுக்கு பரிகாரமாக

1. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﵄, நூல்: அபூ தாவூது 1609.





அமைவது, ரமழானில் நோன்பு நோற்கவும் நின்று வணங்கவும் அல்லாஹ் அருள் புரிந்ததற்கு நன்றி செலுத்துவது.

**யார் மீது கடமை:** அடிமை, சுதந்திரமானவர், ஆண், பெண், பெரியவர், சிறுவர் என எல்லா முஸ்லிம்கள் மீதும் கடமை.

**எதிலிருந்து தர வேண்டும்:** மனிதர்கள் சாப்பிடக்கூடிய உணவு வகைகள் -பேரீச்சம் பழம், கோதுமை, அரிசி. இவற்றைத்தான் கொடுக்கவேண்டும். இவற்றின் கிரயத்தை ஃபித்ராவாக தரக்கூடாது. அது நபி ﷺ அவர்களின் கட்டளைக்கு மாற்றம் செய்வதாகும்.

**அளவு:** நபி ﷺ அவர்களின் காலத்தில் ஒரு ஸாவு ஃபித்ரா கொடுக்கப்பட்டது. அது இன்றைய காலத்தில் சுமார் மூன்று கிலோ அளவாகும்.

**யார் நிறைவேற்றுவார்:** ஓர் ஆண் தன் சார்பாகவும், தனது பொறுப்பில் உள்ளவர்கள் சார்பாகவும் நிறைவேற்ற வேண்டும். ஒரு நாளின் உணவுத் தேவையை விட அதிகம் உள்ள எல்லோரும் இதை நிறைவேற்ற வேண்டும்.

**நேரம்:** பெருநாளுடைய இரவு சூரியன் மறையும் போது உயிராக இருக்கின்ற அனைவர் மீதும் 'ஃபித்ரா' கடமையாகும். ஒருவர் அந்த நாளின் சூரியன் மறைவதற்கு முன் இறந்து விட்டால் அவர் மீது கடமையல்ல. சூரியன் மறைந்த பின்னர் பிறந்த குழந்தைக்கும் கடமையல்ல. மறைவதற்கு முன்னர் பிறந்த குழந்தைக்கு கொடுக்க வேண்டும்.

**நிறைவேற்ற வேண்டிய நேரம்:** அ) பெருநாள் காலை. இது சிறந்த நேரம். ஆ) பெருநாளுக்கு சில தினங்கள் முன்னர்.

**யாருக்கு கொடுப்பது:** தனது ஊரில் உள்ள அல்லது தான் வசிக்கின்ற ஊரில் உள்ள ஏழைகளுக்கு வழங்க வேண்டும்.

**வாங்கத் தகுதியானவர்கள்:** ஏழைகள், கடன் உள்ளவர்கள்.





ஃபித்ராவை பல ஏழைகளுக்கு பிரித்தும் கொடுக்கலாம். அல்லது பலருடைய ஃபித்ராவை ஒரே ஓர் ஏழைக்கும் கொடுக்கலாம்.[1]

தொடக்கத்திலும் இறுதியிலும் இம்மையிலும் மறுமையிலும் எல்லாப் புகழும் அல்லாஹ்விற்கே உரியது. அல்லாஹ்வே! சுருக்கப்பட்ட இந்த சிறு நூலின் மூலமாக முஃமினான உனது அடியார்களுக்கு நன்மையை அருள்வாயாக! மறுமை நாள் வரை வருகின்ற முஸ்லிம்கள் இதன் மூலம் பலன் பெறும்படி செய்வாயாக! எனக்கும் என் பெற்றோருக்கும் என் ஆசிரியர்களுக்கும் முஃமினான ஆண்களுக்கும், முஃமினான பெண்களுக்கும் பாவமன்னிப்பை வழங்குவாயாக! ஆமீன்.

நபியின் மீதும் அவர்களின் குடும்பத்தார் மற்றும் தோழர்கள் மீதும் ஸலவாத்தும் சலாமும் நிலவட்டுமாக! அகிலங்களின் அதிபதி அல்லாஹ்விற்கே எல்லாப் புகழும்!

---------------

1. இந்த சட்டங்கள் அறிஞர் முஹம்மது இப்னு ஸாலிஹ் உஸைமீன் ﵀ அவர்களின் ரமழான் மஜாலிஸ் என்ற நூலில் இருந்து தொகுக்கப்பட்டவை. மூலத் தொகுப்பு: அழைப்புப் பணி இல்லம், ரப்வா, சவூதி.



# நூல் ஆசிரியர் வாழ்க்கைக் குறிப்பு

அஷ்ஷைகு, முனைவர்

**சயீது இப்னு அலி இப்னு வஹஃப் அல்கஹ்தானி**

சவூதி அரேபியாவில் அப்ஹா நகரத்தின் கிழக்குப் பகுதியிலுள்ள வாதில் அரீன் என்ற கிராமத்தில் 25 ஷவ்வால், ஹிஜ்ரி 1372 அன்று பிறந்தார்.

ஆரம்பக் கல்வியை உள்ளூரிலேயே படித்தார். மேல்நிலைக் கல்வியை ரியாத் நகரில் மலிக் இப்னு அப்துல் அஜீஸ் மேல்நிலைப் பள்ளியில் பயின்றார். பிறகு, அல்இமாம் முஹம்மது இப்னு ஸுஊது இஸ்லாமிய பல்கலைக் கழகத்தில் உஸூலுத்தீன் என்ற பிரிவில் பி.ஏ., இளநிலை பட்டப் படிப்பை முடித்தார். பிறகு, அதே பிரிவில் முதுநிலை பட்டமும் பெற்றார்.

ஹிஜ்ரி 1400 இல் இருந்து 1420 வரை அறிஞர் இப்னு பாஸ் அவர்களின் சிறப்பு மாணவராக இருந்து கல்வி பயின்றார். ஹிஜ்ரி 1419ம் ஆண்டு மேற்கூறப்பட்ட பல்கலைக் கழகத்திலிருந்து முனைவர் (Ph.D) பட்டத்தையும் பெற்றார்கள். அல்குர்ஆன் சம்மந்தமாக மூன்று விதமான அறிவிப்புகளில் 'இஜாஸா' -அனுமதி பெற்றுள்ளார்.

ஆசிரியர் அவர்கள் ஐம்பதுக்கும் மேற்பட்ட சிறிய, பெரிய நூல்களை எழுதி மக்களுக்கு பயனளித்துள்ளார்கள். இவர்களுடைய நூல்களில் ஹிஸ்னுல் முஸ்லிம், அத்துஆ என்ற இரு புத்தகங்களும் மிகவும் பிரபலமானவையாகும். தொடர்ந்து எழுத்துத் துறையிலும் கல்வி போதித்தலிலும் தன்னை அர்ப்பணித்து வந்து இந்த அறிஞர் பிறை 21 முஹர்ரம் 1440 (01-10-2018) அன்று வஃபாத்தானார்கள்.

அல்லாஹ் அன்னாருக்கு அருள் புரிவானாக! சொர்க்கத்தில் அவர்களின் இருப்பிடத்தை ஆக்குவானாக!





# இந்நூலில் குறிப்பிடப்பட்டுள்ள சில அறிஞர்களைப் பற்றிய தகவல்கள்

## ஹஸன் (பஸரி)

இயற்பெயர்: அல்ஹஸன் இப்னு யசார் அல்பஸரி.
பிறப்பு: ஹிஜ்ரி 21, இறப்பு: ஹிஜ்ரி 110,
வாழ்ந்த நகரம்: மதீனாவில் பிறந்து, பஸராவில் வாழ்ந்து அங்கேயே இறப்பெய்தினார்கள்.

## இப்னுல் முபாரக்

இயற்பெயர்: அப்துல்லாஹ் இப்னுல் முபாரக் இப்னு வாழிஹ்.
பிறப்பு: ஹிஜ்ரி 118, இறப்பு: ஹிஜ்ரி 181, வாழ்ந்த நகரம்: குராஸான் பிரேதேசத்தில் மருவு நகரத்தில் பிறந்து, இராக்கின் தெற்கு பகுதியில் அன்பார் தாலுகாவைச் சேர்ந்த ஹீத் என்ற ஊரில் இறப்பெய்தினார்கள்.

## ஷாஃபிஈ

இயற்பெயர்: முஹம்மது இப்னு இத்ரீஸ் அஷ்ஷாஃபிஈ.
பிறப்பு: ஹிஜ்ரி 150, இறப்பு: ஹிஜ்ரி 204, வாழ்ந்த நகரம்: பாலஸ்தீனத்தில் காஸா நகரில் பிறந்து எகிப்திலுள்ள கெய்ரோ நகரில் இறப்பெய்தினார்கள்.

## இஸ்ஹாக் (இப்னு ராஹவைஹி)

இயற்பெயர்: இஸ்ஹாக் இப்னு இப்றாஹீம். இவர் முழர் வமிசத்தைச் சார்ந்தவர். இமாம் புகாரி ரஹ்மதுல்லாஹ் அவர்களின் ஆசிரியர்.
பிறப்பு: ஹிஜ்ரி 161, இறப்பு: ஹிஜ்ரி 238, வாழ்ந்த நகரம்: நைஸாபூரில் பிறந்து, அங்கேயே இறப்பெய்தினார்கள்.

## அஹ்மது

இயற்பெயர்: அஹ்மது இப்னு முஹம்மது இப்னு ஹன்பல் அஷ்ஷைபானி.
பிறப்பு: ஹிஜ்ரி 164, இறப்பு: ஹிஜ்ரி 241, வாழ்ந்த நகரம்: பாக்தாத் நகரத்தில் பிறந்து, அங்கேயே இறப்பெய்தினார்கள்.

## இப்னுல் முன்திர் நைசாபூரி

இயற்பெயர்: முஹம்மது இப்னு இப்றாஹீம் இப்னு அல் முன்திர்.
பிறப்பு: ஹிஜ்ரி 242, இறப்பு: ஹிஜ்ரி 319, வாழ்ந்த நகரம்: நைசாபூர்.

## அல்கத்தாபி

இயற்பெயர்: ஹம்து இப்னு முஹம்மது இப்னு இப்றாஹீம் இப்னு அல்கத்தாப்
பிறப்பு: ரஜப் ஹிஜ்ரி 319, இறப்பு: ரபீவுல் ஆகிர் ஹிஜ்ரி 388 வாழ்ந்த நகரம்: பஸ்த் லஷ்கர் கா (ஆப்கானிஸ்தான்)





## இப்னு ஹஸ்ம்
இயற்பெயர்: அலி இப்னு அஹ்மது இப்னு ஸயீது இப்னு ஹஸ்ம்
பிறப்பு: 30 ரமழான், ஹிஜ்ரி 384, இறப்பு: 28 ஷஃஅபான் ஹிஜ்ரி 456
வாழ்ந்த நகரம்: அந்தலுஸ் (ஸ்பெயின்)

## இப்னு குதாமா
இயற்பெயர்: முவஃப்பக்குத்தீன் அப்துல்லாஹ் இப்னு அஹ்மது இப்னு குதாமா அல்மத்ஸி.

பிறப்பு: ஹிஜ்ரி 541, இறப்பு: 1 ஷவ்வால் ஹிஜ்ரி 620, வாழ்ந்த நகரம்: நாப்லுஸ் (பாலஸ்தீனம்)

## இப்னு தைமிய்யா
இயற்பெயர்: அஹ்மது இப்னு அப்துல் ஹலீம் இப்னு அப்துஸ் ஸலாம் இப்னு தைமிய்யா

பிறப்பு: 10 ரபீஉல் அவ்வல் ஹிஜ்ரி 666, இறப்பு: 20 துல்கஅதா 728.வாழ்ந்த நகரம்: திமிஸ்க் (ஷாம்).

## இப்னுல் கைய்யிம்
இயற்பெயர்: ஷம்சுத்தீன் முஹம்மது இப்னு அபீ பக்ர் இப்னு அய்யூப் இப்னு ஸஅது

பிறப்பு: 7 ஸஃபர் ஹிஜ்ரி 691, இறப்பு: 13 ரஜப் ஹிஜ்ரி 751, வாழ்ந்த நகரம்: திமிஸ்க் (ஷாம்)

## இப்னுல் முஃப்லிஹ்
இயற்பெயர்: புர்ஹானுத்தீன் இப்றாஹீம் இப்னு முஹம்மது இப்னு அப்துல்லாஹ் இப்னு முஹம்மது இப்னு முஃப்லிஹ் அல்மக்தஸி.

பிறப்பு: ஹிஜ்ரி 816, இறப்பு: ஹிஜ்ரி 884, வாழ்ந்த நகரம்: திமிஸ்க் (ஷாம்)

## இப்னு பாஸ்
இயற்பெயர்: அப்துல் அஜீஸ் இப்னு அப்துல்லாஹ் இப்னு அப்துர் ரஹ்மான் இப்னு முஹம்மது இப்னு அப்துல்லாஹ் ஆலு பாஸ்.

பிறப்பு: 12 துல்ஹிஜ்ஜா ஹிஜ்ரி 1330, இறப்பு: 27 முஹர்ரம் ஹிஜ்ரி 1420
வாழ்ந்த நகரம்: ரியாத் (சவூதி அரேபியா)

## அல் உஸைமீன்
இயற்பெயர்: முஹம்மது இப்னு ஸாலிஹ் இப்னு முஹம்மது இப்னு சுலைமான் இப்னு அப்துர் ரஹ்மான் அல் உஸைமீன்.

பிறப்பு: 27 ரமழான் ஹிஜ்ரி 1347, இறப்பு: 15 ஷவ்வால் ஹிஜ்ரி 1421
வாழ்ந்த நகரம்: அல்கஸீம் (சவூதி அரேபியா)





# தாருல் ஹுதாவின் வெளியீடுகள்
## அல்குர்ஆன்

1. அல்குர்ஆன் அரபி (Executive Hardbound, Paper 40gsm, Size 14x21cm)
2. அல்குர்ஆன் அரபி (Executive Hardbound, Paper 60gsm, Size 18x24cm)

## தமிழ் புத்தகங்கள்

1. தொழுகை முறை
2. நோன்பு
3. ஹிஜாப் - முஸ்லிம் மங்கையரின் மேன்மை
4. அஹ்லுஸ் ஸுன்னா வல் ஜமாஆ கொள்கைகள்
5. அழைப்புப்பணி - அழைப்பாளர்
6. திருமண வாழ்த்து, காலை மாலை திக்ருகள், இஸ்திகாரா துஆ
7. ஸகாத் - வழிமுறைகள், சட்டதிட்டங்கள்
8. இறுதிப் பேருரை (முழுத் தொகுப்பு)
9. இஸ்லாமியக் கொள்கை. வினா - விடைகள்
10. தடுக்கப்பட்டவை
11. இறைநெறி கூறும் இயற்கைக் கடமைகள்
12. அல்குர்ஆன் துஆக்கள்
13. குர்ஆன் ஹதீஸ் கூறும் பிரார்த்தனை
14. நம்பிக்கையின் அடிப்படைகள்
15. இல்லங்களை அச்சுறுத்தும் அபாயங்கள்
16. இஸ்லாமிய ஒளியில் குழந்தை வளர்ப்பு
17. மூன்று அடிப்படைகள்
18. அலட்சியமாகக் கருதப்படும் ஆபத்தான குற்றங்கள்
19. தஃலீமுல் குர்ஆன் (தஜ்வீது வழிகாட்டி)
20. அத்தவ்ஹீத்
21. அன்றாடம் கடைப்பிடிக்க 1000 சுன்னத்துகள்
22. வெற்றிக்கு வழி
23. அழைப்புப் பணி கேள்வி-பதில்
24. உம்ரா வழிகாட்டி (ஆர்ட் பேப்பர் 18x12 cm)
25. அழகிய துஆக்கள் மற்றும் ருக்யாக்கள் (10.5x14 cm)
26. முன்மாதிரி முஸ்லிம் குடும்பம்
27. இயற்கை மதம்
28. ஹிஸ்னுல் முஸ்லிம் (மஸ்னூன் துஆக்கள்)
29. இஸ்லாமின் இறைக்கோட்பாடு
30. மீளாப்பயணம் (ஜனாஸாவின் சட்டங்கள்)





31. இப்னு தைமிய்யா வாழ்க்கை வரலாறு
32. முன்மாதிரி முஸ்லிம்
33. ஹிஸ்னுல் முஸ்லிம் (21x14 cm)
34. ஹஜ். உம்ரா வழிகாட்டி
35. அழகிய துஆக்கள் மற்றும் ருக்யாக்கள் (21x14 cm Single Colour)
36. தப்சீர் முதல் ஜுஸ்வு
37. முன்மாதிரி முஸ்லிம் பெண்மணி
38. அர்ரஹீக் அல்மக்தூம் (18x24 cm)
39. அழகிய துஆக்கள் மற்றும் ருக்யாக்கள் (14x21 cm Full Colour)
40. இறைமார்க்கம் இறைவேதம் ஓர் அறிமுகம்
41. இஸ்லாம் நீங்கள் அறியவேண்டிய மார்க்கம்
42. சான்றோர்கள் பாடசாலை (பாகம் 1)
43. இறைவனுக்கு உருவம் கொடுக்க முடியுமா?
44. கவலைப்படாதே!
45. இயேசுவின் அழைப்பு
46. ஒரு தெய்வமா? பல தெய்வமா?
47. வஸிய்யத்தீ
48. ரஹ்மத்தான ரமழான்
49. இஸ்லாமிய சிறப்பு கல்வி வகுப்பு
50. உலக முடிவு
51. இறைத்தூதரின் தூய வரலாறு
52. அல்குர்ஆன் பாக்கியம் நிறைந்த வேதம்
53. குர்ஆன் சுன்னா ஒளியில் அத்தாஹாரா - தூய்மை
54. குர்ஆன் சுன்னா ஒளியில் தொழுகை
55. தூய திருகலிமா
56. குர்ஆன் சுன்னா ஒளியில் ஸகாத்

## அல்குர்ஆன் தமிழாக்கங்கள்

1. தர்ஜமதுல் குர்ஆன் பி அல்தஃப்பில் பயான் (HB 48 gsm)
2. தர்ஜமதுல் குர்ஆன் பி அல்தஃப்பில் பயான் (HB 60 gsm)
3. புகழ்மிகு குர்ஆன் போற்றத்தகு தமிழாக்கம் (Hard Bound)
4. மகத்துவமிகு குர்ஆன் மாண்புமிகு தமிழாக்கம் (Hard Bound)
5. தெளிவுமிகு குர்ஆன் தெவிட்டாத தமிழாக்கம் (HB 28 gsm)
6. மேன்மைமிகு குர்ஆன் எளிமைமிகு தமிழாக்கம்
7. இறைவேதம் அல்குர்ஆன் தமிழாக்கம் (Soft Bound)
8. சங்கைமிகு குர்ஆன் சிறப்புமிகு தமிழாக்கம் (Zip cover)
9. சங்கைமிகு குர்ஆன் சிறப்புமிகு தமிழாக்கம் (Hard bound)





10. கண்ணியமிகு குர்ஆன் இனிமைமிகு தமிழாக்கம் (Soft Bound)

11. உயர்வுமிகு குர்ஆன் உன்னத தமிழாக்கம் (HB 28 gsm)

12. அல்குர்ஆன் சொல்லுக்குச் சொல் தமிழாக்கம் - பாகம் 1
(அல் பாதிஹா (01) முதல் அத் தவ்பா (9) வரை)

13. அல்குர்ஆன் சொல்லுக்குச் சொல் தமிழாக்கம் - பாகம் 2
(சூரா யூனுஸ் (10) முதல் அல் அன்கபூத் (29) வரை)

14. அல்குர்ஆன் சொல்லுக்குச் சொல் தமிழாக்கம் பாகம் 3
(சூரா அர்ரூம் (30) முதல் அந்நாஸ் (114) வரை)

15. அல்குர்ஆன் சொல்லுக்குச் சொல் தமிழாக்கம் (அம்ம ஜுஸ்வு)

## ENGLISH BOOKS

1. The Ideal Husband & The Ideal Wife
2. 33 Ways Developing Inner Fear
3. 40 Guidelines & Dangers That Threaten
4. Situations & Questions - Answers
5. Prohibited & Problems And Solutions
6. Aqeeda Attawheed
7. The True Message of Jesus Christ
8. Fortification of The Muslim
9. Funeral Rites In Islaam
10. Explanation of Aayat Alkursi
11. Gateway To Arabic, Starter Book, (1-5 Parts) each book
12. Search for Happiness
13. What Must Be Known About Islaam?
14. The Sunnah Out Spread Flags of...
15. The Book of Tawheed
16. The Ideal Muslim
17. Ideal Muslimah
18. Noble Quran in The English Language
19. Arraheeq Al Makhtoom
20. About Islam
21. Glorious Quran
22. Precious Invocations and Ruqyas (21x14 cm)





23. Dua and Ruqya from Quran and Sunnah (10.5x14 cm)
24. The Quran with English Meanings and Notes
25. English Meanings and Notes of The Quran

## தமிழ் இஸ்லாமிய போஸ்டர்கள்

1. நல்லுறவு மலர
2. அல்குர்ஆன் கூறும் வாழ்வியல் அறிவுரை
3. நாவைப் பேணுக
4. நீங்கள் வணங்கத் தகுதியான இறைவன் யார்?
5. அல்லாஹ் நேசிக்காத கூட்டங்கள்
6. இறுதிப் பேருரை (சிறியது)
7. மீளாப் பயணம்
8. இறுதிப் பேருரை (பெரியது)

## ENGLISH ISLAMIC POSTERS

1. Mind your Tongue
2. Journey of no Return

## ARABIC SCHOOL BOOKS

1. LKG Text Book
2. LKG Work Book
3. UKG Text Book
4. UKG Work Book
5. 1st Text Book
6. 1st Work Book
7. Nafahaatul Eeman
8. Nafahaatul Eeman Work Book
9. 2nd Std Text Book
10. Hand Writing Ruk'a
11. Hand Writing Naskh New
12. Colouring Book
13. Alif Baa Taa

-------------------



